# காரைமடைத் தலபுராணம்

(தலப் பிரபந்தங்களுடன்)

நூலாசிரியர்

சிரவையாதீனம்

**தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்.**

உரையும் பதிப்பும்

சிரவை ஆதீனக் கவிஞர்

**புலவர் ப.வெ. நாகராஜன் பி.லிட்., விஷாரத்.**

வெளியீடு

**சிரவைக் கௌமார சபை**

**2005**

சிரவையாதீன வெளியீட்டு எண் : 256

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | காரைமடைத் தலபுராணம் (தலப்பிரபந்தங்களுடன்) |
| ஆசிரியர் | : | சிரவை தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் |
| உரையும் பதிப்பும் | : | புலவர். ப.வெ. நாகராஜன் |
| முதல் பதிப்பு | : | செப்டம்பர் 2005 |
| விலை | : | ரூ. 70.00 |
| அச்சகம் | : | சிவாசலபதி பிரிண்டர்ஸ் கோவை |

சமயநூல்கள் வெளியிடுவதற்கு நூலாசிரியர்களுக்கு உதவி செய்யும் திருமலை – திருப்பதி தேவஸ்தானத் திட்டத்தின் நிதியுதவி பெற்று இந்நூல் வெளியாகிறது.



நூல் கிடைக்கும் இடம்: தலைவர் : கௌமார மடாலயம்,
சின்னவேடம்பட்டி (அ. நி.)
கோயம்புத்தூர் – 641 006.
தொலைபேசி : 2666370

# நன்றி மலர்



பச்சை மாமலைபோல் மேனிப்
பவளவாய், கமலச் செங்கண்
அச்சுதா, அமரர் ஏறே ! ஆயர்தம்
கொழுந்தே ! என்னும்
இச்சுவை தவிர, யான்போய்
இந்திரலோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகருளானே !

# ஆசியுரை

*சிரவையாதீனகர்த்தர்*
*தவத்திரு. குமரகுருபர சுவாமிகள்*

காரைமடைத் தலம் கொங்கு நாட்டுத் திருவரங்கம். இங்கு அர்ச்சாவதாரம் கொண்டுள்ள இரங்கநாதப்பெருமான் மாசி மாதத்தில் கொள்ளும் பெருந்திருவிழா ஏராளமான பாகவதர்களை ஈர்க்கிறது. இத்தலத்துப் பாகவதர்கள் தாசர்கள் என்னும் சிறப்புப் பெயரால் குறிக்கப்படுகின்றனர். "எந்தை தந்தை தந்தை தம் மூத்தப்பன் ஏழ்படி கால் தொடங்கி வந்து வழிவழி ஆட்செய்கின்றோம்" எனப் பட்டர்பிரான் அருளுவதைப் போலக் காரைமடையின் பரம்பரைத் தாசர்களைக் கொங்கு நாட்டில் ஏராளமாகக் காணலாம். இத்தலத்தின் பந்த சேவையும் தீர்த்த சேவையும் தனிச்சிறப்புடையன.

சிரவையாதீனம் கந்தசாமி சுவாமிகள் சமயபேதம் இல்லாத தூய கவுமார நெறியைத் தம் வாழ்க்கையாலும் நூல்களாலும் உணர்த்தியருளிய ஞானதேசிகர்; பதினையாயிரம் தமிழ்ச் செய்யுள்களுக்குமேல் பொழிந்த கவிமுகில்; அவர் காலத்தில் சிறந்த சமயச் சொற்பொழிவாளராகத் திகழ்ந்தவர். தமிழ், வடமொழி, மலையாளம் ஆகிய மும்மொழிகளில் வல்லவர். இவ்வளவு சிறப்பு வாய்ந்தவரால் இயற்றப் பெற்றுள்ள காரைமடைப் புராணம் தலத்திற் கேற்ற சிறப்புடைய நல்லதொரு பனுவலாக அமைந்துள்ளது.

காரைமடைப் புராணத்தோடு இத்தலத் தொடர்பான தோத்திரப் பிரபந்தங்களையும் உரைகண்டு பதிப்பித்தளித்திருப்பவர் சிரவை யாதீனத் தோடும் கௌமார இலக்கியங்களோடும் நீண்ட தொடர்புடையவர். பல இலக்கியங்களை உரையோடு பதிப்பித்துள்ளவர். யமகம், திரிபு போன்ற கடினமான செய்யுள்களுக்கும் மரபு மாறாமல் உரை வகுக்கும் ஆற்றல் பெற்றவர். அனைத்திற்கும் மேலாக எம் குருநாதர் ஆகிய கஜபூசைச் சுவாமிகளின் பேரன்பிற்குரியவர். ஆம். நம் ஆதீனக்கவிஞர் புலவர் ப.வெ.நா. அவர்கள்தான். சில வருடங்களுக்கு முன்பே அவர் எழுதிய உரை இப்பொழுதுதான் வெளியாகிறது. மூல நூலாகிய புராணமே அறுபது ஆண்டுகள் காத்திருந்தபோது உரை ஓர் ஐந்தாண்டுகள் காத்திருந்தது பெரிதாகாது. பெரும் புலவர் பா.வெ.நா. அவர்களுக்குப் பாராட்டுக்கள்.

அரிய தலபுராணமாகிய இந்நூலைத் தலப்பிரபந்தங்களுடன் சேர்த்து வெளியிடும் இந்த பதிப்புக்குத் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் கணிசமாக நிதி நல்கை வழங்கி உதவினார்கள். சிரவைக் கௌமார சபையின் சார்பில் தேவஸ்தானச் செயலாட்சித் தலைவர் மற்றும் அனைத்து அலுவலர்களுக்கும் நல்வாழ்த்துக்களையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

பெரும் அருளாளர்கள் நம்மீது கொண்ட பெருங்கருணையால் வழங்கியுள்ள தெய்வத்தமிழ்ப் பனுவல்களை அன்பர்கள் அனைவரும் தவறாமல் படிக்க வேண்டும். எல்லோரும் எல்லாப் பெருஞ் செல்வத்துடன் இகபர சௌபாக்கியம் பெற அந்நூல்கள் வழி காட்டும்.

திருவருள் திறத்தால் செகமெலாம் சிறக்க

# அணிந்துரை

டாக்டர் சு. வேங்கடராமன்
பேராசிரியர் துறைத்தலைவர்
இக்கால இலக்கியத்துறை தமிழியல்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை – 625 021

தலபுராணம் தமிழுக்கென அமைந்த தனித்த இலக்கியவகை. ஒரு தலத்தின் பெருமையை மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்று நிலைகளில் சிறப்பித்துப் பாடுவது தலபுராணம். மிகப் பழங்காலந் தொட்டு மக்களிடையே வாய்மொழியாக வழங்கி வந்த கதைகளான தொன்மக் கதைகளைப் புலவர் செவ்வியல் இலக்கியமாகப் பின்னர் பாடுவது தலபுராணம். தலம் பாட்டுடைத் தலைவனாக அமையும். அந்த வகையில் தலபுராணம் காப்பியமாகும். தமிழ் மொழியில் தேவாரப் பாடல்களில் தலபுராணக் கூறுகளை தலபுராண இலக்கிய வகையின் வித்தை முதன் முதலில் பார்க்கிறோம். அந்த வகையிலும் மூவர் தேவாரம் மூல இலக்கியமாக அமைகிறது. தமிழில் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் பெரும்பற்றப்புலியூர் நம்பி (வேம்பத்தூரார்) பாடிய திருவாலவாயுடையார் திருவிளையாடல் புராணம் முதல் தலபுராணமாகத் தோன்றியது. பின்னர் கி.பி. 14ஆம் நூற்றாண்டில் உமாபதி சிவாசாரியார் பாடிய கோயில் புராணம் அதைத் தொடர்ந்து 16,17,18 நூற்றாண்டுகளில் நானூற்றுக்கும் மேற்பட்ட தலபுராணங்கள் தோன்றின. தமிழில் இருந்து வடமொழிக்குச் சென்று தல மகாத்மியம் என்று பெயர் பெற்றது.

அனேகமாகத் தமிழகத்தில் பெரும்பாலான தலங்களுக்குத் தல புராணம் பாடப்பட்டுள்ளது. அந்த வகையில் கொங்கு நாட்டில் கோயம்புத்தூரை அடுத்துள்ள காரமடை அரங்கநாதப் பெருமாள் திருக்கோயில் உள்ள தலத்திற்குக் காரமடைத்தல புராணம் பாடப்பட்டுள்ளது. இந்தத் தல புராணம் 438 பாடல்களால் ஆனது. அத்துடன் காரமடைப் பதிகங்கள் ஆறு அடங்கிய காரமடைப் பிரபந்தத்திரட்டும் இந்நூலில் சேர்த்து அச்சிடப்பட்டுள்ளது. சிரவையாதீனம் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் இதனைப் பாடியுள்ளார். கந்தசாமி சுவாமிகள் பத்மான்மியம் என்ற பெருங்காப்பியத்தைப் பாடி அதன் வழியே தம்முடைய வைணவப் பற்றை வெளிப்படுத்திக் கொண்டவர்.

காரைமடைத் தலபுராணம் அடியவர்களின் வேண்டுகோளுக்காகப் பாடப்பட்டது. இதனைப் பாயிரத்தில் 5ஆம் பாடலில் ‘அடியவர் விருப்பே என்னை இப்பணிக்காள் ஆக்கிய பாக்கியத் தினதே’ என்று கூறுவதால் அறியலாம். கவிஞரின் கவிதை நயம் நூல் முழுவதிலும் பரிமளிக்கிறது. அரங்கநாதனைப் பாடும் பாட்டுப் பரிமளமாக (மணம் வீசுவதாக) இருப்பதில் வியப்பில்லை. அரங்கனுக்குப் பரிமள அரங்கநாதன் என்று ஒரு பெயர் உண்டு.

இத்தலபுராணத்திற்குப் புலவர் ப.வெ. நாகராஜன் உரை எழுதி உள்ளார். அவர் இலக்கண இலக்கியங்களில் ஊறியவர். அது நூலில் நன்கு தெரிகிறது.

புலவர் குறிப்புரையே எழுதியுள்ளார். விரிவுரையாக விளக்க உரை எழுதியிருந்தால் மிகப் பயன் உடையதாக அமைந்திருக்கும். பொதுவாக இதுபோன்ற பழம் மரபு சார்ந்த கலைமாச் செல்வர் தேடிவைத்த பழம்பாடல்களைப் பிரித்துப் படிக்கவும் பொருள்நுட்பம் உணர்ந்து அதில் திளைக்கவும் கூடியவர்கள் அருகி விட்ட காலமிது. அடுத்து வரும் பதிப்பு விளக்கஉரையுடன் அமைந்து வர அரங்கநாதன் அருள் பாலிப்பானாக. அருமையான இப்பணியை மனமாரப் பாராட்டுகிறேன்.

**03.09.05** **சு.வேங்கடராமன்**

# பதிப்புரை

புராணம் என்னும் வடசொல் புரா, நவ என்னும் இரு வேர்ச் சொற்களின் கூட்டாகும். பழமைக்கும் பழமையாய்ப் புதுமைக்கும் புதுமையாய் விளங்குவது என்பது இதன் பொருள். நண்பனொருவன் இனிய அறிவுரைகளால் நன்னெறி காட்டுவதைப் போலப் புராணங்கள் பழங்கதைகளைக் கூறி அறத்தை உணர்த்தும் என்பது வடமொழிக் கோட்பாடு. இக் காரணம் பற்றியே புராணங்கள் சுஹ்ருத் சம்ஹிதை எனப்படுகின்றன. புராணங்கள் பலவகைப்படும். அவற்றுள் இறைவன் திருக்கோவில் கொண்டுள்ள ஒரு தலத்தின் மூர்த்தி, தல, தீர்த்தப் பெருமைகளையும், அங்கு வழிபட்டுப் பேறு பெற்றோரின் வரலாறுகளையும் தொகுத்துக் கூறுவது தலபுராணம் எனப்படும்.

ஒரு தலத்தின் சிறப்பை விதந்து கூறும் தலபுராணக்கூறு பழைய இலக்கியங்களிலேயே இடம் பெற்றிருக்கக் காணலாம். "தொன்மை தானே உரையொடு புணர்ந்த பழமை மேற்றே" என்னும் தொல்காப்பிய நூற்பா – தனிப்பாடலுக்கான இலக்கணம்தான் எனினும் – தலபுராணக் கூறாகவும் அமையலாம். "திறம் வேல் நுதியில் பூத்த கேணி விறல் வேல் வென்றி வேலூர் எய்தின்" (172 – 173) என்னும் சிறுபாணாற்றுப்படை அடிகளும், அதற்கு நச்சினார்க்கினியர், "நல்லியக் கோடன் தன்பகை மிகுதிக்கு அஞ்சி முருகனை வழிபட்ட வழி அவன், 'இக்கேணியில் பூவை வாங்கிப் பகைவரை எறி' என்று கனவிற் கூறி, அதில் பூவைத் தன் வேலாக நிருபித்ததொரு கதை கூறிற்று. இதனானே வேலூர் என்று பெயராயிற்று" என உரை வரைந்திருப்பதும் தலபுராணமே ஆகும்.

மேலும், "கழுநீர் கொண்ட எழுநாள் அந்தி ஆடு துவன்று விழவின் நாடு ஆர்த்தன்றே" என்னும் மதுரைக் காஞ்சி அடிகளும் (427 – 428), அதற்கு நச்சினார்க்கினியர் உரைக்கும், "தீவினையைக் கழுவுவதற்குக் காரணமான தீர்த்த நீரைத் தன்னிடத்தே கொண்ட அந்திக் காலம் வேறு ஓர் இடத்தில் இல்லாத வெற்றி நெருங்கும் திரு நாளினைத் தன்னிடத்தே உடைய ஏழாம் நாள் அந்தியில்" என்னும் உரையும் தீர்த்தச் சிறப்பையும் திருநாட்பெருக்கத்தையும் சுட்டும் தலபுராணக் கூறுகளே ஆகும்.

திருமுருகாற்றுப்படையிலும் பரிபாடலிலும் தலங்கள் பலவற்றின் சிறப்பு விதந்தோதப் படுவதனை அனைவரும் அறிவர். சிலப்பதிகாரத்தில், வேலை எறிந்து கடலை வற்றச் செய்தது, இந்திரன் பூட்டிய ஆரத்தைப் பூண்டது, இந்திரன் முடிமேல் வளையைச் செலுத்தியது, மேகத்தைச் சிறைப்படுத்தியது ஆகிய மதுரைத் தலச் செய்திகள், "வடிவேல் எறிந்த வன்பகை பொறாது", "செங்கண் ஆயிரத்தோன் திறல் விளங்கு ஆரம் பொங்கு ஒளி மார்பில்

நாச்சியார் பதிகம், அடைக்கலப் பதிகம், அரங்கநாதர் திருப்புகழ், குரு இருடிமலை பொன்னூற்றம்மை பதிகம், பொன்னூற்றம்மை திருப்புகழ் ஆகிய தோத்திரப் பிரபந்தங்களையும் இயற்றியுள்ளார். இவை யாவும் மூலம் மட்டுமாக ஒருமுறை பதிப்பாகி உள்ளன. எனினும் ஓரினம் முடித்தலாக இப்பதிப்பில் சேர்க்கப்பட்டுள்ளன. இந்தச் சிற்றிலக்கியங்களுக்கும் குறிப்புரை வரையப்பட்டுள்ளது.

இந்தத் தலபுராணம் ஓரளவு எளிமையான நடையிலேயே அமைந்துள்ளதால் இன்றியமையாத இடங்களில் மட்டும் குறிப்புரை எழுதப்பட்டுள்ளது. அடிமடக்குப் போன்ற கடினமான செய்யுள்களுக்க மட்டுமே சற்று விரிவாக விளக்கம் தரப்பட்டடள்ளது. பொருள் கோளுக்குத் தேவைப்படும் இடங்களில் மட்டுமே இலக்கணக் குறிப்பு கொடுக்கப்பட்டடள்ளது. புத்தகத்தின் பக்கங்கள் பல்கிவிடக் கூடாது என்னும் உணர்வுடனேயே உரை காணப்பெற்றுள்ளது. என்றாலும் செய்யுளின் பொருளை அறிந்து கொள்ள இக்குறிப்புரை போதுமானதென்றே நம்புகிறேன்.

இப்புராண ஆசிரியரின் வரலாறு தனிநூலாக வெளியிடப்பட்டிருந்தலின் இதில் சேர்க்கப்படவில்லை. எனினும் இந்தப் புராணம் தோன்றிய காலத்தை உறுதி செய்ய முடிவதால் அம்முயற்சி மட்டும் மேற்கொள்ளப்பட்டடள்ளது.

தாரணவருடம் தைமாதம் 20 ஆம் தேதி வெள்ளிக்கிழமையன்று (2.2.1945) காரைமடை திரக்கோயிலில் சுவர்க்கவாசல் கோபுர கும்பாபிஷேகம் நடைபெற்றது. அப்போது இச் சுவாமிகள் தம் ஸ்ரீரங்கநாத மாலையை அரங்கேற்றினார். அது பார்த்திவ வருடம் வைகாசி மாதம் (1945 மே மாதம்) தனி நூலாகப் பதிப்பிக்கப்பட்டது. (அப்பதிப்பில் இடம் பெற்றுள்ள காலக் குறிப்பு தவறானது ஆகும் .) அப்பதிப்பிற்குச் சுவாமிகளோடு நெருங்கிய தொடர்வுடைய மாதை முருக தாச ஐயா, கவியரசு கு. நடேச கவுண்டர் ஆகிய இருவரும் சாத்துக்கவி வழங்கியுள்ளனர்; தொ.கி. வேங்கடரமணன் அவர்கள் முகவுரை எழுதியுள்ளார். இந்தத் தலபுராணம் அதற்கு முன்பே அவ்வுரைகளில் இத் தலபுராணம் பற்றிய குறிப்புகள் எதுவுமே இல்லாததால் 1945 மே மாதம் வரை இந்நூல் இயற்றப்படவில்லை என உறுதியாகக் கொள்ளலாம். அழுத்தமான இந்தச் சான்றைக் கொண்டு காரைமடைப்புராணம் 1945 மே மாதத்திற்கும் 1948 ஆம் ஆண்டிற்கும் இடையே இயற்றப்பெற்றது எனத் துணியலாம். ஆக நூல் இயற்றப்பட்டுச் சரியாக அறுபது ஆண்டுகள் கழித்து இப்பொழுது தான் முதல் முறையாக வெளிவருகிறது.

இந்த அரிய வைணவத்தலபுராணம் சிந்தாமணியாய் திருவேங்கடம் மேய எந்தையின் திருவருள் துணையால் வெளிவருகிறது. திருமலை திருப்பதி

தேவஸ்தானத்தார் இப்பதிப்புப் பணிக்குக் கணிசமாக நிதியளித்து உதவியமைக்காகச் செயலாட்சித் தலைவர் அவர்களுக்கும் ஏனைய சான்றோர்களுக்கும் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிரவையாதீனத் தொடர்பான எல்லா இலக்கியங்களும் செம்மையாகப் பதிப்பிக்கப்பட்டு, இலக்கிய ஆய்வாளர்களின் கைகளிலும் மனங்களிலும் இடம் பெற்று, வரலாற்றில் உரிய இடம் பெற வேண்டும் என்றும் பெருநோக்குடன் செயலாற்றி வருகிறார் சிரவையாதீனத்தின் நான்காம் பட்டமாக விளங்கும் தவத்திரு. குமரகுருபர சுவாமிகள் அவர்கள். மூன்றாம் பட்டம் கஜபூசைச் சுந்தர சுவாமிகளின் அருளாட்சிக் காலத்தில் சிரவை யாதீனத்தின் புகழ் சமய உலகத்தில் குன்றின் மேலிட்ட விளக்காக ஒளிர்ந்ததைப் போல இச்சுவாமிகளின் காலத்தில் இலக்கிய உலகில் இணையிலாச் சீர்த்தியைப் பெறும் என்பது உறுதி. இந்தக் காரைமடைத் தலபுராணப் பதிப்புக்கு நான் நன்றி கூறுவது மிகை. இந்த இலக்கியத்தின் உடையவரே அவர். அவர் உடைமை வெளிச்சம் பெறுகிறது. எளியேன் இடையில் ஒரு கருவி மாத்திரமாக நிற்கிறேன். அவ்வளவே.

தன் பல்வேறு பணிகளுக்கிடையே இப்பதிப்புக்கு அணிந்தரை வழங்கியுள்ள மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேராசிரியர் டாக்டர். சு. வேங்கடராமன் அவர்களுக்கு நன்றி.

சிரவையாதீனத் தொடர்பான இலக்கியப் பணிகள் அனைத்திலும் எனக்கு உறுதுணையாக இருந்து உதவிவருகின்ற சிரவையாதீனப் புலவர் திருமிகு. கு. சிவலிங்கம் எம்.ஏ.,பி.எட். அவர்களுக்கும் அவர் இல்லத்தார் அனைவருக்கும் நல்வாழ்த்துக்கள்.

இலக்கியத்தைப் பொறுத்தவரை ஒரு படைப்பாளி அல்லது பதிப்பாசிரியரின் உழைப்பு நன்கு வெளிப்படப் பேருதவி செய்வது அச்சகத்தார் தாம். அம்முறையில் கோவை சிவாசலபதி அச்சகத்தாரின் பணி மிகப் பாராட்டற்பாலது. இந்த நூலைக் கணிப்பொறியில் தட்டச்சு செய்து, திருத்தங்களும் செய்து நிறைவேற்றி, வெளியிட ஐந்து ஆண்டுகள் காத்திருந்த பொறுமைக்குக் கைம்மாறு ஏது? சிவாசலபதி அச்சகத்தைச் சேர்ந்த அன்பர்கள் அனைவருக்கும் என் நன்றி உரியது.

பாரைஎலாம் பாலிக்கும் பைந்துளவோன் பற்றாகும்
காரைமடை மான்மியநற் காப்பியத்தை – வீரைவரு
தண்ணமுதாத் தந்தகந்த சாமிசாமி சாற்றுதமிழ்
மண்ணுலகின் நோய்க்குமருந் து.

ப.வெ. நாகராஜன்



தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்

# பொருளடக்கம்

# காரைமடைத்தலபுராண

# உரைநடைச் சுருக்கம்

நாட்டுப்படல, நகரப்படலங்களில் முறையே கொங்கு நாட்டுச் சிறப்பும், காரைமடை ஊர்ச் சிறப்பும் மொத்தம் 154 செய்யுள்களில் விவரிக்கப்பட்டுள்ளன.

## *3. புராண வரலாற்றுப்படலம்*

நைமிசாரணியத்தின் முனிவர்கள் சூத முனிவரை வணங்கித் தென்னகத்தில் உள்ள வைணவத் தலங்களின் பெருமையைக் கூறியருள வேண்டும் எனக் கேட்டுக் கொண்டனர். அப்பொழுது சூத முனிவர் காரைமடையின் சிறப்புக்களை உரைக்கத் தொடங்கினார்.

## *4. பிரமதேவர் பூசித்த படலம்*

முன்னொரு காலத்தில் பிரமதேவன் தனக்கு மேல் வேறு ஒருவரும் இல்லை எனப் பேரகந்தை கொண்டான். இதனை அறிந்த திருமால் பிருகு முனிவரின் அந்தரங்கத்தில் தூண்டி அவரைப் பிரமனின்சத்திய லோகத்திற்குப் போக வைத்தார். பிருகு பிரமனை வணங்கித் துதித்தார். தன் செருக்கால் பிரமன் முனிவரைக் கவனிக்கவில்லை. அதனால் சினங்கொண்ட பிருகு முனிவர் பிரமன் தன் பதவி,சிறப்பு எல்லாவற்றையும் இழந்து ஒரு மனிதனாகக் கடவன் எனச் சபித்துவிட்டுப் போய்விட்டார்.

உடனே வருந்திய பிரமன் கேட்க ஓர் அசரீரி ஒலித்து. அது, "பிரமனே! கொங்கு நாட்டில் சண்பகவனம் என ஓர் இடம் உள்ளது. அங்கு ஆமை வடிவமுடைய சின்னம் ஒன்று இருக்கிறது. அத்திரு உரு தன்னைத் தரிசித்தவர்களை உய்விக்கும் இயல்புவாய்ந்தது. அதற்குப் புனித நீராட்டி, பூசித்து வழிபட்டால் உன்துன்பம் தொலையும், என்றது. அவ்வாறே பிரமன் சண்பகவனமாகிய காரைமடையை அடைந்து கூர்மக்குறிக்கு வழிபாடியற்றிக் கடுந்தவம் மேற்கொண்டான். திருமால் பிரமனுக்குத் திருவருட்காட்சி நல்கினார். பேருவகை கொண்ட பிரமதேவன் திருமாலை வணங்கிப் பலவாறு துதித்தான்.

திருமால் பிரமனால் தோண்டப்பட்ட திருக்குளத்திற்குப் பிரம தீர்த்தம் என்றும், மூலவருக்கு இரங்கநாதர் என்றும் பெயர் வழங்கும் எனவும், இத்தீர்த்தில் மூழ்கி இறைவனை வழிபடுவோர் எல்லாத் துன்பங்களினின்றும் விடுபட்டு வைகுத்த பதவி பெறுவர் எனவும் உரைத்தருளி மறைந்தார். பிறகு

பிரமன் சில காலம் காரைமடையில் இரங்கநாதப் பெருமானை வழிபட்டுக்கொண்டிருந்துவிட்டுத் தன் சத்திய லோகத்திற்குச் சென்றார்.

### 5. இந்திரன் பூசித்த படலம்.

ஒரு காலத்தில் நாரதர் இந்திரன் சபைக்குச் சென்றார். அப்போது தான் தேவர்கள் போரில் அசுரர்கள் அனைவரையும் கொன்று பெருவெற்றி பெற்று அளவுகடந்த களிப்பில் இருந்தனர். நாரதரைப் பணிவோடு வரவேற்ற இந்திரன் தன் வீரத்தைத் தானே மிகவும் பாராட்டிக் கொண்டான். அதனைக் கேட்ட நாரதர் இத்தனைத் தற்புகழ்ச்சியும் ஆடம்பரமும் துன்பத்தில் முடியுமே என எண்ணியவராக விடை பெற்றுச் சென்று விட்டார்.

இஃது இப்படியிருக்க இந்திரன் பால் தோல்வியுற்றவனாகிய விருடபர்வா என்னும் அசுரர் தலைவன் தன் குலகுருவாகிய சுக்கிரனின் மிருத சன்சீவினி என்னும் மந்திரத்தால் போரில் மாண்ட அசுரர்கள் அனைவரையும் எழுப்பிவிட்டான். எழுந்த அசுரர்கள் மிகுந்த சினத்தோடு தேவலோகத்தின் மீது படையெடுத்து அதனைக் கைப்பற்றிக் கொண்டு விட்டனர்.

அரசை இழந்த இந்திரன் தன் குலகுருவாகிய வியாழனிடம் சென்று முறையிட்டான். குரு தன் மகனாகிய கச்சனை அனுப்பிச் சுக்கிரனிடமிருந்து எப்படியாவது மிருத சஞ்சீவினி மந்திரத்தைக் கற்றுக் கொள்ள வைத்து விடுவது என முடிவு செய்தார். வியாழன் கச்சனை அழைத்து , நில உலகத்திற்குச் சென்று, பெண்ணாசையில் சிக்காமல் கவனமாக இருந்து, மிருத சஞ்சீவினி மந்திரத்தைக் கற்றுக் திரும்புமாறு ஆணையிட்டார்.

சுக்கிரனின் மகளாக தேவயானியை மதனாசுரன் என்னும் அசுரன் தன்னைத் திருமணம் புரியுமாறு வேண்டி வற்புறுத்தச் சினங்கொண்ட அவள் ஒரு கல்லை எடுத்து வீசினாள். அக்கல் சுக்கிரனை நாடிச் சென்று கொண்டிருந்த கச்சனின் மீது பட்டு அவன் மூர்ச்சையானான். இதனைக் கண்ட தேவயானி மனம் பதைத்துக் கச்சனைத் தன்மடியில் படுக்க வைத்து முதலுதவி செய்தாள். மயக்கம் தெளிந்து கச்சன் எழுந்தான். தேவயானிக்குக் கச்சனை மிகவும் பிடித்து விட்டது. தன் காதலை வெளிப்படுத்தினாள். கச்சன் தான் சுக்கிராசாரியாரிடம் மிருத சஞ்சீவினி மந்திரத்தைக் கற்றுக் கொள்ளப் போவதாகவும், பெண்களிடமிருந்து விலகியிருக்கும்படி ஆணையிடப் பட்டிருப்பதாகவும் சொல்லிவிட்டு, சுக்கிராசாரியாரிடம் சென்று முழு உண்மைகளையும் ஒன்றுமே மறைக்காதல் சொன்னான்.

சிறிது தயக்கத்திற்குப்பின் சுக்கிரன் கச்சனுக்கு அந்த மந்திரத்தை உபதேசித்து விட்டார். இதனை அறிந்த விருடபருவா மிக்க சினங்கொண்டு,

கச்சனைக் கொன்று, எரித்து, அச்சாம்பலைக் கள்ளில் கரைத்து சுக்கிராசாரியரையே குடிக்கவைத்துவிட்டான்.

உள்ளே போன கச்சன் மந்திரவலியால் உயிர்பிழைத்து, சுக்கிரனைக் கொன்று வெளியே வந்து அவரையும் எழுப்பிவிட்டான். கச்சன் வானுலகத்திற்குச் செல்ல முனைந்த போது அவன்மீது பெருங்காதல் கொண்டிருந்த தேவயானி என்னைப் புறக்கணித்து விட்டுச் செல்வதால் உனக்கு மந்திரம் பலிக்கா தொழிக எனச் சாபமிட்டாள். அரும்பாடுபட்டுப் பெற்ற மந்திரம் பயனற்றுப்போனதை அறிந்த தேவர்கள் சிவபெருமானைச் சரணடைந்தனர்.

சிவபெருமான் தேவர்களை நோக்கிக் காரைவனம் சென்று திருமாலை குறித்துத் தவம் செய்யுமாறு அறிவுறுத்தினார். வியாழன், இந்திரனை உள்ளிட்ட விண்ணவர் யாவரும் அவ்வாறே செய்தனர். நீண்ட காலத்திற்குப் பிறகு திருமால் தரிசனம் தந்தார். தேவர்கள் வணங்கிக் குறையிரந்தனர். திருமால் பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுக்க வேண்டுமென்றும் அதற்கு அரக்கர்களின் உதவியும் தேவைப்படும் என்றும் அப்பணிக்கு ஆவண செய்யுமாறும் கூறிவிட்டு மறைந்து விட்டார்.

பெருமுயற்சியால் கடல் கடையப்பட்டது. அமுதம் தோன்றியது. அமுதம் தோன்றிய உடனே அசுரர்கள் அதை வலிதில் கைப்பற்றிக் கொண்டனர். தேவர்கள் செய்வதறியாது திகைத்தனர். அப்போது திருமால் மோகினியாக உருவெடுத்து அசுரர்களை மயக்கி அமுத கலசத்தைக் கவர்ந்து தேர்வகளுக்கு அளித்துவிட்டார். பிறகு திருமால் மறைந்து விட்டார். தேவர்கள் அமுதத்தைப் புசித்து மரணமற்றவர் ஆயினர்.

பிறகு இந்திரன் தேவர்களோடு திருமால் தனக்கு அருள்புரிந்த காரைமடைக்கு வந்து ஆலயப்பணி செய்து சிறப்பாக வழிபாடுகளைச் செய்து கொண்டிருந்தான். அப்போது திருமால் மீண்டும் தரிசனம் தந்தார். இந்திரன் பலவாறு துதித்தான். வேண்டும் வரம் யாது எனத் திருமால் கேட்க இந்திரன், இத்தலம் சமிவனமாக (வன்னிக்காடு) ஆக வேண்டும். தங்களுடைய பெயர் சாரங்க பாணி என வழங்கப்பட வேண்டும். தாங்கள் ஆமையின் வடிவத்தோடு இக்கோவிலில் எழுந்தருளவேண்டும். இத்தலத்தில் தங்களை வழிபடுவர்கள் அனைவரும் எல்லாச் சிறப்புக்களையும் பெறவேண்டும். அடியேன் தோண்டிய குளம் சக்கர தீர்த்தம் எனப்பெயர் பெற்ற புனிதநீராக ஆக வேண்டும் என இறைஞ்சினான்.

இவ்வரங்களை எல்லாம் வழங்கியருளிய திருமால், உனக்குச் சொல்ல வேண்டியதொன்று உண்டு. பாற்கடலைக் கடைந்த போது எழுந்த ஆலகாலத்தைத் தன் கழுத்திலே அடக்கிக் கொண்டு அண்ட சராசரத்தை எல்லாம் காத்தருளிய சிவபெருமானுக்கு நன்றிப்பாராட்டு முகமாகவும், அரன் அரியினின்றும் வேறானவர் அல்லர் என்பதனை உலகம் உணருமாறும் செய்ய வேண்டும் எனப் பணித்தார். அவ்வாணைக்கிணங்க இந்திரன் காரைமடையில் சிவாலயம் ஒன்றை ஏற்படுத்தி இறைவனுக்கு நஞ்சுண்டேஸ்வரர் எனத் திருப்பெயர் சூட்டினான். அம்மனின் திருப்பெயர் வேதநாயகி.

திருமாலின் அறிவுரைப்படி சிவாலயம் எடுத்த இந்திரனின் பக்தியை மெச்சிக் சிவபெருமாள் உமாதேவியுடன் காட்சியளித்தார். இந்திரன் பலவாறு தோத்திரம் புரிந்து பணிந்தான். சிவபெருமான் வேண்டிய வரங்களை வழங்கி மறைந்தார். இந்திரன் சிலநாள் காரைமடையில் இரங்கநாதரையும் நஞ்சுண்டேஸ்வரரையும் வழிபட்டுக் கொண்டிருந்துவிட்டுத் தேவலோகம் சென்று அரசாளத் தொடங்கினான்.

## 6. பிரகற்பதி வழிபடு படலம்

தன்மைந்தன் கச்சன் அரும்பாடுபட்டுப் பயின்ற மிருத சஞ்சிவினி மந்திரம் தேவயானியின் சாபத்தால் பயனற்றுப்போனதால் மிகவருந்திய வியாழன் கொங்கு நாட்டில் ஒரு மலையை அடைந்து திருமால் வழிபாட்டில் ஈடுபட்டார். தேவகுருவின் தவத்ததால் களிப்புற்ற திருமால் காட்சி வழங்கினார். பிரகற்கதி பலவாறு துதித்துத் தான் தங்கித் தவம்புரிந்த மலை குருஇருடிமலை எனப்பெயர் பெறவேண்டும் என்றும், அங்கு வற்றாத சுனை ஒன்று உண்டாக வேண்டுமென்றும், திருமகள் தனக்கு மகளாகப் பிறக்கத்/ தான் அவளைப் பெருமாளுக்கு மணம் முடித்துக் கொடுக்க வேண்டுமென்றும் வேண்டினார். இதனைச் செவிமடுத்த திருமால் முன்னிரு வரங்களையும் அப்போதே வழங்கிவிட்டுத்திருமகளை மகளாகப் பெற்று மணம் செய்து தரும் பேற்றைப் பெறுவதற்குக் காரைமடைத் தலத்தில் சென்று தவம்புரியுமாறு கூறி மறைந்தார்.

பிரகற்பதி அவ்வாறே காரைமடையை அடைந்து திருமாலையும், சிவபிரானையும் வழிபட்டுத் தவம்புரியத் தொடங்கினார். சிறிது நாளில் திருமகள் தரிசனம் தந்தாள். வியாழன் பலவாறு தோத்திரம் புரிந்தார். சித்திரைமாதம் துவாதசியாகிய வெள்ளிக்கிழமையன்று,லக்குமி ஒரு சிறு பெண் குழந்தையாக வியாழன்பால் வந்தடைந்தாள். பிரகற்பதி அவளுக்குச் சைலலக்குமி எனப்பெயரிட்டுச் சிறப்போடு வளர்ந்து வந்தார். மங்கைப் பருவம்

அடைந்த சைலலக்குமி தன் தோழியரோடு விளையாடிக் கொண்டிருக்கையில் திருமாலைப் பார்த்துக் காதல் கொண்டாள்.

இதனையறிந்த வியாழன் திருமாலை வேண்டி அவருக்கு மிக்க சிறப்புடன் தன் மகளைத் திருமணம் செய்து கொடுத்தார். தேவர் முதலிய அனைவரும் தரிசித்துப் பேருவகையில் மூழ்கினர்.

திருமால் வியாழனை நோக்கி, நீ தவம் செய்த குன்று பிரகற்பதி மலை எனவழங்கப்பட்டும், திருமகள் அங்கு வளர்ந்ததால் அதற்கு இந்திரரை மலை என மற்றொரு பெயரும் நிலைக்கட்டும் அம்மலையிலிருந்து இலக்குமியை அழைத்துவந்து திருமணம் புரியும் திருவிழா காரைமடையில் ஆண்டுதோறும் சிறப்பாக நடக்கட்டும். அத் திருக்கலியாணத்தைத் தரிசிப்பவர்கள் எல்லோரும் உன்னைப் போலவே பெரும் பேறடைக எனத் திருவாய்மலர்ந்தருளினார். வியாழன் பெருமகிழ்ச்சி கொண்டு வணங்கி விடைபெற்றார்.

## *7. குபரேன் பூசித்த படலம்*

சிவபெருமானின் நட்புக்குரியவனும் வடக்குத் திசைக்குத் தலைவனுமாகிய குபேரனுக்கு நளகூபரன், மணிக்கிரீவன் என இரு மைந்தர்கள் இருந்தனர். ஒரு நாள் இவர்கள் கயிலைமலையில் இருந்த சுனை ஒன்றில் அழகிய அப்சர மடந்தையர்களுடன் நீர்விளையாட்டில் களித்திருந்தனர். கள்வெறியோடு காமமும் கலந்த நிலையில் ஆடையற்றவர்களாக நீரில் இவர்கள் களித்திருக்கும் போது தற்செயலாக நாரதர் அப்பக்கம் வந்தார். நாரதரைக் கண்ட அப்சர மங்கையர் அச்சமும் நாணமும் மிக்கவராய் விரைந்தோடி மறைந்து கொண்டுவிட்டனர்.

நள கூபரன், மணிக்கிரீவன் ஆகிய இருவர் மட்டும் சற்றும் மெய்யுணர்ச்சியின்றி அப்படியே நின்றிருந்தனர். இதனால் மிக்க சினங்கொண்ட நாரதர் இவர்களை நோக்கி பல்லாயிரம் ஆண்டுகள் மரங்களாக இருக்குமாறும் பிறகு கண்ணன் கழலினை பட்டுப் பழைய உருவம் பெறுமாறும் சபித்துவிட்டார்.

நாரதரின் சாபத்தின் படி குபேரனின் மைந்தர்கள் இருவரும் நந்த கோபனின் ஆய்ப்பாடியில் இருமருத மரங்களாக உருப்பெற்று விட்டனர். கண்ணன் தன்னைக் கட்டிப் போட்டிருந்த உரலை இழுத்துக் கொண்டு மருதிடை தவழ்ந்து இவர்களுக்குச் சாபநீக்கம் அருளிய வரலாறு அனைவரும் அறிந்ததே.

தன்மக்கள் சாப நீக்கம் பெற்று வீடு திரும்பியதால் மகிழ்ச்சி அடைந்த குபரேன் முன் வியாழன் வழிபட்ட காரை வனத்திற்குச் செல்ல விழைந்தான். அங்கு சென்று வழிபட்டுப் பேருவகை கொண்டான். அங்கு ஒரு குளம்

அமைத்து. அந்நீரால் திருமாலுக்கு நன்னீராட்டி முறைப்படி பூசித்துத் தவத்திலாழ்ந்தான். சில காலத்தில் திருமால் அருட்சேவை நல்கினார்.

தரிசனம் பெற்ற குபேரன் பலவாறு துதித்தான். திருவுளம் இரங்கிய திருமால் குபேரனின் விருப்பப்படி காரைமடைக்குச் சூரர்வனம் எனவும், இரங்கநாதருக்குச் சக்கரபாணி எனவும், குபேரன் தொட்ட குளம் சங்குதீர்த்தம் எனவும் பெயர் பெறுமாறும், அப்புனலில் படிந்து கோவிலில் வழிபடுவோருக்கு எல்லாநலங்களையும் அருளுவதாகவும் வரமளித்தருளினார்.

பிறகு குபேரன் நஞ்சுண்டேசுவரரையும் வழிபட்டு விடைபெற்றுத் தன் நகரம் திரும்பி இனிது வாழ்த்திருந்தான்.

## *8. கருடாழ்வார் பூசித்த படலம்*

ஒரு காலத்தில் பெரிய திருவடியாகிய கருடனுக்குத் தன்னைவிட வலிமை வாய்ந்தவர்கள் யாருமே இல்லை என்ற செருக்கு எழுதிப்பட்டது. உலகம் முழுவதையும் சுற்றி, அனைவருக்கும், அறை கூவல் விடுத்துத் தன்னோடு போர்புரிய வருமாறு அழைத்தான். ஒரு சிலர் போரிட்டுத் தோற்றனர் என்றாலும் கருடனின் போர்த்தினவு அடங்கவில்லை. ஆயர்பாடியில் இருக்கும் கண்ணன் என்பவனே வலிமைமிக்கவர்களிலெல்லாம் வலியவன் எனக் கேள்விப்பட்டு, அங்கு சென்று கண்ணனைத் தன்னோடு போருக்கு வருமாறு அறைகூவினான்.

கண்ணன் அறை கூவலை ஏற்றுப் போரிடத் தொடங்கினான். கருடனுடைய தோள்களின் தினவு அடங்குமாறு கண்ணன் போரிட்டான். கருடன் கண்ணனின் வலிமையை மனதளவில் நன்றாக உணர்ந்து கொண்டான். கண்ணன் மாயையால் தான் தோற்றுவிடுவதைப் போலக் காட்டிமெலிந்த நேரத்தில் கருடன் அவரைத் தூக்கி வானத்தில் எறிந்தான். எறியப்பட்ட கண்ணன் வான்வழியே வந்து குருடிமலையில் விழுந்தான்.

அப்போது அங்கே இருந்த பிரமன் கண்ணனைத் தாங்கிக் கொண்டு, நீராட்டிப் பழவகைகளைக் கொண்டுவந்து ஊட்டினான். தீவட்டிகளைக் கொண்டு கண்ணன் விழுந்த இடத்தைத் தேடுதல் பந்தச் சேவை என்றும், நீராட்டுதல் தீர்த்தச் சேவை என்றும், பழங்களை நிவேதிப்பதைக் கவளம் என்றும் இந்நிகழ்ச்சி ஆண்டுதோறும் காரைமடையில் நடைபெற்று வருகிறது.

கண்ணனைத் தூக்கி எறிந்த கருடன் கண்ணனின் கால்களில் விழுந்து புலம்பினான். திருமால் அவனைத் தேற்றித் தன் பேரால் குளம் ஒன்று ஏற்படுத்தித் தன்னை முழுக்காட்டிப் பூசை புரியுமாறு பணித்தார். கருடன்

அப்படியே செய்தான். கருடாழ்வார் இறையருள் பெற்றுத் தனதிடம் சென்றடைந்தார்.

## 9. இயமன் வழிபடு படலம்

நளாயினியின் வரலாறு வெளிப்படை. நளாயினி தன் கணவனைக் கூடையில் சுமந்து கொண்டு வேசியெதடுத்தியின் வீட்டிற்குச் சென்று கொண்டிருக்கும் போது மார்பில் ஆணி அறைந்து மரத்தில் தொங்கவிடப்பட்டிருந்த மாண்டவியமுனிவர் மீது கூடை இடித்ததால் அவருக்கு மிகுந்த வலி ஏற்பட்டது. அதனால் தன்னை வருத்திய இப்பெண் சூரியன் உதித்த உடனே கைம்பெண் ஆகட்டும் எனச் சபித்தார். கற்புக்கரசியாகிய நயாயினியோ இனி சூரியனே உதிக்காமல் போகட்டும் என எதிர்சாபம் கொடுத்துவிட்டாள். பத்தினியின் சாபம் பலித்துவிட்டது. சூரியன் உதிக்கவே இல்லை.

கதிரவன் எழாததால் உலகியல் நடவடிக்கைகள் எல்லாம் பாதிக்கப்பட்டன. எனவே பிரமனை உள்ளிட்ட தேவர்கள் நளாயினிடம் வந்து தன் சாபத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ளுமாறு வேண்டினர். அவளோ சூரியன் உதித்தால் தன் கணவர் இறந்துபடுவான் என்பதால் மாண்டவியர் தன் சாபத்தை திரும்பப் பெற்றுக் கொண்டால் தானும் அவ்வாறே செய்வதாகக் கூறினாள். பிரமன் வேண்ட முனிவன் தன் சாபத்தை நீக்கினான், நளாயினியும், சூரியன் உதித்தான்.

மாண்டவியர் குற்றமொன்றும் புரியாத/தான் கழுவில் தொங்கும்படி நேர்ந்ததற்கான பழவினை யாது என அறிந்து கொள்ள விரும்பி இயமனின் உலகத்திற்குச் சென்றார். மாண்டவியர் தம் முற்பிறப்பில் ஒன்பதாம் வயதில் ஓர் எறும்பை ஊசியில் குத்தி வெய்யிலில் மணலில் நட்டு விளையாடியதால் இப்பிறப்பில் கழுவேற நேர்ந்தது என்பதைச் சித்திரகுப்தனால் அறிந்தார்.

இதனைக் கேட்ட மாண்டவியர் இயமனை நோக்கி, பிள்ளைகள் தம் பன்னிரண்டாம் வயதுவரை செய்யும் பாவபுண்ணியங்கள் அவரைச் சாரா அவை அவர்களின் பெற்றோர்களையே சாரும் என்பதே விதி அப்படியிருக்க ஒன்பதாம் வயதில் செய்த பாவத்தின் பயனை எனக்களித்த நீ மண்ணுலகில் சேடியொருத்தியின் மைந்தனாகப் பிறப்பாயாக எனச் சபித்து விட்டார். இந்தச் சாபத்தின் விளைவாகவே இயமன் மகாபாரத காலத்தில் கௌரவர்களின் அரண்மனைத்தாதியின் வயிற்றில் விதுரனாகப் பிறந்தான்.

விதுரனின் வரலாறும் அவன் புனிதத் தலயாத்திரை மேற்கொண்டதும் பாரதமாகிய இதிகாசத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

தலயாத்திரை மேற்கொண்ட விதுரர் காரைமடைக்கு வந்து ஒரு குளம் தொட்டு இரங்கநாதரின் வழிபாடற்றிக் கொண்டு தவநிலையில் இருந்தான். ஒரு நாள் திருமால் சேவை சாதித்தார். கண்ணாரைத் தரிசித்த விதுரர் பலவாறு துதித்தார். திருமால் விதுரனால் உண்டாக்கப் பெற்ற தீர்த்தத்தில் முழுகினோரின் இருபத்தொரு தலைமுறையினருக்கு வைகுந்த பதவி கிடைக்கும் என வரம் அளித்தார். சிலநாள் அங்கு தங்கியிருந்து விட்டு விதுரர் அத்தினாபுரம் திரும்பினார்.

## 10. தொட்டியன் பூசித்த படலம்

ஒரு சமயத்தில் இந்திரன் அரம்பையர்களின் நாட்டியத்தில் மூழ்கி இருக்கும்போது சனகர் முதலிய முனிவர்கள் அவைக்கு வந்தனர். நடனத்தில் லயித்திருந்த இந்திரன் முனிவர்களைக் கவனிக்கவில்லை. அதனால் கோபங்கொண்ட அவர்கள் இந்திரனை நிலஉலகில் ஒரு மானிடனாகவும், காமதேனுவை ஒரு பசுவாகவும், கற்பகத்தை முள்நிறைந்த காரைச் செடியாகவும் ஆகுமாறு சபித்து விட்டனர். பிறகு சாப நீக்கமாக அரங்கநாதன் அருளால் நீங்கள் பழைய நிலை அடைவீர் எனக் கூறிச் சென்றனர்.

இதன் படி இந்திரன் கொங்கு நாட்டில் வெள்ளாதி என்னும் ஊரில் தொட்டியர் குலத்தில் பிறந்து வளர்ந்து வந்தான். காமதேனு ஒரு காராம் பசுவாக அவன்பால் வந்தடைந்தது. கற்பக மரம் காரை செடியாகக் காரைமடையில் மண்டியது. வாலிபப் பருவத்தில் தொட்டியன் ஆடுமாடு மேய்த்துவந்தான். அவனுடைய மந்தையைச் சேர்ந்த காராம்பசு ஒன்று நாள் தோறும் காரைச் செடிப்புதிரில் இருந்த ஒரு கல்லின் மேல் தன் பாலை பொழிந்து வந்தது. தினமும் அப்பசுவிடம் பால் இல்லாமற் போவதை அறிந்த தொட்டியன் அதை மறைந்திருந்து கண்காணித்து அதன் செயலைப் பார்த்துவிட்டான். கோபங்கொண்டு புதரை வாளால் வெட்டினான்.

தொட்டியனின் வாள் வீச்சு அரங்கனின் திருமேனியில்பட்டு உதிரம் பீறியது. பார்த்த தொட்டியன் நடுநடுங்கி மயங்கி விழுந்து விட்டான். திருமால் தோன்றி தொட்டியனைத் தெளிவித்து அவனுடைய பழையவரலாற்றை உணர்த்தினார். தான் இன்னான் என்பதை உணர்ந்து கொண்ட தொட்டியன் மனமுருகித் துதித்தான். பிறகு புதர் இருந்த இடத்தில் அரங்க நாதனுக்குக் கோவில் கட்டி, திருவிழாச் செய்து மகிழ்ந்தபின் இந்திரவடிவம் பெற்றுக் காமதேனு கற்பகத்துடன் வானாடு திரும்பினான். தொட்டியனின் வாள்வடு அரங்கநாதனின் திருமோனியில் இரண்டங்குல நீளத்திற்கு இன்னும் காணப்படுகிறது.

மதுரையை ஆண்டு வந்த திருமலை நாயக்கர் டணாய்க்கன் கோட்டையைச் செப்பனிடும் பணியைப் பார்க்க வந்தபோது அவர்முதுகில் இராசபிளவை தோன்றியது. பல தலைசிறந்த மருத்துவர்கள் பலவிதமாகச்

சிகிச்சையளித்தும் நோய் நீங்கவில்லை. அப்போது அரங்கநாதப் பெருமான் நாயக்கரின் கனவில் காட்சியளித்து, காரைமடையில் உள்ள காரைச் செடியின் இலைகளால் இப்பிளவை நீங்கும் எனக் கூறியருளினார். திருமலை நாயக்கரின் மெய்க்காவலர்கள் காரைமடையிலிருந்து இலைகளைப் பறித்துச் சென்று சிகிச்சை அளித்தனர். மன்னனின் இராசபிளவை மிக விரைவில் நீங்கிற்று.

இதனால் பெரும் மகிழ்ச்சியடைந்த மன்னன் தன் பரிவாரங்களுடன் காரைமடைக் கோவிலுக்கு வந்து பேரன்புடன் வழிபட்டான். அரங்கநாதப் பெருமானுக்கு விதிப்படி பெரிய கோயில் கட்டி நல்லதோர் நாளில் திருக்குடமுழுக்குவிழாவையும் சிறப்புற நிகழ்த்தினான். நாள், சிறப்பு வழிபாடுகள் தடையின்றி நடைபெறத் தக்க ஏற்பாடுகளைச் செய்தான் காரைமடையில் மாசி மாதத்தில் நடைபெறும் திருவிழா மிகச் சிறப்பு வாய்ந்தது.

சங்குளடுத்த கைஅரங்கேசன் காரை மாவனத்தில்
பங்குளடுத்து செய்பணிமெய்ப் பாகவதர் யாவர்களும்
இங்குளடுத்த யாக்கையினுள் ஏற்றுஅவிர் வைகுந்தபதி
அங்குளடுத்து உற்றுஓங்கிய பேர்ஆனந்தம் மிகவாழி.



# காரைமடைத் தலபுராணம்

## பொதுப்பாயிரம்

### நம்மாழ்வார் துதி

(கலித்துறை)

1. இருகை கூப்பிஏத் தெடுக்கும்மெய் அன்பினர் இதயம்
வருகை உற்றிருள் மலம்அற வரம்பில்பேர் இன்பம்
தருகை காட்டிடும் திருஅருட் கட்கடை சான்ற
குருகை யூர்க்குரு பரன்சட கோபன்தாள் குறிப்பாம்.

### திருவரங்கநாதர் துதி

(அறுசீர் விருத்தம்)

2. தேம்பணைமெய்த் தொண்டடியார் அந்தரங்க
நெஞ்சரங்கம் சிறப்ப மேவித்
தீம்பணைபுன் பவத்தரங்கம் ஏழினையும்
மாற்றிடல்போல் செகத்தின் மீதே
பூம்பணைக்கா விரிநாப்பண் ஏழுபிரா
காரம்உறும் பொன்ஆர் கோயில்
பாம்பணைமேல் துயின்றிருமைப் பயன்களும்நல்கு
அரிதிருத்தாள் பணிந்து வாழ்வாம்.

*1. ஏத்தெடுக்கும் – வணங்குகின்ற. இதயம் – மனத்தில். வருகை உற்று – எழுந்தருளி. இருள் மலம் – கரிய நிறம் பெற்ற பாவங்கள், "பாவநிறத்தின் தாருக வர்க்கம்" (திருப்புகழ் 600) வரம்புஇல் – எல்லையற்ற. தருகை காட்டிடும் – வழங்குதலைச் செய்யும். கட்கடை – கடைக்கண் என மாறுக. குருகையூர் – ஆழ்வார் திருநகரி. சடகோபன் – நம்மாழ்வார்.*

*2. தேம் பண் – இனிய இசைப்பாடல்களைப் பாடுவதாகிய. ஐ மெய் தொண்டு – உயர்ந்ததும் உண்மையானதுமாகிய திருத்தொண்டைப் புரிகின்ற. அந்தரங்க – ஏகாந்தமான. நெஞ்சு அரங்கம் – உள்ளம் ஆகிய மேடை. தீம்பு அணை – தீமை பொருந்துகின்ற. புன் – இழிந்த. பவத்தரங்கம் – பிறவிக்கடல், தரங்கம் – அலை, ஆகுபெயராகக் கடலை உணர்த்திற்று. பூம்பணை – அழகிய மருதநிலத்தில், பண்ணை. நாப்பண் – நடுவே. கோயில் – திருவரங்கம், பாம்பு அணை – அரவுப் படுக்கை. இருமை – இம்மை மறுமை. அரி – திருவரங்கநாதர்.*

## இலக்குமி துதி

3. செம்மையுறும் தாமரைகள் எனக்குரித்தாம்
எனல்எவர்க்கும் தெளித்தல் போல
இம்மையுறும் பொன்வாஞ்சை அளித்தனைவோர்
உளத்தினிலும் இசைந்து பின்பார்
அம்மையில்தோய் பேரின்பம் அளித்தருளும்
அம்மை,எம தகத்தின் ஊடே
எம்மையும்வாழ்ந் தெம்மைவிடா இலக்குமித்தாய்
பொன்னடிகள் ஏத்தி வாழ்வாம்.

## காரைமடை இரங்கநாதர் துதி

4. கருக்காரை மடைப்பிறப்பைத் தொண்டர்அடிப்
பொடிமுடிமேல் கமழச் சூடி
உருக்காரை மடைக்குணம்மாற் றிப்பெருகா-
னந்தத்தேன் ஊற்ற வேலைப்
பெருக்காரை மடைஉடைத்து விழிவழிநீர்
வழியஉருப் பிறங்கக் காட்டும்
திருக்காரை மடைஇரங்க நாதன்அடித்
தாமரைகள் சென்னி சேர்ப்பாம்.

*3. எனக்கு உரித்து ஆம் – எந்தனுக்கு உரியது. தெளித்தல் போல – தெரிவிப்பதைப் போன்று. பொன்வாஞ்சை அளித்து – பணத்தாசையைக் கொடுத்து. பின்பு ஆர் – (சாவிற்குப்) பிறகு பொருந்துகின்ற. அம்மையில் – வீட்டுப்பேற்றில். எமது அகத்தின். எம்மையும் – எப்பொழுதும்.*

*4. கார் ஐ கரு – கரிய பாவம் என்னும் நுட்பமான காரணத்தால். மடு ஐ பிறப்பை – நிறைகின்ற நோயாம் பிறவியை. உருக்கார் – அழிக்காதவர்களின். ஐ மடைக்குணம் மாற்றி – தலைமையான அறியாமையைப் போக்கி. பெருகு ஆனந்த. ஊற்ற – ஊற்றினை உடைய. வேலைப்பெருக்கு ஆர் ஐ மடை – கடல்வெள்ளத்தில் பொருந்திய அழகிய மதகு, கடல்மடை திறந்தது போல. உரு – (தம்) திருமேனியை. பிறங்கு – நன்கு விளங்குமாறு. அடிப்பொடி கமழச் சூடி, பிறப்பை உருக்கார் மடைக்குணம் மாற்றி, தேன்ஊற்ற, நீர்வழிய, உரு காட்டும் இரங்கநாதன் அடி சென்னி சேர்ப்பாம் என்பது முடிபு. இச்செய்யுளில் திரிபணி பயின்றது.*

*அலர்மேல் மங்கை துதி*

*(கலித்துறை)*

5. கங்கைத் தாய்வரும் கருணைதோய் திருவடிக் கமலம்
செங்கைத் தாய்வரு டுற்றபூ தேவிஉள் சிறப்ப
அங்கைத் தாய்வளர் காரைமா மடைஅலர் மேலு
மங்கைத் தாய்திரு வடித்துணை வணங்கிவாழ்த்
திடுவாம்.

*சூடிக்கொடுத்த நாச்சியார் துதி*

6. எடுத்த மானிடப் பிறப்பிதை அரிபணிக் கென்றே
விடுத்த கங்கரம் தவிர்பெரும் காதல்உள் விரியத்
தொடுத்த பாத்தொடை யொடுபூத் தொடைகளும் சூடிக்
கொடுத்த நாச்சியார் வதிய, நா அகம்இடம் கொடுப்பாம்.

*கண்ணபிரான் துதி*

*(அறுசீர் விருத்தம்)*

7. புலத்திசையும் புன்போகத் துறக்கநகர்
துறக்கஎணும் புந்தி சான்ற
நலத்திசையும் நிலத்திசைமா னிடப்பிறப்பே
மேல்எனத்தேர் ஞானம் நல்கி,
மலத்திசையும் தடைபோக்கிப் பேரின்பம்
தரக்காரை மடைப்பேர் உண்மைத்
தலத்திசையும் பெருங்கருணைக் கண்ணபிரான்
இருபாதம் தலைக்கொண் டுய்வாம்.

*5. வரும் — தோன்றுகின்ற, கங்கை திருமாலின் திருவடியில் தோன்றியது எனல் மரபு. செங்கைத்து ஆய் — தன் சிவந்த கரங்களில் இருக்கும்படி. வருடுற்ற — நீவிய. பூதேவி — நிலமகள். அங்கு — அவ்விடத்தில். ஐத்தாய் — அழகாக.*

*6. விடுத்து — (மற்ற விருப்பங்களை) விட்டுவிட்டு, மற்றை நம் காமங்கள் மாற்று என்னும் திருப்பாவையை நினைந்து கூறியது. அகங்கரம் தவிர் — அகந்தையை நீக்குவதால் தோன்றும். விரிய — பெருக. பாத்தொடை — பாமாலை. வதிய — வீற்றிருக்க. நா அகம் — நாக்கிலும் உள்ளத்திலும், ஏழன்உருபும் எண்ணும்மையும் விரிக்க.*

*7. புலத்து இசையும் — ஐம்புலன்களில் பொருந்துகின்ற. புன்போக — இழிந்த சுகங்களைத் துய்த்தற்குரிய. துறக்க நகர் — சுவர்க்கத்தையும், உயர்வு சிறப்பும்மை தொக்கது. துறக்க எணும் — நீக்கிவிடக் கருதுகின்ற. புந்தி சான்ற — மெய்யறிவு மிக்க. நிலத்து இசை — மண்ணுலகில் ஏற்படுகின்ற. மலத்து — பாவங்களில். தடை — (இறையருளைப் பெறுவதில்) இடையூறு. உண்மைத் தலத்து — என்றும் அழிவற்ற (சத்திய) திவ்விய தேசத்தில்.*

*சுவர்க்கத்தில் இன்பம் நுகர்வதற்கமைந்த உடலால் நிலையான வீட்டின்பத்தைப் பெற முடியாது. முக்தி வேண்டினோர் கருமபூமி ஆகிய நில உலகில் பிறந்து ஞானபக்தி வைராக்கியங்களாலேயே அதனைப் பெறமுடியும் என்பது தத்துவ நூலார் துணிபு. அதனால்தான் தொண்டரடிப்பொடி ஆழ்வார் "யான்போய் இந்திர லோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன்" என்றார்.*

### நஞ்சுண்டேசுவரர் துதி

8. அஞ்சுண்ட கரத்தனுடன் ஆறுமுகப்
பெருமானை அளித்த சீர்சால்
மஞ்சுண்ட மெய்வேத நாயகியை
இடப்பாகம் வயங்கக் கொண்ட
பிஞ்சுண்ட மதி, அரவம், அரவம்மலி
கங்கைசடை பிறங்கச் சூடும்
நஞ்சுண்ட களக்காரை வணப்பரம -
சிவன்பாதம் நாடி வாழ்வாம்.

### சரசுவதி துதி

9. பரசுவதி யாம்உனையே எனும்அடியார்
உளம்பரம பதம்என் றாக்கும்
அரசுவதி தரும்காரை வணமகிமை
என்உளம்நின் றருளிச் செய்வாய் -
சரசுவதி யே! கலைச்செல் வங்கள்எலாம்
அன்பர்பெறத் தருவாய்! என்றும்
சிரசுவதி தருதிருத்தாள் படிகஅருள்
மேனிபெற்ற தெய்வத் தாயே!

*8. அம் சுண்ட – அழகிய துதிக்கை ஆகிய. மஞ்சு உண்ட மெய் – மேகத்தைப் போன்ற நீலமேனியை உடைய. வேதநாயகி – இத்தலத்தில் உமாதேவியின் திருநாமம். பிஞ்சுண்ட மதி – பிளவுபட்ட சந்திரன், பிறை. அரவம் – பாம்பு. அரவம் மலி – ஒலிமிக்க. கள – கழுத்தினை உடைய, கண்ட.*

*9. பரசுவது – போற்றுவது. யாம் பரசுவது உனையே என மாறுக. பரமபதம் என்று – பரமபதத்தைப் போல. அரசு – தலைவராகிய அரங்கநாதன். வதி தரும் – வசிக்கின்ற. சிரசு வதிதரு – அடியேனின் தலையின்மேல் இருக்கின்ற. படிக – படிகநிறத்தைப் பெற்ற. தாளையும் மேனியையும் பெற்ற தாய் என இயையும்.*

*சரசுவதியே! தருவாய்! தெய்வத்தாயே! என் உளம் நின்று மகிமை அருளிச் செய்வாய் எனப் பொருள் முடிபு காண்க.*

*பரமபதத்தில் எம்பெருமான் நித்யவாசம் செய்வதைப் போன்றே பாகவதர்களின் உள்ளத்திலும் எப்பொழுதும் நிலைத்திருக்கிறார் என்பது குறிப்பு.*

## ஆழ்வார்கள் துதி

*(எண்சீர் விருத்தம்)*

10. அல்லிவளம் பொலிவாவிக் காரைமடைப் பதிக்கண்
அணைஅடியார்க் கானந்த அருள்வழிஉள் காட்டும்
வில்லிவளம் பதித்தவனைத் தொண்டரடிப் பொடியை,
விளங்குபுகழ்த் திருமங்கை வித்தகனைத் தூய
மல்லிவள நாடியைப்பாண் ஆழ்வானை, மூன்றாழ்-
வார்களைத்தன் அனையதிரு மழிசைமுனி வரனைக்
கொல்லிவள நாடனை,மெய் மதுரகவி தனைஆட் -
கொண்டசட கோபனைஉள்(க்) குடிபெறவாழ்த் திடுவாம்.

## கருடாழ்வார் துதி

*(அறுசீர் விருத்தம்)*

11. சுவசம்உறும் செய்கையின்ஆர் உயிர்கள்சுகம்
பெறஊட்டித் துயில வைத்துக்
கவசம்எனக் காவல்புரி கரும்கருணைக்
கடலினுடன் கடும்போர் ஆற்றி
அவசம்உறப் புரிந்துபெரும் தவம்படைத்துப்
பரவசம்உற் றரிகைக் கொள்ளும்
துவசமுடன் வாகனம்ஆம் கருடாழ்வார்
இருபாதம் தொழுது வாழ்வாம்.

*10. வாவி – குளங்களை உடைய. அணை – வந்தடைகின்ற. வில்லி வளம்பதித் தவன் – திருவில்லிப்புத்தூரில் தோன்றிய பெரியாழ்வார். மல்லிவள நாடி – மல்லி வள நாட்டைச் சேர்ந்த ஆண்டாள். மூன்று ஆழ்வார்கள் – பொய்கையார், பூதத்தார், பேயார். தன் அனைய – தனக்குத்தானே நிகர் ஆகிய, இணையற்ற. கொல்லி வள நாடன் – குலசேகர ஆழ்வார். சடகோபன் – நம்மாழ்வார்.*

*11. சுவசம் – சுதந்திரம். செய்கையின் செயலால். அவசம் – மயக்கம். அரி – திருமால். துவசம் – கொடி. கருடாழ்வார் திருமாலோடு போர் செய்த வரலாற்றை இப்புராணத்தின் கருடாழ்வார் பூசித்த சருக்கத்தில் காண்க.*

## ஆஞ்சனேயர் துதி

12. நஞ்சனைய வஞ்சனைமிக் கமையும் இராக்-
கதர்குலத்தை நாசம் ஆக்கும்
மஞ்சனைய மேனியற்கே உரித்தாகி
விளங்கிடுமெய் வாக்கோ டுற்ற
நெஞ்சனைஅன் படியவர்க்கோர் எய்ப்பில்வைப்பாய்
மாதவச்சீர் நிறைவே போன்றெம்
அஞ்சனைதந் தருளும்உயர் சிறியதிரு-
வடிகள்அடிக் கன்பு செய்வாம்.

## தொகையடியார் துதி

13. காவல்புரி தரும்கருணைக் கண்ணனைஉட்-
புறம்காணும் கண்ணர் ஆகி
ஆவல்புரி தரும்மனம்போல் கரணகளே-
பரங்கள்எலாம் அவன்தொண் டுக்கே
மேவல்புரிந் தோங்கருள்வை குந்தஅநு-
பவம்தம்உள மீதில் கண்டே
ஏவல்புரி அன்படியார் தம்மைஎலாம்
அகத்தமைத்தேத் திடுதல் செய்வாம்.

*12. நஞ்சு அனைய – விடம் நிகர்த்த. மஞ்சு அனைய மேனியர் – மேகம் போன்ற நிறம் பொலியும் திருமேனியராகிய இராமபிரான். நெஞ்சன் – உள்ளத்தை உடையவன், குறிப்பு வினையாலணையும் பெயர். எய்ப்பில் வைப்பு – எப்பொழுதுமே குறையாத மூலதனம். அஞ்சனை – வாயு தேவனின் மனைவி, அநுமனின் அன்னை. சிறிய திருவடிகள் – ஆஞ்சநேயரைச் சிறிய திருவடி என்றும் கருடாழ்வாரைப் பெரிய திருவடி என்றும் வழங்குதல் வைணவ மரபு.*

*நெஞ்சன்(ஆகிய)ஐ அன்பு அடியவர்க்கு ஓர் எய்ப்பில் வைப்பாய் மாதவச் சீர் நிறைவே போன்று எம் அஞ்சனை தந்தருளும் உயர் சிறிய திருவடிகள் அடிக்கு அன்பு செய்வாம் எனப் பொருள் முடிபு காண்க.*

*13. உட்புறம் – அகக்கண்ணில். கரண களேபரங்கள் – உட்கருவிகளும் (அந்தக் கரணம்) உடலும். அவன் – இறைவன். மேவல் – பொருந்துதல். ஓங்கு அருள் வைகுந்த அநுபவம். அகத்து அமைத்து ஏத்திடுதல்.*

## சற்குரு துதி

14. மெய்யகம்சை வம்காட்ட, பெயர்இசைவை -
ணவம்காட்ட, விசாகம் தன்னில்
வையகம்தோய் நிலைமைகௌ மாரம்காட்ட,
திதிகாணா பத்யம் காட்ட,
துய்யசிந்தூ ரம்சாத்தே யம்காட்ட,
சீர்க்கிரணம் துலக்கச் சௌரம்,
மையஅதீ தம்கொள்இரா மானந்த
குருபரன்தாள் வணங்கி வாழ்வாம்.

*பொதுப்பாயிரம் முற்றும்.*

*14. மெய்யகம் சைவம் காட்ட – உடலின் திருநீறு சிவநெறியை விளக்க. பெயர் – இராமானந்தர் என்னும் நாமம். வையகம் தோய்நிலைமை – உலகில் பிறந்த நட்சத்திரம் ஆகிய விசாகம். திதி – அவர் பிறந்த சதுர்த்தி. துய்ய சிந்தூரம் – தூய்மையான குங்குமப்பொட்டு. சாத்தேயம் – சக்தியை வழிபடும் சமயம். சீர்க்கிரணம் – புகழின் ஒளி. சௌரம் – சூரியனை வழிபடும் சமயம். மைய – அனைத்துச் சமயங்களுக்கும் நடுவில் விளங்குவதாகிய. அதீதம் – எல்லாச் சமயங்களையும் கடந்த பொதுநெறி.*

*எம் குருநாதர் உடல் முழுவதிலும் திருநீறு அணிந்து சைவத்தையும், இராமானந்தர் என்னும் தம் பெயரால் வைணவத்தையும், விசாக நட்சத்திரத்தில் பிறந்ததால் கௌமாரத்தையும், சதுர்த்தி திதியில் தோன்றியதால் காணாபத்தியத்தையும், குங்குமப் பொட்டினால் சாத்தேயத்தினையும், தம் புகழின் ஒளியால் சௌரத்தையும் விளக்குகிறார். இவ்வாறு அவருடைய திருஉருவப் பொலிவே சமயாதீதத்தை விளக்கி நிற்கிறது என்றவாறு.*

## *சிறப்புப்பாயிரம்*

### தோற்றம்

*(எழுசீர் விருத்தம்)*

15 அனத்தவன் புடையார் பொய்தரும் உள்ளத்து
அறிவரும் மகிமைசால் கார்ஐ
வனத்தவன், மாலை வனத்தவன், கருணை
வளத்தவன், மருவுசாக் கிரம்சொப்-
பனத்தவன், சுழுத்தி துரியஅ தீதப்
பாலவன், மேலவன் அடியேன்
மனத்தவன் என்னும் துணிவினால் காரை
வனப்புகழ் ஓதமுன் வந்தேன். 1

### அபிப்ராயம்

16. திருகிய மாயை கன்மம்ஆர் மனிதத்
திரள்எலாம் இன்பமெய் அன்பு
பெருகிய தனது மகிமைகேட் டுண்மைப்
பேறுபெற் றமைதர அரியை
மருகியைத் தமக்கும் எனக்கும்ஆம் பணியை
வயக்கிட வேண்டும்என் றன்பால்
உருகிய மனத்தில் ஏற்றிஏத் தினதால்
உறுவதி∴ தென்செயல் அன்றே. 2

*15. அனத்த – தீமை புரிகின்ற. வன்பு உடையார் – கொடுமை உடையவர்களின். கார் ஐ வனத்தவன் – மேகத்தின் அழகிய நிறத்தைப் பெற்றவர். வன மாலைத் தவன் என மாறுக, துளசி மாலையை அணிந்த உயர்ந்தவன். சாக்கிரம் – விழிப்பு நிலையிலும். சொப்பனத்தவன் – கனவு நிலையிலும் (எப்போதும்) விளங்குபவன். சுழுத்தி – ஆழமற்ற உறக்கம். துரிய அதீதம் – நான்காவதாகிய ஆழ்ந்த தூக்க நிலையையும் கடந்த நிலையிலும் அந்தர்யாமியாக உள்ளவன். காரைவனப் புகழ் – காரமடைத் தல மகாத்மியம்.*

*16. அரியை – திருமாலையும், மருகியை – அவர்தம் மருமகளாகிய கலைமகளையும். வயக்கிட – அமைத்தருள. என்று அன்பால். ஏற்றி – எழுந்தருளச் செய்து. ஏத்தினதால் – போற்றியதன் பயனாக. உறுவது இஃது.*

*உலகம் இன்புற வேண்டி மாலையும், வாணியையும் வணங்கி, இப்பணியில் ஈடுபடுகின்றேன். அதனால் இதில் என் சுதந்திரம் ஏதும் இல்லை. இறைவன் கைக் கருவியாக இயங்குகின்றேன் என்பது கருத்து.*

## துணிபு

17. தொடக்கிய அண்ட கோடிகள் அனைத்தும்
துவர்த்திரு வாய்மல ரதனுள்
அடக்கிய காட்டும் இறைவன்என் உள்ளத்து
அமைதலால் அவன்உறை தருசீர்
படக்கிளர் காரை வனத்திசை தரும்மெய்ப்
பாழிமான் மியமும்என் நாவில்
நடக்கிய இசையும் எனும்பெரும் துணிவால்
நவின்றிடத் துவக்கினன் மாதோ. 3

## வேண்டுகோள்

18. "அணிஎனக் கிடுவாய்; துணிஎனக் கிடுவாய்;
அருக்கனில் கதிர்விரி ஒன்பான்
மணிஎனக் கிடுவாய்" எனஇரந் தலையும்
மாயையை வேர்அற அருளால்
துணிஎனக் கிடுவாய் காரைமா வனத்தின்
தொல்கதை சிறப்புற ஓதும்
பணிஎனக் கிடுவாய் பணிஎனத் திகழும்
பாயல்சார் யோகஅற் புதனே! 4

*17. தொடக்கிய – (தத்தமக்குரிய நிலையில்) பொருந்தியுள்ள. துவர் – பவளம் போன்ற. அண்டசராசரங்கள் எல்லாவற்றையும் தன் வாயில் காட்டியது கண்ணபிரானின் இளமைத் திருவிளையாடல். உறைதரு – எழுந்தருளியுள்ள. இசைதரும் – பொருந்தியுள்ள. பாழி – பெரிய. மான்மியம் – பெருமை. அடக்கிய – செய்யிய எனும் வாய்பாட்டு வினையெச்சம்.*

*18. அணி – பொன் நகை. துணி – ஆடை. அருக்கனில் – சூரியனைப் போல. கதிர் விரி – ஒளி வீசுகின்ற. ஒன்பான் மணி – நவரத்தினம். இரந்து அலையும் – யாசித்துத் திரியும். துணி – வெட்டித் தள்ளுதலை, முதல்நிலைத்தொழிற்பெயர். இங்கு இரண்டன் உருபு விரிக்க. தொல்கதை – தொன்மம், புராணம். பணி – 1. சேவகம் 2. பாம்பு, ஆதிசேடன். பாயல் – படுக்கை.*

## நூற்காரணம்

19. படியவர் வேண்டும் காரைமா வனச்சீர்ப்
பரப்பினை ஒருப்படு மனத்தால்
மிடியவர் வேண்டும் பொருள்என அரங்கன்
மேனியைத் தம்உளத் தமைத்த
குடியவர் உண்மைப் பிடியவர் செவியால்
கொள்பெரும் செல்வம்மேல் எனத்தேர்
அடியவர் விருப்பே என்னைஇப் பணிக்காள்
ஆக்கிய பாக்கியத் தினதே. 5

## அவையடக்கம்

20. சிவைஅடக் கம்சால் பரமன்ஏத் தெடுக்கும்
சிறப்பிசை அரங்கநா தன்சீர்க்
குவைஅடக் கம்சால் நலம்விடுத் தில்லிக்
குடமொடா டெருமைநெய் அரிநேர்
நவைஅடக் கம்சால் ஈனர்கள் தமக்கோ,
நன்மைஎப் பொருளினும் காணும்
சுவைஅடக் கம்சால் மேலவர் தமக்கோ
சொல்லுதல் யான்அவை அடக்கம். ? 6

## *பாயிரம் முற்றிற்று*

*19. படியவர் – உலகத்தவர். வேண்டும் – விரும்பும். பரப்பினை – மிகுதியை. மிடியவர் – வறியவர். அமைத்த குடியவர் என்பதைக் குடி அமைத்தவர் என மாறுக, எப்போதும் தியானிப்பவர், உண்மைப் பிடியவர். சத்தியத்தில் நிலைத்தவர் அடியார்கள் வேண்ட இந்நூலை இயற்றலானேன் என்றவாறு.*

*20. சிவை – உமாதேவி, இது மாதொருபாகனை நினைந்தது. சிறப்பு இசை – பெருமை பொருந்திய. "அன்னம் ஆ வே மண்ணொடு கிளியே இல்லிக் குடம் ஆடு எருமை நெய்யரி அன்னார் தலை, இடை கடைமா ணாக்கர்" (நன்னூல் 37) என்னும் நூற்பாவின் உரையைக் காண்க. நவை – குற்றம். ஈனர்கள் – இழிதகையோர். சுவை அடக்கம் சால் – இனிய அடக்கப்பண்பு பொருந்திய. கடை மாணாக்கர் நன்மையையே உணரார்; மேலவர்கள் எதிலும் நன்மையையே காண்பர். இந்நிலையில் யாருக்கு அவையடக்கம் கூறவேண்டும்? இன்றியமையாமை இல்லை என்பது கருத்து.*

# 1. நாட்டுப் படலம்

(கலித்துறை)

21 வான நாட்டிலும், மற்றைய பதியினும், மாட்சி
மீனம் நாட்டிய கேதனன் வெம்புலிக் கொடியோன்
ஆன நாட்டினும் அணிமிகக் கிளர்ந்துமேல் ஆன
ஞான நாட்டிசைக் கொங்குநாட் டணிசில நவில்வாம். 1

22. சென்னி மன்னன்ஆள் சோழநா டியல்வயற் செழுமை
மன்னி எங்கணும் புகழ்பெறத் தமிழ்முனி வரன்கை
துன்னி ரும்திரைப் பொன்னிமா நதிநிலம் தோயும்
நன்னி மித்தம்ஈந் திட்டது கொங்குநன் நாடு. 2

23. வான்செ ழித்திடும்; மழைசெழித் திடும்;பரி மளம்தோய்
கான்செ ழித்திடும்; மலைஎலாம் செழித்திடும்; கடலும்
தான்செ ழித்திடும்; எங்கணும் செழித்திடும் தாய்நேர்
நான்செ ழித்திடில் எனும்அணிக் கொங்குநல் நாடு. 3

*21. பதியினும் – நகர்களைவிடவும். மீனம் நாட்டிய கேதனன் – கயல்(க்) கொடியை உடைய பாண்டியன். புலிக் கொடியோன் – சோழன். அணி – அழகு. கிளர்ந்து – மேம்பட்டு. கொங்குநாட்டைச் சேரநாட்டின் பகுதியாகக் கூறுவது பிற்கால இலக்கிய வழக்கு. "சேரர் கொங்கு வைகாவூர் நல்நாடு" (திருப்புகழ் 104) "கோதைநனி ஆண்டதொரு கொங்குவள நாடு" (திருப்பேரூர்ப் புராணம்)*

*22. சென்னி – சோழன். தமிழ் முனிவரன் – அகத்தியர். கை துன்னு – கரத்தினில் பொருந்தியிருந்த. இரும்திரை – பெரிய அலைகளை உடைய. நல் நிமித்தம் – நல்ல காரணம். சோழ நாட்டுச் சீகாழியில் இந்திரன் அமைத்திருந்த பூஞ்சோலையைக் காக்க வேண்டி விநாயகர் அகத்தியரின் கமண்டலத்தில் கட்டுண்டிருந்த காவிரியை விடுவித்தது கொங்கு நாட்டில். (காண்க : கந்தபுராணம், அசுரகாண்டம், காவிரி நீங்கு படலம்.)*

*23. பரிமளம் தோய் – நறுமணம் மிக்க. கான் – காடு. கொங்கு செழிக்கின் எங்கும் செழிக்கும் என்பது பழமொழி.*

24. தொகைஇ சைந்தமெய்த் தவர்இடை யூறுறச் சூழும்
பகைஇ ராக்கதர் அசுரர்கள் தாம்கொல்லிப் பாவை
மிகைஇ சைந்தவெங் காமம்உற் றவர்எலாம் விளிய
நகைபு ரிந்துமா தவம்தரும் கொங்குநன் னாடு. 4

25. பாடி யம்புரிந் தருள்இரா மாநுசர் பாதம்
ஊடி யைந்துள பாதுகைப் பூசனை உஞற்றிக்
கூடி டும்புகழ்க் கொங்குப்பி ராட்டியாம் கோதை
நாடி வாழ்ந்தவர்ப் போற்றிசைக் கொங்குநன் னாடு. 5

*மழைவளம்*

26. இந்தி ரன்செலுத் திடும்அயி ராவதம் என்னும்
தந்தி தூருவா சன்சொலால் கருநிறம் சமைந்தாங்கு
உந்தி ரும்புயல் இனம்கடல் உற்றுநீர் உண்டு.
பந்தி பந்தியாய் இருண்டுவிண் பாற்படர்ந் தனவே. 6

27. கொன்னி லங்கணிக் கொண்டலின் மீதொளி குலாவும்
மின்னி லங்குதல் பொன்இசைந் திடுதிறம் விளக்கும்
பின்னி லங்குரும் ஓதைபாஞ் சசனியம் பிறங்க-
லின்னி னங்களும் இடிபடப் புரிந்துபோல் இசைக்கும். 7

*24. மெய்தவர் இடையூறு உறசூழும் பகை (ஆகிய) இராக்கதர் அசுரர்கள் தாம் காமம் உற்று, அவர் எலாம் விளிய நகைபுரிந்து, மாதவம் தரும் நாடு என்பது முடிபு. விளிய – அழிய. கொல்லிப் பாவை காம மூட்டிக் கொல்லும் செயலுக்குக் காரணம் கற்பித்தலின் இது தற்குறிப்பேற்ற அணி.*

*25. பாடியம் – பிரம்ம சூத்திரமகாபாஷ்யம். லக்ஷ்மி என்னும் இயற்பெயரை உடைய ஓர் அம்மை இராமாநுசரிடம் உபதேசம் பெற்று அவர் பாதுகைகளைப் பூசித்து வந்தார். இவர் கொங்குப் பிராட்டி எனவும், சேலாஞ்சலாம்பா எனவும் வைணவ நூல்களில் போற்றப் படுகிறார். 74வைணவ சிங்காசனாதிபதிகளில் ஒருவரான கொங்கிலண்ணன் இவர் கணவர். முழு வரலாற்றை விரிந்த நூல்களில் காண்க.*

*26. தந்தி – யானை, சமைந்தாங்கு – பெற்றதைப் போல. உந்து இரும்புயல் இனம் – சஞ்சரிக்கின்ற பெரிய மேகக் கூட்டம். புயல் இனம் சமைந்தாங்கு இருண்டு படர்ந்தன என்பது முடிபு.*

*27. கொன் இலங்கு – பெருமை விளங்குகின்ற. அணி – அழகிய. கொண்டல் – மேகம். மின் – மின்னல். பொன் – திருமகள், நீலமேகத்தில் மின்னல் திருமாலின் மார்பில் இலக்குமி. இலங்கு உரும். உரும் – இடி, ஓதை – ஓசை. பிறங்கலின் இனங்களும் – மலைக் கூட்டங்களும். உரும்ஓதை இடிபடப் புரிந்து பாஞ்சசனியம் போல் இசைக்கும். பாஞ்ச சன்னியம் – திருமாலின் சங்கு.*

28. அருணன் ஆதபம் புக்கெது போழ்தும் உய்த்தறிய
இருள்ந யந்திடும் தண்டலைக் குருரிடி இறும்பில்
தருண இந்திர சாபம்வாய்ந் துற்றதா தரவால்
வருணன் மீதுறச் சாத்தணி வாசிகை மானும். 8

29. வெப்பு மிக்கமுன் சீதைக்காற் றிராவணன் மெய்மேல்
அப்பு மாரிபெய் திராகவன் நவையறப் புரிந்தாங்கு
ஒப்பு மாறிரு நிலமடந் தையின்உளம் உவப்பச்
செப்பு மாரிபெய் துற்றவெப் பறத்திருத் தியதே. 9

30. காரை மாவனத் துற்றகா ராம்பசு கவின்பால்
தாரை ஓவற அரிமிசை பொழிந்ததோர் தகையில்
வீரை உண்டமா முகில்இனம் பெய்துவெங் கோடைப்
பேரை மாற்றிய தப்பசு வின்பிற வியைப்போல். 10

*28. அருணன் – சூரியன். ஆதபம் – வெயில். எது போழ்தும் – எப்போதும். "வெயில் நுழைபு அறியாக் குயின்உழை பொதும்பர்" (பெரும்பாண். 374). குரு இருடி மலையைப் பேச்சு வழக்கில் குருடிமலை என்பர். இறும்பு – மலை. இந்திரசாபம் – வானவில். வருணன் ஆதரவால் (மலை) மீதுஉறச் சாத்து அணி வாசிகை மானும் என்க. வாசிகை – மலர்மாலை.*

*29. முன் சீதைக்கு மிக்க வெப்பு ஆற்று இராவணன் எனக் கொண்டு கூட்டுக. வெப்பு – கொடுமை. அப்புமாரி – கணை மழை. நவை அற – இராவணனின் பிறர் மனை நயந்த குற்றம் நீங்குமாறு. புரிந்தாங்கு – செய்ததைப் போல ஒப்புமாறு – ஏற்றுக் கொள்ளும்படி. இரு நிலமடந்தை – பெரிய தரைமகள். செப்பு மாரி – புகழ்ந்து சொல்லப்படும் மழை. நிலமடந்தை ஒப்புமாறு(ம்) உளம் உவப்ப(வும்) மாரி பெய்து வெப்பு அற திருத்தியது என்பது முடிபு.*

*30. காராம்பசு – தனிக் கருப்பு நிறம் வாய்ந்த ஆன். தாரை – நீரோட்டம். ஓவற – தடையின்றி. அரிமிசை – திருமாலின்மேல். வீரை – கடல். பசு பால் பொழிந்தது மழைக்கு உவமை. இக்காராம்பசுவின் வரலாற்றை இந்நூல் தொட்டியன் பூசித்த படலத்தில் காண்க.*

## பாலகாவேரி ஆற்றுவளம்

*(அறுசீர் விருத்தம்)*

31 செல்எனும் முகிற்கு லங்கள்
செல்என விடுத்த நீத்தம்
கல்எனும் மலையிற் புக்குக்
கல்என ஓதை காட்டி,
புல்எனும் கணத்தை இன்பம்
புல்எனக் கூட்டிப் பார்வான்
வல்எனப் பெற்ற தம்மா
வாலகா வேரி நாமம் 11

32. இலக்குமிக் குறும்பூ தேவிக்கு
இன்பம்உள் அமையக் கூடித்
துலக்குபூ உந்தி நாகம்
தோயமேல் இசையக் கொண்டு
புலத்துவெப் பகற்றி வாசப்
புண்டரீ கக்க ணம்தோய்ந்து
அலக்கண்ஆ விகட்கு நீக்கி
அச்சுதன் நிகர்க்கும் வெள்ளம் 12

*31. செல் எனும் – செல் என்னும் பெயரை உடைய. நீத்தம் – நீர். இன்பம் புல் – மகிழ்ச்சி அடை. பார் வான் – ஆகுபெயராக முறையேநில உலகத்தினரையும் மேலுலகத்தினரையும் உணர்த்திற்று.*

*32. ஆறு: இலக்குமிக்கு – கடலைச் சென்றடைதலாகிய இலட்சியச் சிறப்புற்று. துலக்கு பூ – ஒளிமிக்க மலர்கள். உந்தி – நீர்ச்சுழி. நாகம் தோயம் மேல் இசையக் கொண்டு – பாம்புகளைத் தண்ணீரின்மேல் பொருந்தப் பெற்று. புலத்து வெப்பு – வயல்களின் வரட்சி. புண்டரீகக் கணம் – தாமரைக் கூட்டம். ஆவிகட்கு அலக்கண் – குளங்களுக்கு நீரற்றதாகிய துன்பம். உயிரினங்களுக்கு எனினும் ஆம்.*

*திருமால் : இலக்குமிக்கு(ம்) உறும் பூதேவிக்கு(ம்) கூடி – வெளிப்படை. பூ துலக்கு உந்தி – தாமரையைக் காட்டும் கொப்பூழ். தோயம்மேல் நாகம் இசையக் கொண்டு – கடலின்மீது அரவணையில் பொருந்தி. புலத்து வெப்பு அகற்றி – அன்பர்கட்கு ஐம்புலன்களால் நேர்கின்ற பாவங்களைப் போக்கி. புண்டரீகக் கணம் தோய்ந்து – தாமரைக் கூட்டம் எனத்தக்க அவயவங்களைப் பெற்று. ஆவிகட்கு அலக்கண் நீக்கி – ஆன்மாக்களின் பிறவித் துன்பங்களைப் போக்கி.*

33. இலங்குமை அமைமெய் கூடி
இரட்டுமா னினைக்கைக் கொண்டு
பலங்கொளப் பலர்க்கும் ஈந்து
பாதபங் கயமேற் கூட்டி
நலங்கிளர் கொன்றை வில்வம்
நவில்பன்றி யின்கொம் பேந்தித்
தலங்கள்எண் ணிலகண் டெய்திச்
சங்கரன் புரையும் நீத்தம். 13

34. ஊன்முகத் துயிரைக் கூட்டி
உணவினை அருத்தி மேலாம்
வான்முகத் தவர்க்கும் இன்பம்
வழங்கிமண் ணுலகம் போற்ற
நான்முகம் காட்டிக் கானம்
நல்லணி பொலிய ஆர்த்துத்
தேன்முகக் கமல வாசத்
திசைமுகன் கடுக்கும் தீர்த்தம் 14

*33. ஆறு : இலங்கு மை அமை மெய் கூடி – ஒளிரும் நீரைப் பொருந்திய உடலாகப் பெற்று. இரட்டும் மானினைக் கொண்டு – வாலை வீசுகின்ற முதலைகளை உடைத்தாகி, பலர்க்கும் பலம் கொள ஈந்து; பலம் – பயன், பாதபம் கயம் மேல் கூட்டி – மலர்ச் சோலைகளையும் குளங்களையும் வளப்படுத்தி. நீத்தம் – ஆறு. மற்றவை வெளிப்படை.*

*சிவபிரான் : இலங்கு உமை அமை மெய் – மாதொருபாகர். இரட்டும் ஆனினை கைக்கொண்டு – ஒலிக்கின்ற காளையைக் கொடியாக ஏந்தி. (தன்) பாத பங்கயமேல் கூட்டிப் பலருக்கும் பலம்கொள ஈந்து. ஏனைய வெளிப்படை.*

*34. ஆறு : உணவினை அருத்தி (அதனால்) ஊன் முகத்து உயிரைக் கூட்டி, ஊன் முகத்து – உடலின்கண், வான் முகத்தவர்க்கும் இன்பம் வழங்கி – "சிறப்பொடு பூசனை செல்லாது; வானம் வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு" என்பதால், நால் முகம் காட்டி – பள்ளத்தை நோக்கிப் பாய்ந்து, தொங்கி, கானம் நல் அணி பொலிய ஆர்த்து – காடுகள் அழகுபெற நீரை ஊட்டி.*

*பிரமன் : ஊன் முகத்து உயிரைக் கூட்டி – உடலில் உயிரைச் சேர்த்து, பிறப்பித்து. உணவினை அருத்தி – ஊழ்வினைகளை நுகர்வித்து (தலைவிதி). நல் அணி பெறகானம் ஆர்த்து – சிறப்பாக வேதங்களை ஒலித்து. ஏனைய வெளிப்படை.*

35. பொறிமயில் மிசைக டாவிப்
பொங்கரு வியப்புக் காட்டி
வெறிமலி காந்தள் வெள்ளில்
குறுமுறி மீது வேய்ந்து
மறிபயந் தகல ஆங்கண்
வல்லிகுஞ் சரியைக் கூடி
அறிஞர்உள் உவப்பில் தோய்வுற்று
அறுமுகன் புரையும் ஆறு. 15

36. வரைப்பில்சீர் அமையும் காரை
வனம்தரி சித்து நாவாய்
நுரைத்திட அதன்சீர் விண்டு
நோக்கரும் வேகம் மேவிக்
கரைத்திடர் முழுதும் போக்கிக்
கடிமல ரினங்கள் வீசித்
தரைத்தலைப் புரண்டு தொண்டர்
தம்செயல் காட்டும் வெள்ளம். 16

*35. ஆறு : பொறி மயில் மிசை கடாவி – படகு, மயில் ஆகியவற்றைத் தன்மேல் செல்ல விட்டு, பொங்கு அருவி அப்பு காட்டி – பொங்குகின்ற நீர்வீழ்ச்சிகளாக நீரைக் காண்பித்து. வெறி – நறுமணம். வெள்ளில் – விளாமரம். குறு முறி – சிறிய இலைகள். வேய்ந்து – தண்ணீர்ப் பரப்பில் புனையப் பெற்று. மறி பயந்து அகல – தடுக்கும் தொழில் ஏற்படுவதால்அகலமாகி, மறி – மறித்தல், முதனிலைத் தொழிற்பெயர். அகலுதல் – அகலமாதல், அறிவகற்றும் கல்வி என்றழிப்போல. வல்இகும் சரியைக் கூடி – கடினமானதும் தான் பாய்ந்து வீழ்வதற்கேற்றதுமான மலைச் சாரலைப் பொருந்தி. மற்றவை வெளிப்படை.*

*முருகப் பெருமான் : பொறிமயில் மிசை கடாவி – புள்ளிகளை உடைய மயில் வாகனத்தை வானில் செலுத்தி. பொங்கு அரு வியப்பு காட்டி. மறி பயந்து அகல – நாரதரின் வேள்வியில்தோன்றிய ஆடு அஞ்சி ஓடும்படி செய்து. வல்லி – வள்ளி நாயகி. பிற வெளிப்படை.*

*36. வரைப்பில்...................................... தரிசித்து – இப்பகுதி பொது.*

*ஆறு : நாவாய் நுரைத்திட – படகுகள் செல்வதால் நுரை உண்டாக, அதன்சீர்... மேவி – நோக்கி விள்ளரும் வேகம் என மாறுக; பார்த்துக் கூறமுடியாத வேகம்கொண்டு. கரைதிடர் – கரையில் உள்ள மண்மேடுகள். அலைகளால் மலர்களை எறிந்து. தரைத்தலைப்புரண்டு – நிலத்தில் தவழ்ந்து.*

*தொண்டர் : நா வாய் நுரைத்திட – நாவிற்கு இடமாகிய வாயில் நுரை தோன்றுமளவு. அதன்சீர்விண்டு – அத் தலப்பெருமையைக் கூறி. நோக்க அரும் வேகம் மேவி – ஆய்விற்கு எட்டாத ஆவலைப் பொருந்தி. இடர் முழுதும் கரைத்துப் போக்கி – தம் துன்பங்கள் எல்லாவற்றையும் இல்லாமல் அழித்துக் கொண்டு. கடி.... வீசி – அருச்சித்து. தரைத்தலைப் புரண்டு – அங்கப் பிரதட்சணம் செய்து.*

37. மண்டல மிசையே கூடி
மணியொளி தலைமேற் கொண்டு,
கண்டவர் பயம்உள் மிஞ்சக்
கதிபெறும் அரவம் காட்டி,
தண்டரும் வளைவா ராகம்
தாங்குபு புவியுட் பாய்ந்து
கொண்டல்வண் ணன்மீ தாடும்
கொள்கையின் அரவாம் வெள்ளம். 17

*(கலித்துறை)*

38. ஒலிகு லாவணிப் பாலகா வேரியி னுடனே
பொலிப வானிஆம் பிராவதி காவிரி புனிதம்
மலியும் காஞ்சிநள் ளாறுபாய் நானில வரைப்பின்
மெலிவி லாத்திணை வளத்தினுள் சிறிதிவண் விள்வாம். 18

குறிஞ்சி

39. வான்வ யிற்பிறப் பெய்திடும் வாரண மகட்கும்
மான்வ யிற்சிவ முனிதரும் வள்ளியாம் மகட்கும்
தான்வ சித்திட இடம்வலம் தரும்குகன் சயிலம்
கான்வ யற்பொலி சீதன வளம்கொடு கதிக்கும். 19

*37. ஆறு: மண்தலமிசை – நிலஉலகில். மணி ஒளி – இரத்தினம் போன்ற நிறத்தை. தலைமேல் – தன்னிடத்து, பயம் உள் மிஞ்ச – அச்சம் உள்ளத்தில் அதிகமாக. கதிபெறும் – வேகமாகச் செல்லும். அரவம் – ஓசையை. தண்டரும் – எப்போதும் நீங்காத, மாறாத. வளைவு ஆர் ஆகம் – வளைவைப் பொருந்திய உடல். தாங்குபு – பெற்று. புவியுள் – உலகில். வெள்ளம் அரவு ஆம் என்க.*

*பாம்பு : மண்டல மிசையே கூடி – வட்டமான நிலையைப் பெற்று. மணி ஒளி – நாகமாணிக்கப் பிரகாசம். அரவம் – சீறும் ஒலி. பிற வெளிப்படை.*

*38. ஆம்பிராவதி – ஆன்பொருநை என்னும் அமராவதி. காஞ்சி – நொய்யல். நள்ளாறு – அவிநாசியில் பாயும் ஆறு. மெலிவு இலா – குறைவற்ற.*

*39. வான் – தெய்வலோகம். வாரண மகள் – தெய்வயானை. இடம்வலம் நிரனிறை. சயிலம் – மலை. கான் – காடு. குகன் சயிலம் கான்வயல் பொலி சீதனவளம் கொடு கதிக்கும் என்க. கான்– வள்ளியின் சீதனம். வயல் – தெய்வயானையின் சீதனம்.*

40. தலைமை சான்றிடும் குறிஞ்சியந் தலைமைவி சாகன்
நிலைமை சால்முல்லை நிலத்திடம் கோயில்கொள் நிலையால்
கொலைசெய் நேமியங் கரப்பிரான் குன்றிடம் கொளலான்
மலைவில் சீர்ப்பெரு மாள்பெய ரால்உண்மை வயங்கும். 20

41. கருவி மாமுகில் முடிஅமை காட்சியும், கல்என்று
அருவி மீமிசை நின்றிழிந் திடும்பெரு கார்ப்பும்
பொருவில் கங்கைநல் கடித்திரு மாலுடன் போகி
மருவி நன்மரு கனைத்தெரிந் தமைசெயல் வயக்கும். 21

42. படிய ஏனலை விதைத்திட வேடுவர் பயன்சால்
கடிய சந்தனச் சோலையைக் காடெனும் வண்ணம்
முடிய வேஅனல் கொளுத்தலால் அமைபுகை முருக
நெடிய வேண்முரு கோன்புகழ் மணம்என நிறையும். 22

*40. முல்லை குறிஞ்சித்திணைகட்குரிய திருமாலும், முருகப் பெருமானும் இடம் மாறியும் திருக்கோயில் கொண்டிருத்தலையும், அவர்கள் பெருமாள் எனப்பொதுப்பெயர் பெற்றிருப்பதையும். நோக்கும் போது வைணவத்திற்கும் கௌமாரத்திற்கும் பேதம் இல்லை என்னும் உண்மை தெளிவாகும் என்பது கருத்து. நேமி – சக்கரம். மலைவு இல் – முரண்பாடு இல்லாத.*

*41. முடி அமை – மலையின் உச்சியில் பொருந்தியுள்ள. கல் – அருவிவீழ் ஓசைக் குறிப்பு. பெருகு ஆர்ப்பும் – பேர் ஒலியும். முகில் படுவது திருமாலின் வருகை. அருவியின் ஆர்ப்பு இந்திரன் வருகையின் ஆரவாரம். கங்கை நல்கு அடி திருமால் – கங்கையைத் தோற்றுவித்த திருவடிகளை உடைய விட்டுணு, "கங்கை உதிக்கும் கழற்கால் கரிய பிரான் (திருவரங்கத் திருவாயிரம் 3). போகி – இந்திரன். மருகனை – திருமாலுக்குத் தங்கை மகன், இந்திரனுக்கு மாப்பிள்ளை. தெரிந்து – கண்டு, அமை செயல் – நெருங்கும் காரியம்.*

*42. ஏனல் – தினை, கடிய – மணம் மிக்க. காடு எனும் வண்ணம் – (பயனற்ற) செத்தையைப் போல. அனல் – தீ. புகைமுருகு – புகையின் நறுமணம், வேற்றுமைத் தொகை. முருகு முருகோன்புகழ் மணம் என நிறையும் என்பது முடிபு.*

*குறிஞ்சி நில மக்கள் அகில், சந்தனம் முதலிய மரங்களை எரியூட்டி தினை விளைவிப்பது வழக்கம். "முளி அகில் சந்து உருவ ஆர்அழல்ப் பெய்து புன்பயிர் விளைத்து உவப்பார்." காஞ்சிப்புராணம் – திருநாட்டுப். 39)*

43. அனைத்தும் ஆயவன் மாயவ னேஎன அகத்துள்
நினைத்து மெய்ப்பயன் பெறுவர்மே லவர்;இருள் நிலையோர்
தினைத்து ணைப்பயன் தாம்பெறப் பிறர்க்கிடர் செய்து
வினைத்து வக்கில்வீழ் பான்மையை வேடர்சீர் விளக்கும். 23

44. முத்து லாவிய யானையின் கொம்பினை முதிரை
வித்து லாவிய புனத்திசை வேலியா விதித்தல்
ஒத்து லாம்பொருள் களுள்ஒன்றை மேல்எனல் உள்ளப்
பித்து லாவிய காதலே எனும்நிசம் பிறக்கும். 24

45. ஆற்று மாதவப் பெரியர்தம் நிலைஅகன் றவனி-
மேற்று தைந்திடல் சிறியரைத் தேற்றஎன் மெய்ம்மை
சாற்றும் வான்குரு இருடிவெற் பின்முடிச் சார்பொன்
ஊற்று மாந்தர்கட் கிருமையும் தரஇசைத் துறுதல். 25

*43. பொதுவாக இழிந்ததாகக் கருதப்படும் தினையை விதைப்பதற்காக வேடர்கள் விலை உயர்ந்த சந்தனச் சோலையை அழித்தல் அவர்கள் எல்லாப் பொருள்களையும் சமமாக நோக்குவதைக் காட்டுகிறது. அடுத்த பாடலையும் காண்க. இருள் நிலையோர் – அறியாமைமிக்கோர். பிறர்க்கு இடர். வினைத் துவக்கு – இருவினைகளாகிய பிணைப்பு.*

*44. யானைத் தந்தத்தில் முத்துப் பிறக்கும் என்பது இலக்கிய மரபு. முதிரை – புன்செய்த் தானியம், துவரை முதலிய புன்செய்த் தானியம் விலை குறைவானவை. யானைத் தந்தம் மிகமிக விலை உயர்ந்தது. இதனை வேலியாகப் பயன்படுத்தித் தானியம் விளைவிக்கின்றனர் என்றால் பொருள்களின் மதிப்பு நம் கற்பனையே என்பது விளங்கும். ஒப்பு நோக்குக :*

வேட்டது அற்பமே ஆயினும் மேவுமா முயல்வோர்
வீட்டு வார்;விழை யாதன மேன்மைய வேனும்
சேட்டு மாமணி பொடிபடச் செந்தழல் விரைக்கான்
ஊட்டி னார்தினை வித்தினார் உயர்மலை வாழ்நர்.

*(திருப்பேரூர்ப் புராணம் – திருநாட்டுப். 12)*

*45 மாதவம் ஆற்று பெரியர் என மாறுக. அகன்று – உயர் நிலையிலிருந்து விலகி (இறங்கி வந்து). அவனிமேல் துதைந்திடல் – உலகியல் ஒழுகலாற்றில் பொருந்துதல், குரு இருடி வெற்பு – இப்பொழுது குருடிமலை என வழங்கப்பெறும் மலை. பொன்னூற்று – அம்மலையின் ஓர் அருவி. பொன்னூற்று உறுதல் மெய்ம்மை சாற்றும் என்பது முடிபு. தவசிகள் தம்அருளால் உலகியல் நிலைக்கு இறங்கி வந்து அடியார்களுக்கு உதவுவதற்கு அருவி மலைமேலிருந்து கீழே வந்து பயன்படுதல் உவமை.*

46. கான்மு டித்தபூந் தருஇனம் கமழ்ந்தவான் கனியின் -
பான்மு திர்ச்சிசால் இரதமும் தேனும்உட் பரிவால்
மேன்மு டித்தலை அரங்கனுக் காட்டிமென் பூவை
மான்மு டிக்கணும் அடிக்கணும் பெயும்அன்பர் மரபின். 26

47. நால்எ னும்திரு மறைபுகழ் நாரணன் நாம்உம்
போல்எ னும்படி பெயருடன் வடிவமும் புணர்ந்தார்
பால்எ னும்கைமா றேற்கிலோம் ஆள்எனும் பண்பின்
மேல்எ னும்குரு இருடிவெற் பின்முகில் மேவும். 27

48. சங்கை அற்றமெய்ப் புகழ்பல விரிதரும் தரணி
மங்கை அம்கரம் பற்றலால், வற்சரம்வாய் வைக்கக்
கொங்கை ஊறும்ஆன் கொள்கையில், அரிபதம் கூடும்
கங்கை ஊற்றமைந் துயிர்க்கிடை யூறறக் கடத்தும். 28

*46. கான்முடித்த – நறுமணம் நிறைந்த. பூம்தரு இனம் – அழகிய மரக் கூட்டங்கள். வான் கனியின்பால் – உயர்ந்த பழங்களினிடத்து. இரதம் – சுவை, சாறு எனினும் ஆம். மேல் முடி தலை – உயர்ந்த கிரீடத்தை அணிந்த தலையை உடைய. அன்பர் மரபின் – அடியார்களின் சம்பிரதாயத்தைப் போல, இன் உவம உருபு. தரு இனம் மரபின் ஆட்டிப் பெயும் என்க.*

*47. பெயர் – மால் என்னும் சொல் திருமால், மேகம் என இருபொருள் தரும். வடிவம் – நீலநிறம். பால் – உரிமை, பயன் எனினும் ஆம். ஆள் – அடியார். திருமால் எம் முடைய பெயரையும் நிறத்தையும் ஏற்றுக் கொண்டார். அதனால் நாங்கள் கைமாறு கருதாமல், அடியார்களைப் போலப் பணிபுரிவோம் என மலை மேகங்கள் கூறுகின்றனவாம். வெற்பின் மேவும் முகில், "நாரணன் புணர்ந்தார்; ஆள்எனும் பண்பின் கைமாறு ஏற்கிலோம்; (இது) மேல் எனும்" எனப் பொருள் முடிபு காண்க. தற்குறிப்பேற்ற அணி.*

*48. சங்கை – ஐயம். விரிதரும் – நிறைந்துள்ள. தரணி மங்கை – நிலமகள். வற்சம் – ஆன் கன்று. கன்று உறுஞ்ச உறுஞ்சப் பால் சுரத்தல் எடுக்க எடுக்க ஊற்றில் நீர் ஊறுவதற்கு உவமை. திரிவிக்கிரம அவதாரத்தில் வானைத் திருமாலின் திருவடி அளந்த போது பிரமன் ஆகாயகங்கை நீரால் புனலாட்டினான் என்பது புராணம். எனவேதான் அரிபதம் கூடும் கங்கை என்றார்.*

## குருஇருடி மலை

*(கொச்சகக் கலிப்பா)*

49 வண்டிரங்க மலர்த்தருக்கள் மதுஅளிக்கும் சோலையுடன்
பெண்டிரங்க மயக்கிலர்சார் பிரகற்ப தியின்மலைமேல்
தொண்டிரங்கல் அன்பர்இனம் தொழுதேத்தத் திருஅளிக்கும்
தண்டிரங்க நாதன்அணித் தலப்புகழ்சாற் றுவதாமே. 29

50. கானோ!மிக் கிருண்டஅந்த காரமோ! அங்கதில்தோய்
மீனோ!அச் சோலையிடை விரிமலரோ! சூல்கொண்மூ
தானோ!அங் கதன்மீது சார்மின்னோ! மின்மினியோ!
நானோஈண் டதன்வளத்தை நவின்றிடும்ஓர் வன்மையனே? 30

51. தொழுவாரும், பணிபுரிமெய்த் துணிவாரும், துதித்துருகி
அழுவாரும், "அயற்கதிஒன் றறியேன்"என் றடிமலர்க்கீழ்
விழுவாரும், அலங்கரித்து விரிந்ததுழாய் அர்ச்சனைசெய்
குழுவாரும் பொருந்தும்அதன் கொற்றம்உணர் பவர்யாரே! 31

## பாலைமலை

52. சேலைமலை விழித்திருமின் சேரும்மலை; சாருமலை;
மாலைமலை பண்பதென மைஇனத்தைத் தன்முடிதோய்
சோலைமலை; கதிவழிக்காம் சாலைமலை; தூய அருட்
பாலைமலை அம்மைகொள்அப் பாலைமலைப் பண்பெளிதோ?

*49. வண்டு இரங்க – தேனீக்கள் முரல. பெண்டிர் அங்க மயக்கு இலர் – மகளிரின் உடலைப் பார்த்து மயங்காதவர்கள். பிரகற்பதியின் மலை– குருஇருடிமலை. தொண்டு இரங்கல் – பணிவிடையும் பிரார்த்தனையும், உம்மைத்தொகை. தண்டு – கதாயுதத்தை உடைய. ஆமே – இயலுமோ, இயலாது என்றபடி.*

*50. கான் – சோலை. அந்தகாரம் – இருள். மீன் – நட்சத்திரம். சூல்கொண்மூ – நீருண்ட மேகம். வன்மையன் நானோ என்பது முடிபு.*

*51. அதன் – அந்த நாட்டின். கொற்றம் – வெற்றி, இங்குச் சிறப்பு.*

*52. சேலை மலை விழி – மீனைப் போன்ற கண்கள். சாரு – அழகிய. மாலை மலை பண்பு – பூமாலைகளை அணியும் நெறி. மை இனத்தை – மேகக் கூட்டங்களை. சோலைமலை–பூங்காக்களை உடைய குன்று. கதிவழிக்கு ஆம் சாலைமலை – வீட்டுநெறியை அடைவதற்குரிய பாதை போன்ற குன்று. அருள்பால் ஐ மலை – அருளும் தன்மையை உடைய தலைமையான வெற்பு. அம்மை கொள் அ – அழகைப் பெற்ற அந்த. எளிதோ என்புழி வினா எதிர்மறைப் பொருட்டு.*

53. ஆங்கோதை மிகஓடும் அருவியுடன் புண்ணிய நீர்
தேங்கோதை மூழ்கிடுவார் செயலோதை பாவவலித்
தீங்கோதை அறச்சாடும் திருக்கருணை விழிஞானப்
பூங்கோதை யம்மை அருட்புகழோதை மிகப்பொலியும். 33

54. கலையரங்கக் கவிப்புலவர் கணம்வியக்கும் அன்பினர்;மெய்
நிலையரங்கந் திருவருட்சீர் நீடரங்கக் கணங்களுக்குத்
தலையரங்கம் தரிசிப்போர் தாகம்அறப் புரிபாலை
மலையரங்க நாதர்புகழ் வாழ்த்திடல்மெய்த் தவம்ஆமே. 34

55. நித்தியம்நை மித்திகமா நிகழ்த்துவிழா ஆர்வமுடன்
பத்தியடி யவர்செய்திக பரமாம்சா தனங்கள்எலாம்
நத்தியவா றெய்தும்விதம் நாரணன்ஈந் திடலாலே
சத்தியவை குந்தம்இசை தலைவாயில் ஒப்பதுவே. 35

56 வாகைமலை; அன்படியார் வாஞ்சைஅனைத் தையும்எளிதில்
ஈகைமலை; அணிப்புகழ்ச்சீர் ஏறுமலை; வீறுமலை;
மாகைமலை யினம்குலவு மாட்சிமலை; காட்சிமலை;
தோகைமலை ஓகைமலை துதித்திடுநாச் சுவைமலையே. 36

*53. ஆங்குஓதை மிக – அவ்விடத்தில் ஒலி அதிகரிக்கும்படியாக. தேம் கோதை – இனிய ஆற்றில். ஓது ஐ பாவ வலி தீ கோதை – சொல்லப்படுகின்றதும் தலைமையானதும் ஆகிய தீவினை என்னும் வலிமை மிக்க தீய குற்றத்தை, தீக்கோதை எனற்பாலது மெலிந்தது. புகழ் ஓதை – கீர்த்தியின் முழக்கம்.*

*54. கலைஅரங்க – கல்வியை வளர்க்கின்ற மன்றங்களில் உள்ள. கணம் – கூட்டம். வியக்கும் – வியப்புடன் போற்றுகின்ற. மெய் நிலையர் – எந்நாளும் அழியாமல் சாசுவதமாக இருப்பவர். அங்கு அந்து இருவர் உள் சீர் நீடு – (முப்பெரும் கடவுளர்களாகிய) அவர்களுள் பொருந்துகின்ற மற்ற இருவராகிய பிரமனும், சிவபிரானும் நினைந்து பாராட்டுகின்ற சிறப்புமிக்க. அரங்கக் கணங்களுக்குத் தலையர் – போர் புரிகின்ற வீரர் கூட்டங்களுள் முதன்மையானவர். அங்கம் – திருக்கோவிலில் எழுந்தருளியுள்ள அர்ச்சாவதாரத் திருமேனியை. தாகம் – விருப்பம்.*

*55. நித்தியம் – நாள் வழிபாடு. நைமித்திகம் – சிறப்பு வழிபாடு. அடியவர் செய்து. இகபரம் ஆம் சாதனங்கள் – இம்மை மறுமை வாழ்வாகி மோக்ஷத்திற்குத் துணை புரியும் கருவிகள். நத்தியவாறு – விரும்பியபடி. வைகுந்தம் இசை – திருவைகுந்தத்தில் பொருந்தியுள்ள.*

*56. வாகைமலை – தவம் செய்வதற்குரிய வெற்பு. ஈகை மலை – கொடுத்தலை உடைய குன்று. அணி – வரிசையான. மாகை மலை இனம் குலவு – ஆகாயத்தை அளாவி உயர்ந்துள்ள மலைக் கூட்டங்கள் எல்லாம் போற்றுகின்ற. மாட்சி மலை – சிறப்பினை உடைய குன்று. காட்சி – அழகிய. ஓகை – மகிழ்ச்சியைத் தருகின்ற. மலையே – மிக அதிகமானதாகும்.*

57. கள்ளியங்காட் டிருவிமலை கனிவரங்க நாதன்மிசை
அள்ளியங்காட் டபிடேகம் ஆற்றணித்தண் டலையினிடம்
புள்ளியங்காட் டினமயில்கள் புதுத்தோகை விரித்தாடும்
வெள்ளியங்காட் டணித்தாகி விளங்குபெரு மகிமையதே. 37

58. தறைமுகம்தோய் உயிர்களைமெய்த் தயவதனால் பேரருட்சீர்
நிறைமுகம்தோய் தரக்கூட்டும் நீள்அரங்க நாதமெய்ப்பேர்
இறைமுகம்தோய் தரக்காட்டி, இசைவைகுந் தம்புகுத்தும்
துறைமுகந்தான் எனப்பொலிசீர்த் தோகைமலைப் புகழ்எளிதோ?

59. சேணகத்தாம் மழைமுகிலைத் தெரிசித்த மாத்திரத்தே
மாணகத்தாம் ஓகைமிக மலிந்தாடும் தோகைமலை
தூணகத்தே நரசிங்கம் தோன்றஅழைத் திரணியற்கும்
காணகத்தா ர்வம்செய்பிர கலாதன்மெய்ப்பே றிடும்அம்மா! 39

நீலமலை

60. ஞாலமலை யாவினுக்கும் நன்மைமலி தருசீலக்
கோலமலை; மிக்கஅநு கூலமலை; பச்சைவள
நீலமலை; எம்பெருமான் நேரும்மலை ஆகியமெய்
நீலமலை யின்மகிமை நிகழ்த்திமுடித் திடலாமோ? 40

*57. கள் இயம் காட்டு இருவி மலை – தேனீக்களைத் தன்பால் பார்க்கச் செய்கின்ற தினைப்புனங்களை உடைய குன்று. கனிவு – அருள்மிக்க. அள்ளி அங்கு ஆட்டு அபிடேகம் ஆற்று; அங்கு – அசை. தண்டலையினிடம் – சோலைகளில். புள்ளி அம் காட்டு – தோகையில் கண்களின் அழகைக் கொண்டுள்ள. இன – கூட்டமான. வெள்ளியங்காடு – ஓர் ஊர். அணித்தாகி – அருகில்.*

*58. தறை முகம்தோய் – நில உலகில் உள்ள. தறை – எதுகை நோக்கிய போலி. தயவு அதனால் – கருணையால், அது பகுதிப்பொருள் விகுதி. பேர்இறை – பெயரை உடைய கடவுள். இசை – புகழ்மிக்க.*

*59. சேண் அகத்தாம் – வானில் உள்ள. மாண் அகத்து ஆம் ஓகை – மாட்சிமை மிக்க உள்ளத்தில் உண்டாகும் உவகை. தூண் அகத்தே – கம்பத்தில். அழைத்து இரணியற்கும் காண் அகத்து ஆர்வம்.*

*60. ஞால – உலகில்உள்ள. கோல – அழகிய. அநுகூல – பல நன்மைகளைச் செய்கின்ற. பச்சை வள நீல மலை – பசுமையான வளத்தையும் நீல நிறத்தையும் உடைய குன்று. நேரும் – (நிறத்தால்) ஒப்பாகும்.*

61. தாக்கிலா தவன்;இசையும் சராசரங்கள் முற்றமைந்து
நீக்கிலா தவன்; எவரும் நிகர்இலா தவன்;வரத்துப்
போக்கிலா தவன்அடியைப் புந்தியிடம் கொண்டு தவம்
சாக்கிலா தன்புரியும் தக்கபுகழ் நீலமலை. 41

62. வானிடத்தாம் தேவர்கட்கும், மருவரிய தாரணிதோய்
மானிடத்தாம் சீலருக்கும், வல்அரக்க ராம்பெயர்தோய்
ஊனிடத்தாம் பான்மையர்க்கும் உள்ளவிருப் புதவிடும்எம்
கோனிடத்தா கியநீலக் குன்றருமை உணர்வரிதே. 42

63. பரிசிக்கில், அபிடேகம் பண்ணில்,அதி சேணில்நின்றும்
தரிசிக்கில், அங்கவர்கள் சனனம்இருப் பிறப்பெனவே
விரிசிக்கில் லாதொழிந்து மிக்கபுகழ்ப் பரமபதத்து
அரிசிக்கின் பிடுநீல அணிக்கிரிச்சீர் அளப்பரிதே! 43

*61. தாக்கு இலாதவன் – பிரபஞ்சத்தின் பொருள்களில் எதனுடைய தாக்கமும் இல்லாதவன்; திருமால் அண்டவெளியின் சராசரப்பொருள் எல்லாவற்றிலும் நிறைந்துள்ளான்; என்றாலும் அவன் அப்பொருள்களின் நன்மை தீமைகளால் பாதிக்கப்படுவது இல்லை. அழுக்குக் குட்டையில் பிரதிபலித்தாலும் சந்திரன் குட்டையின் அழுக்கினால் பாதிப்படையாததைப் போன்றது இது. சராசரங்கள் முற்றும் அமைந்து என முற்றும்மை விரிக்க. வரத்து போக்கு – பிறப்பு, இறப்பு; திருமால் நம்மைப்போல இருவினைகளின் பயனாகப் பிறப்பதோ இறப்பதோ இல்லை; உயிர்கள் மாட்டுக் கொண்ட பெருங்கருணையால் திருவிளையாட்டாக அவதாரம் செய்கிறார். "இறப்பதே பிறப்பதே எனும் விளையாட்டு இனிது உகந்தோய்" என விராதன் கூற்றாகக் கம்பன் கூறுவான். (விராதன் வதைப். 50) அடியை – திருமாலின் திருவடிகளை. புந்தியிடம் – அறிவில்.*

*62. வான் இடத்து – மேல் உலகில். தாரணி – நில உலகம். மானிடப் பிறவி அரியனவற்றுள் அரியது ஆதலின் மருவரிய என்றார். "அரிது அரிது மானிடர் ஆதல் அரிது" என்பாள் ஔவைப்பிராட்டி. (தனிப்பாடல்) ஊன் இடத்து ஆம் பான்மையர்க்கும் – உடலினிடத்துப் பிறவி அமைந்த தன்மையர்க்கும், அரக்கர்கட்கும் என்றபடி. உள்ள விருப்பு – மனத்தின் வேட்கை.*

*63. பரிசிக்கில் – அர்ச்சாவதாரத் திருமேனியைத் தொட்டாலும். அதிசேணில் நின்றும் – வெகு தூரத்திலிருந்தும். அங்கு – அப்போது, காலச்சுட்டு. அவர்கள் (தொட்டும் புனித நீராட்டியும் எட்ட இருந்து பார்த்தும் வழிபட்ட) அந்த அடியார்கள். இருப்பு – வாழ்வு. விரி சிக்கு – அதிகமாகிக்கொண்டே செல்லும் வாழ்க்கைச் சிக்கல், வினைத்தொகை. இல்லாது ஒழிந்து. அரி சிக்கு இன்பு இடு – திருமால் கிடைப்பதாகிய பேருவகையில் வைக்கின்ற. அணிக்கிரி – அழகிய மலை.*

64. "வஞ்சரங்கம் உற்றவர்கள் வந்துதொழும்" எனமுடிதோய்
மஞ்சரங்க மாய்மின்இடி வகையால்காட் டுபு,கூவும்
பஞ்சரங்கங் களின்முல்லைப் பால்படும்ஓர் காரைவன
மிஞ்சரங்க நாதன்இசை மிகப்பின்விரித் திசைக்கின்றாம். 44

65. எல்லைஅமைந் திடும்கதிர்கள் என்றும்நுழைந் தறியாத
அல்லைஅமைந் திடும்சோலை அணிக்குறிஞ்சி வளம்முடித்து,
தொல்லைஅமைந் திடும்அரிக்குச் சொந்தம்எனப் புலவர்புகழ்
முல்லைஅமை அணிநூலின் முறைக்கடுப்பச் சிறிதிசைப்பாம். 45

## முல்லை

*(கலித்துறை)*

66. யதுவ னாய்உதித் தருள்கிருட் டினப்பெயர் இறைவன்
பொதுவ னாவிளை யாடிடத் திருவுளம் பொருந்தி,
பொதுவ னாகிடப் புகுந்தரு ளாடல்கள் புரிந்து,
முதுவ னாம்என வாழ்ந்தது கொல்லைசேர் முல்லை. 46

*64. வஞ்ச ரங்கம் உற்றவர்கள் – மாயையால் துன்பப்படுபவர்களே, (மாயையின் போராட்டத்தை உடையவர்களே என்பது நேர் சொற்பொருள்) மஞ்சு அரங்கமாய் – மேகங்களுக்குப் பயிலிடமாய். காட்டுபு – காட்டி. கூவும் – அழைக்கும். பஞ்சரங்கங்கள் – திருமால் கோயில் கொண்டுள்ள ஐந்து அரங்கப் பெயர்த்தலங்கள். அவையாவன : 1. ஸ்ரீரங்கம் என்னும் திருவரங்கம், சுவாமி – அரங்கநாதர். தாயார் – அரங்க நாயகி. சயனம் – புஜங்க சயனம். 2. தஞ்சை – திருத்துறைப்பூண்டி – வேதாரணியம் பேருந்துவழியில் உள்ள ஆதிரங்கம் என்னும் அபிமானத் தலம். பெயர்கள் யாவும் திருவரங்கம் போலவே. இவை இரு தலங்களும் ஆதிரங்கம் என வழங்கப்படும். 3. கும்பகோணம் என வழங்கப்படும் திருக்குடந்தை சாரங்கபாணி கோவில். சாரங்கபாணி, கோமளவல்லி, உத்யோக சயனம். இந்தத் தலம் மத்யரங்கம் எனப்படும். 4. மாயவரம் எனப்படும் மயிலாடுதுறையின் பகுதியாகிய திருஇந்தளூர். பரிமள ரங்கநாதர், பரிமள ரங்கநாயகி, வீரசயனம். 5. இந்தக் காரைமடை. மேற்குறித்த ஐந்தில் முதல் நான்கும் மருத நிலத்தில் அமைய ஐந்தாவதாகிய காரைமடை முல்லையில் அமைந்துள்ளது. முல்லைநிலம் திருமாலுக்குச் சிறப்புரிமை வாய்ந்தது ஆதலின் இது அவற்றைவிடச் சிறப்பு வாய்ந்தது என்கிறார்.*

*அரங்கநாதன் மிஞ்சு இசை என இயையும். மிஞ்சு இசை – நாளுக்கு நாள் வளரும் புகழ், வினைத்தொகை.*

*65. எல்லை அமைந்திடும் – சூரியனின்பால் பொருந்தியுள்ள. அல்லை – இருளை. "கதிர் நுழைகல்லா மரம்பயில் கடிமிளை" (புறம்.21) தொல்லை – பழைமை. அரி – திருமால். அணி – வளம். முறைக்கு அடுப்ப – மரபிற்கேற்ப.*

*66. யதுவன் – யதுகுலத்தவன். பொதுவனா – (2ஆம் அடி) அனைவருக்கும் பொதுவானவன் ஆக, (3ஆம் அடி) இடையனாக. முதுவன் – அறிஞன். கொல்லை – புன்செய்.*

67. ஆயம் என்கைஆ தாயமே ஆதலின் அதனைத்
தோய வாஞ்சைஉற் றவர்எலாம் சுரபியாம் நாம-
தேயம் உற்றிடும் பசுஅமை பதிகொள்எம் செல்வ
நேயம் ஆர்இடைப் பாடிகொள் வீர்என நேர்வார். 47

68. கடையர் ஆயினார் தமக்கு,"உயர் தன்னையே காட்டா,
உடையன் நல்லன்;யாம் பாசமே காக்கும்;உம் தம்மை
அடைய வேஅறை கூவிப்புண் ணியம்உற அமைக்கும்
இடைய ரே"எனத் தாம்அறை கூவுவர் இசைந்தே. 48

69. இடையர் யாம்;துறக் கத்துளோர் எம்பெயர்ப் பாதி
கெடையர் "மேதைதோய் கொலைபொலி வேள்விஅக் கிரமக்
கொடையர் யாண்டையர் யாண்டையர்?" என்றுகொண் டுண்ணும்
மடையர் என்றரு வருத்துக்கோப் பூசைசெய் மரபார். 49

70. உரிய ஆன்சுதை கொண்டதை அட்டதன் உருவு
திரிய வே,தயிர் ஆக்கி,அங் கதைஇடைச் சியர்கள்
விரிய மச்சிகை வெண்ணெய்ஆக் கிடமிகக் கடைந்து
பிரிய வைத்திடற் கழுவபோன் றிரங்கொலி பெருக்கும்.

*67. ஆயம் – நண்பர்கூட்டம், இலாபம் என இருபொருள். அதனை – இலாபத்தை. சுரபி – பசு. நாமதேயம் – பெயர். பசு அமை பதி – இரட்டுறமொழிதல், ஆனினம் உள்ள ஊர், உயிர்களின் தலைவன் ஆகிய கடவுள். இடைப்பாடி – ஆயர்கள் வாழும் ஊர்.*

*68. கடையர் – ஆன்மிகத்தில் தாழ்நிலையினர். உயர் – அனைத்திலும் உயர்ந்த பொருள் ஆகிய. தன்னை என்றது பரம்பொருளாகிய திருமாலை. காட்டா – காண்பித்து. உடையன் நல்லன் – எம்மை ஆட்கொண்டுள்ளவராகிய திருமால் சகலகல்யாண குண சம்பன்னன். யாம் – இடையர்களாகிய நாங்கள். பாசமே – பத்தியையே, ஏகாரம் பிரிநிலை. அடையவே – முற்றிலுமாக, எல்லோரையும். இங்குள்ள ஆயர்கள் இழிந்தவர்களை நோக்கி, "நாங்கள் உங்களுக்கும் முதல்வனுக்கும் தொடர்பு ஏற்படுத்தித் தரும் இடையர்கள்" என்பர்.*

*69. யாம் இடு ஐயர் – தருகின்ற தலைமைப் பண்பினர், ஆயர். துறக்கம் – தேவர் உலகு. எம்பெயர்பாதிகெடு ஐயர் – இடையரி ஒரு பகுதி நீங்க மீதம் உள்ள பகுதி ஐயர், ஐயர் – தேவர். மேதை – இறைச்சி. அக்கிரம – அநியாய. கொடையர் – ஊனைத் தருபவர், கொடுமையான அய்யர் என இருபொருள். மடையர் – அறிவற்றவர். அருவருத்து. கோப்பூசை – பசு வழிபாடு. இடையர் என்னும் பெயரில் பாதி ஆகிய ஐயர் என்னும் பெயர் பெற்றுள்ள தேவர்கள் புலைவேள்வி புரியும் கொடுமைமிக்க அய்யர் எங்கே உள்ளனர் எனத் தேடி, அவர்தரும் ஊனாகிய அவிசை ஏற்றுச் சாப்பிடுகின்றனர் என அருவருப்புக் கொண்டு, அவர்களை வழிபடாமல் பசுக்களுக்குப் பூசை செய்கின்றனர் என்றவாறு.*

*70. ஆன்சுதை – பசும்பால். அட்டு – காய்ச்சி. விரிய – மிகுதி ஆகும்படி. அழுவபோன்று – தயிரிலிருந்து வெண்ணெயைப் பிரித்து எடுப்பதால் வருந்தி அழுவதைப் போல.*

71. மிடைய வேகுமிழ் பூத்துநின் றசையும்விம் மிதச்சீர்
அடைய லாம்கொங்கு நாட்டிசை தன்னைஉய்த் தறிய
உடைய நாசிநும் தமக்கிலை தருக்களே உமக்குக்
கொடைசெய் வேன்என்பால் வம்மின்என் றழைத்தலிற்குலவும்.

72. கொல்லை ஆனிரை மணித்தொனி கேட்டுளம் குளிரும்
முல்லை காத்தமை மாதர்தோய் முல்லைநீர் மொழிந்தேன்;
செல்லை ஊர்புரந் தரன்புரந் திடும்அதி செழிப்பார்
எல்லை யாமரு தத்திணை யினிற்சிறி திசைப்பாம் 52

மருதம்

*(கொச்சகக் கலிப்பா)*

73. காத்திடும்ஓர் செயல்முழுதும் கவின்றதிரு மலர்உந்தி
பூத்திடும்ஓர் தனித்தலைமை பூரணற்கே உரித்தாம்என்று
ஏத்திடு,வா னோர்கோமான் இசைபுறவத் தயலாக
வாய்த்திடுபேர் அணிமாட்சி மருதநிலத் திறை ஆனான். 53

74. நீர்அலைத்துச் சேறலைத்து, நெடுவானம் மீதவிரும்
கார்அலைத்தப் புறம்ஓடும் கவின்றவரா லினம்முன்னாள்
சூர்அலைத்த பின்னாகும் துறக்கவளத் துடன்,கற்பத்
தார்அலைக்கு முதற்கண்டு தரிசனம்ஆற் றிடல்கடுக்கும். 54

*71. மிடையவே – நெருக்கமாக. குமிழ் – குமிழம்பூ, இது அழகிய மூக்கிற்கு உவமை. விம்மிதச் சீர் – அதிசய அழகு. அடையலாம் – முழுமையாக. கொங்கு நாட்டு இசை தன்னை – நறுமணம் மிக்க தேசத்தின் இனிமையை, தன் பகுதிப் பொருள் விகுதி. தருக்களே – மரங்களே. கொடை – தானம். குமிழ்பூத்து நின்று அசையும் சீர், "தருக்களே! நாசிநுந் தமக்கு இல்லை; என்பால் வம்மின்; கொடை செய்வேன்" என்று அழைத்தலில் குலவும் என்பது பொருள் முடிபு.*

*72. கொல்லை – புன்செய். முல்லை – 1 கற்பு 2 முல்லை நிலம். நீர் – தன்மை. செல்லை – மேகத்தை. ஊர் – வாகனமாகச் செலுத்துகின்ற. புரந்தரன் – இந்திரன். மருதத்திணை – ஆற்றங்கரையில் அமைந்து வயல்சார்ந்த நிலப்பகுதி. இசைப்பாம் – கூறுவோம்.*

*73. பூரணற்கே – (இங்கு) திருமாலுக்கே. ஏத்திடு – போற்றுகின்றவனாகிய. வானோர் கோமான் – தேவராஜா, இந்திரன். இசை – புகழ்மிக்க. புறவத்து – முல்லை நிலத்திற்கு. இறை – தலைவன். மருத நிலத்திற்கு உரிய கடவுள் இந்திரன் என்பது அகப்பொருள் மரபு.*

*74. கார் – மேகம். வரால் இனம் – மீன் கூட்டங்கள். சூர் – சூரபதுமன். துறக்க – சுவர்க்கத்தின். கற்பத்தார் அலை – கற்பகப் பூமாலை அசைகின்ற அசைப்பைஉடைய, இடைக்குறை. குமுதற் கண்டு – சந்திரனைப் பார்த்து.*

75. ஆறெனும்தன் பெயர்க்கடுப்ப, அமையும்வழி வினவிஉற்று
வேறெனும்ஃ. றுறைகளினும் விரவி,உறும் கால்வாயாய்க்
கூறெனச்சென் றணிவயலுட் குறுகி,மண்ணோ டுறவமைந்து,
சேறெனும்பேர் பெற்றதுநீர் சேர்ந்தபொருட் பண்பில்அம்மா! 55

76. தலைவனது வண்ணமதே தலைவியும்எய் திடல்என்னக்
கலைஉணர்வோர் மொழிகடுப்பக் கவின்தருபூ மகளானாள்
நிலைபெறும்ஐந் திணையாகி, நேர்மருத மாய்,அதனுள்
குலைவயலாய் நாற்பாகம் கொண்டுதொழிற் படநிலவும். 56

77. தரம்படும்அவ் வயலகத்தில் தக்கபொன்னேர் கட்டி,அதில்
குரம்படுபூ ணிகட்கட்டிக் கொண்டபடைச் சாலாக்கிக்
கரம்படுதன் மையின்மேலாம் கண்ணாடி போல்அமையப்
பரம்படிப்பார் - உள்ளகத்தாம் பரம்பதிப்பார் போல்மகிழ்ந்தே. 57

78. சேறமையும் வயலகத்தில் செழுங்களமர் கடைசியரை
நாறமைக்கப் புரிந்து-தன்ஓர் நந்தனற்குத் தாயவள்ஓர்
ஊறமையா வணம்காப்ப தொப்பாய்-நீர் வடித்துவிட்டு,
வீறமையும் படிவளர்த்து, விழிவிருந்தாக் குபுமகிழ்வார். 58

*75. ஆறு – நதி, வழி. பெயர்க்கு அடுப்ப – நாமத்திற்குத்தக. கூறு என – ஒரு பகுதியாக. நீர் – 1. தண்ணீர் 2. அன்பு. நதி தண்ணீர் பெற்றதால் (அன்புடைமையால்) மண்ணோடு, சேர்ந்து சேறாகியது.*

76. வண்ணம் – தன்மை. கலை – இங்கு அகப்பொருள் இலக்கணம். பூமகள் – நிலமடந்தை. ஆனாள் – பகுதிப்பொருள் விகுதி. குலைவயல் – பயிர்கள் அசைவதற்கிடமாகிய செய், குலை – முதனிலைத் தொழிற்பெயர், அசைதல்.

*77. தரம்படும் – விளைச்சலைக் கொண்டு தரம் பிரிக்கப்படுகின்ற. குரம்படு பூணிகள் – காலில் குளம்புள்ள எருதுகள். படைச்சால் – உழவு சால். பரம்படித்தல் – வயலைப் பலகையால் தட்டிச் சமதளம் ஆக்குதல். பரம் பதிப்பார் – பரம்பொருளை நிலைபெறச் செய்வார். மகிழ்ந்தே பரம்படிப்பார் என்க.*

*78. களமர் – மருதநில ஆண்மக்கள். கடைசியர் – உழுதொழில் புரியும் மகளிர். நாறு அமைக்க – நாற்று நட, இடைக்குறை. நந்தனற்கு – மகனுக்கு. ஊறு – தீமை. வீறு – செழிப்பு. ஆக்குபு – செய்து. களமர் எழுவாய், மகிழ்வார் பயனிலை.*

79. களைஎனஉற் றமைகளையக் களமர்விட, கடைசியர்கள்
விளைஎனஇந் திரத்தெய்வம் மிகப்போற்றிப் பரிந்தியற்றத்
திளைஎனத்தங் கரப்பரிசம் சேர்தரும்ஆ டவரேபோல்
சளைவறமெய் பசந்து,விண்ணம் தனைநோக்கி வளர்ந்தனவே.

80. வாணிஎன முன்அவிர்ந்து, மலைமகள்போல் பின்பசந்து,
காணிஎன உற்றபெருங் காசினிமங் கையின்நிறமாய்
நாணி,முகந் தனைச் சாய்த்து, நற்பதிவீட் டிசைமடவார்
பாணியில்நின் றன;அம்மா! பயன்பொருந்தும் சாலிகளே. 60

81. தெரிவளமைக் களமர்எலாம் திரண்டு,குயத் தால்அரிந்தே,
அரிவைஎனப் பின்ஆகும் அத்திரம்காட் டினர்;பின்போர்
புரிபவர்பொன் னுலகுபுகப் போவார்போன் றனர்-தருமப்
பரிவினர்தம் உயிர்க்கிதம்செய் பரிசினைக்காட் டுவர்கடுத்தே. 61

*(அறுசீர் விருத்தம்)*

82. மேகம் அடுக்கும் போர்பிரித்து,
மேதி யினத்தால் மிதிப்பித்துப்
பாகம் அடுக்கும் பலாலத்தைப்
பகுத்துப் பதடி களைத்தூற்றி,

*79. களமர் களை களைய விட. விளை என – நன்குவிளைக என்று. பரிந்து – அன்போடு. திளை – (தொடும் இன்பத்தை) அநுபவித்தல், முதனிலைத் தொழிற்பெயர். கரப்பரிசம் – கையால் தொடப்படுதல். சளைவு அற – வாட்டம் நீங்க. பசந்து – பசுமை நிறம்பெற்று. விண்ணம் – ஆகாயம். கடைசியர்தம் கைகள் பட்ட பயிர்கள் அவரால் தொடப்பெற்ற கணவரே போல வளம்பெற்றன என்றவாறு.*

*80. வாணி – கலைமகள், இவள்நிறம் வெண்மை. பசந்து – பச்சையாகி. பதிவீடு இசை மடவார் – கணவன் வீட்டிலுள்ள மகளிரின். பாணியில் – தன்மையில். சாலிகள் – நெற்பயிர்கள்.*

*81. குயத்தால் – அரிவாளால். அரி வை – அரியப்பெற்ற வைக்கோல். அதிரம் – அந்த நிலை. போல் – நெற்போர். போரின் உயரம் வானளாவி இருந்தது என்பது கருத்து. தருமப் பரிவினர் – அறம் புரியும் அன்பினர்.*

*82. மேதியினம் – எருமைக் கூட்டம். பாகம் அடுக்கும் – பக்குவம் அடைந்த, நன்கு முதிர்ந்த, பலாலம் – வைக்கோல். பதடி – பதர். யோகம் அடுக்கும் – அதிருஷ்டம் மிகுகின்ற. அதிதி – விருந்தினர். ஏக – போகும்படி, மடுக்கும் – உட்கொள்ளும். விருந்திடுவார் – வினையாலணையும் பெயர், எழுவாய். அருந்திடுவார் – பயனிலை.*

யோகம் அடுக்கும் மனைக்கூண்டுள்
உறுத்தி, அதிதி களின்பசிநோய்
ஏக மடுக்கும் விருந்திடுவார்
இருமைப் பயனும் அருந்திடுவார். 62

83. அறப்பால் அமைந்த குடிகள்எலாம்
அன்பு மிகவாய்ந் துறும்மனிதப்
பிறப்பால் அடையத் தகுபலவாம்
பேறும் பொருந்தி, உயிர்க்குயிராய்ச்
சிறப்பால் அமையும் காரைவனச்
செல்வன் கழற்காம் பெருங்காதல்
திறப்பா லவர்மெய்க் கொங்கணிஎன்
செப்பின் அடங்காச் சீர்ப்பினதே. 63

84. முடியா அறமும் அன்பும்மிக
முதிரும் மாட்சி யினர்தமையே
குடியாத் தன்பால் உறும்வண்ணம்
கொண்ட கொங்கு நாட்டணிஎன்
படியால் அளத்தற் கியலாத-
படியால் முடித்து நகர்வளத்தைப்
பிடியா எடுத்தோர் சிறிதீண்டு
பேசத் துணிந்தேன் புலவீர்காள்! 64

*நாட்டுப் படலம் முற்றிற்று.*

*83. அறப்பால் – அறத்தின் பயனாக. பேறும் என்புழி முற்றும்மை. திறப்பாலவர் – திண்மை உடையவர்கள் நிறைந்த. கொங்கின்மெய் அணி என மாறுக. கொங்கு நாட்டின் உண்மையான சிறப்பு. செப்பின் – சொற்களில்.*

*84. குடியா – குடிமக்களாக. படியால் – தரத்தால், கொள்அளவு ஆகிய படியைக் கருதி என், அளவால் எனக் கூறினும் ஆம். பிடியா பிடித்து, எடுத்துக்கொண்டு ஈண்டு. சிறிது பேசத் துணிந்தேன் என்க.*

## 2. நகரப்படலம்

(கலித்துறை)

85. நீரை யேஉடை யாக்கொடன் னதன்மிசை நிலவும்
பாரை யேதன துருவமாக் கொண்டபூம் பாவைக்கு
ஏரை மேவிய கொங்குநா டானனம் இசையும்;
காரை மாவனம் திலகம்என் றுரைத்திடக் கவினும் 1

86. பாய கங்கைஊற் றிசைதரும் படி,உளப் பரிவில்
தோய கம்கையால் வருடுபூ மகட்கருள் சுரக்கும்
நாய கம்பெறும் இரங்கநா தன்மெய்மேல் நயந்து
தாய கம்பெறல் காட்டிடும் காரையம் தலமே 2

### தலத்தின் வேறு பெயர்கள்

(அறுசீர் விருத்தம்)

87. சீரையூர் காம தேனு
சிறப்புமுன் பூசை ஆற்றப்
பேரையூ ரதுதான் மேலைச்
சிதம்பரப் பேர்பெற் றாங்கு,
நாரையூர் தேனு ஈண்டு
நயந்துபூ சித்த லாலே,
காரைமா வனம்மேல் சீரங்-
கம்எனக் கவினும் மாதோ. 3

*85. கொடு அன்னதன் மிசை. பாரையே – நில உலகத்தையே, பிரிநிலை ஏகாரம். பூம்பாவைக்கு – அழகிய பெண்ணிற்கு. ஏரை மேவிய – அழகு பொருந்திய. ஆனனம் இசையும் – முகமாகப் பொருந்தும். திலகம் – நெற்றிப் பொட்டு.*

*86. பாய – பெருக்கெடுத்து ஓடும்படி. தோய் – பொருந்துகின்ற. அகம் – உடல். பூ மகட்கு – நில மடந்தைக்கு. நாயகம் – தலைமை. தாயகம் – வசிப்பிடம்.*

*87. சீரை ஊர் – சிறப்புப் பொருந்திய. பேரையூர் – பேரூர், இது மேலைச் சிதம்பரம் எனப்படும். நாரை ஊர் – அன்பு பொருந்திய. தேனு – பசு. மேல் சீரங்கம் – மேற்குத் திசையின் திருவரங்கம். கோயில்என்ற மாத்திரத்தில் சைவத்திலும் வைணவத்திலும் முறையே சிதம்பரம், ஸ்ரீரங்கம் என்பனவே நினைக்கப்படும். காமதேனு பூசித்ததால் பேரூர் மேலைச் சிதம்பரம் எனவும் காரைமடை மேலைத் திருவரங்கம் எனவும் பெயர் பெற்று விளங்குகின்றன.*

88. சண்பக வனம்அ தன்பின்
சமிவனம், பின்யு கத்தில்
பண்பவிர் சுரர்வ னம்,சீர்
பரவுகா ரைவனம், காரா
நண்பதி, அன்பார் தாத
நகர்இணைச் சேவைக் காட்சி
வண்பதி, அரங்க வாசம்,
வளர்கல்யா ணபுரி மாதோ. 4

89. சத்திய நகரம், சாக்கி
லாதன புரமே, இன்ப
சித்திஆர் பஞ்ச ரங்க
சிரேட்டம்,வான் மீக கேத்ரம்,
முத்திசா தனபு ரம்,சீர்
முதிர்சுரர் நிவேசம் என்ன
ஒத்திசை காரணப் பேர்
உற்றிசை மகிமைத் தாமால் 5

90. சாபத்தால் அயர்ந்து முன்ற
சதுர்முகன், இந்தி ரற்காம்
சோபத்தை நீக்கி அன்னோர்
தொன்மைநல் கியதி றத்தால்
ஆபற்பாந் தபுரம், விண்சால்
அசரீரி புரமாய் ஞான
தீபச்சீர்ப் பதிக்கு வாய்ந்த
திருப்பெயர் பலவாம் மாதோ! 6

*88. கிருதயுகத்தில் சண்பக வனம், துவாபரயுகத்தில் சமிவனம் (வன்னிக்காடு), திரேதாயுகத்தில் சுரர்வனம், கலியில் காரைவனம், கார் ஆ – காராம் பசு. நண் பதி – பொருந்தும் ஊர். தாத நகர் – தாசர்களுக்கு உரிய தலம். இணைச் சேவை – பந்த சேவை. தண்ணீர சேவை ஆகிய இரு வழிபாட்டு முறைகள். வண் பதி – வளம் மிக்க ஊர். அரங்கவாசம் – அரங்கநாதரின் இருப்பிடம்.*

*89. கேத்ரம் – க்ஷேத்திரம், தலம். நிவேசம் – வசிப்பிடம். ஒத்து இசை – பொருத்தமாகப் பொருந்திய. மகிமைத்து ஆம் அசை. பஞ்சரங்க சிரேட்டம். ஐந்து அரங்கப்பதிகளிலும் தலைமையானது, 64ஆம் பாடலின் குறிப்புரை காண்க.*

*90. சதுர்முகன் – நான்முகன், பிரமன். சோபம் – வருத்தம். தொன்மை – பழைய நிலை. ஆபற்பாந்த புரம் – ஆபத்தில் உதவுகின்ற தலம். ஞானதீப சீர்ப்பதி – அறிவுவிளக்கைப் போன்ற சிறப்பை உடைய ஊர்.*

91. மறம்நகர்த் திடமுன் செய்த
மாதவத் தொண்டர் மேவும்
அறநகர், தெய்வத் தொண்டே
அமைநகர், செல்வம் ஓங்கும்
திறநக ரான காரைத்
திருநக ரதன்பால் ஆன
புறநகர்ப் பெருமை தன்னைப்
பேசுதும் புலவர் போற்ற. 7

### புறநகர் - சோலை

92. சோதிமா மரம்,அ சோகு,
சூதம்,மந் தாரம், வேங்கை,
கோதில்சண் பகம்,ப லாசு,
கோங்கு,கூ விளம்,கு ருந்து,
போதி,பா டலம்,க டம்பு,
புன்னை,தா தகி,கூ தாளம்
ஆதியாம் தருக்கள் கொண்டே 8
அணிமிகப் பொலியும் சோலை.

93. மாணவிர் அடியைப் பூமேல்
வைத்துயர் முடிமேல் அம்பூக்
காணலாம் தருக்கள் எல்லாம்
கடவுளர்க் கிருக்கை நல்கும்
சேணகத் தருவைப் பார்க்கச்
சென்றிடல் கடுக்கும்; மேற்றோய்
பாணளி இசைமே லாகப்
படர்நெறி பகர்தல் போலாம். 9

*91. மறம் – அறம் அல்லாதனவாகிய தீச்செயல்களை. நகர்த்திட அகற்றிவிடுவதற்காக. திற நகர் – வலிமை மிக்க ஊர், என்றும் அழியாமல் நிலைத்திருக்கும் பதி எனினும் அமையும், இப்பொருளில் ரகரம் எதுகை நோக்கிய போலி.*

*92. அசோகு – செயலை, பிண்டி என்றெல்லாம் வழங்கும் ஒரு மரவிசேடம். சூதம் – மாமரம், கோது இல் – குற்றமற்ற. பலாசு – புனமுருக்கு. கூவிளம் – வில்வமரம். குருந்து – காட்டு நாரத்தை. போதி – அரசமரம். பாடலம் – பாதிரி, தாதகி – ஆத்தி. ஆதியாம் – முதலிய. தருக்கள் – மரங்கள்.*

*93. மாண் அவிர் – மாட்சிமை மிக்க. அடியை – அடிப்பாகத்தை. பூமேல் – நிலத்தின்மீது. முடிமேல் – தலையில். அம்பூ – அழகிய மலர்கள். இருக்கை – வசிப்பிடம். சேண்அகத் தருவை – வான்நாட்டு மரங்களை. கடுக்கும் – நிகர்க்கும். மேல் தோய் – மலர்களில் பொருந்துகின்ற. பாண் அளி – இசைபாடும் வண்டுகளின். படர்நெறி – போகும்வழியை.*

94. தருஎனச் சாற்றும் தம்பேர்
சரதகா ரணச்சீர் ஆக்க
மருமலர் தரும்;தம் கீழே
வரநிழல் அளிக்கும்; சால
உருசிசால் கனிகள் ஈயும்;
உலர்ந்தஇந் தனம்வ ழங்கும்;
எருஎனத் தம்கீழ் மண்ணும்
ஈயும்தம் உருவும் அம்மா. 10

95. ஈதலே யன்றி மேலோர்
இரத்தலே இன்ற தன்சான்று
ஆதலே யாமாய் நிற்க
அறிவிலார் ஆவி யோடு
சாதலே பெற்ற லோபச்
சடநரர்க் குவமை எம்மை
ஓதல்என் எனக்கண் ணீர்விட்
டளியினால் அழுது ணர்த்தும். 11

96. வாழ்வதும் தாழ்வ தும்தான்
மண்ணல; விண்மீ தும்தோய்
ஏழ்வகைப் பிறப்புற் றோர்க்கும்
எய்தல்என் றாண்டு தோறும்
வீழ்வதாம் இலைகீழ் விட்டு,
மென்தளிர் கொண்டு வந்து,
தாழ்வகை யோர்க்குப் போதம்
சாற்றிடும் தருக்கள் மாதோ. 12

*94. சரத – உண்மையான. மரு – மணம் மிக்க. சால – மிகவும். இந்தனம் – விறகு.*

*95. இன்று அதன். லோப – கருமித்தனம் உடைய. சட – சிந்திக்கும் தன்மை இல்லாத, கண்ணீர் – 1. கள்நீர். 2. விழிப்புனல். அளி – 1. அன்பு 2. வண்டு. அழுது – விம்மி.*

*96. மண் அல – மண்ணுலகின் மட்டும் அல்ல. என்று – என உணர்த்த. ஆண்டுதோறும் – வருடாவருடம் இலையுதிர் காலத்தில். கொண்டு உவந்து. தாழ்வகையோர் – கீழ்நிலையில் உள்ளவர். போதம் – அறிவு.*

97. ஓங்கிய கனியின் சாறும்,
ஊழ்த்தபூ அமையும் தேனும்
ஏங்கியல் அளியர்க் கீந்திட்டு,
எஞ்சிய வற்றை எல்லாம்
தாங்கிய தாமே உண்டு
சாற்றுமுன் வடிவாச் செய்து,
பாங்கினர்க் குபகா ரங்கள்
பண்ணிடும் தருக்கள் அம்மா! 13

98. "அருச்சனை மலர்கள் ஈவேம்;
ஆட்டிடக் கனிகள் ஈவேம்;
திருப்பணிக் கெமது மெய்யும்
சிறப்புறக் கொடுப்பேம்" என்ன
விருக்கசா லங்கள் எல்லாம்
மேன்மைமா னிடம்என் றோதும்
உருப்படைத் தார்க்கு வேண்டும்
உதவியே சாற்றா நிற்கும். 14

99. வரங்கமழ் சீர்த்திக் காரை
வனத்தின்எம் பெருமாற் குற்ற
புரங்கவின் றிடவி ளங்கும்
புறநகர் வாசம் கொண்ட
மரங்களின் மாட்சி என்னோர்
மனம்கரைத் துருக்கும் என்னில்
நரங்களின் மகிமை ஓதல்
நம்பரம் அன்று போலும். 15

*97. ஊழ்த்த – உதிர்த்த. ஏங்கு இயல் அளியர்க்கு – ஒலிக்கின்ற தன்மையை உடைய வண்டுகளுக்கு, ஏங்குகின்ற பரிதாபத்திற்கு உரியவர்களுக்கு என்பது தொனி, பாங்கினர்க்கு – அருகில் இருப்பவர்கட்கு. உபகாரம் – உதவி.*

*98. ஆட்டிட – அபிஷேகம் செய்ய. மெய்யும் – உடம்பையும். (தூண், சட்டம் முதலியவற்றிற்கு). விருக்க சாலங்கள் – மரக் கூட்டங்கள். உரு – வடிவம்.*

*99. உற்ற புரம் கவின்றிட. என்னோர் – என்னைப் போன்றவர்கள். நரங்களின் – மனிதர்களின்.*

100. வானமால் வழங்கும் நீரை
வாய்மடுத் துறும்து திக்கை-
ஆனதால் நிறைத்து விண்மீது
அவிர்தரு மேக சாலம்
நானமாற் றிடவே வீசி,
நல்இபக் குலங்கள் எல்லாம்
தானமால் களிறெ னும்பேர்
சரதம்ஆக் கிடுதல் மானும். 16

101. "பெரியது யானை யான
பிறப்பதென் றாலும், சால
அரியது மனித சென்மம்
ஆம்எனும் உண்மை காட்டும் -
உரிய,தம் போக்கில் எய்தாது
உம்பல்கள் தமைஅ டக்கித்
திரியத்தம் குறியி னூடே
செலுத்துநர் செய்கை அம்மா! 17

*100. ஆல்வானம் என மாறுக. அசைகின்ற அலைகள், இச்சொற்றொடர் அலைகளை உடைய நீர்நிலைகளை உணர்த்திற்று, அடை அடுத்த ஆகுபெயர். ஆனது – பகுதிப்பொருள் விகுதி, துதிக்கையால். சாலம் – கூட்டம். நானம் ஆற்றிட – குளிக்க. இபக் குலங்கள் – யானைக் கூட்டங்கள். தானமால் களிறு – மதம்பொழிகின்ற பெரிய (அல்லது கரிய) யானை, ஈகையை உடையபெரிய யானை என்பது தொனி. சரதம் – உண்மை.*

*101. பிறப்பது – பிறப்பு, அது பகுதிப்பொருள்விகுதி, சால – மிகவும். உம்பல்கள் – யானைகள். குறி – குறிப்பு, ஆணை. செலுத்துநர் செய்கை உண்மை காட்டும் என்பது பொருள் முடிபு.*

## குதிரைப் பந்தி

102. அதிரைமே வுபுக டற்பால்
அமைமுதற் குறைத்தி ரைக்கும்
விதிரைநல் கிடுமால்; ஐந்து
விதப்படும் கதிமேற் கொண்டு,
முதிரைஆ தியஊண் உண்டு,
முழக்கம்மிக் கிசைந்து, செல்லும்
குதிரையின் காட்சி காணக்
கோபதி உரியன் மாதோ. 18

103. தோன்றிடும் பஞ்ச வன்னத்
துரகதம் பூமீ தில்கால்
ஊன்றிடும் தன்மை காண்பார்
ஒலிசுவ டுறுத லாலே
கான்றிடும் விலாழிச் சேற்றால்
கதித்துகள் அடக்கித் தன்மீது
ஏன்றிடு பவர்கு றிப்பொத்து
இயல்பரி எண்இல் லாவே. 19

*102. அதிரை மேவுபு – ஒலியோடு பொருந்தி, முதல்குறை திரைக்கும் – அதிரை என்னும் சொல்லின் முதல் எழுத்து நீங்கிய சொல் ஆகிய திரைகளுக்கு (அலை), உயர்வு சிறப்பும்மை. விதிரை – அச்சத்தை. நல்கிடும். ஆல் – அசை. ஐந்து விதப்படு கதி – ஐந்து வகையான குதிரை நடைகள், அவை மெல்லிய நடை (சுவரிதகம்), விரைவு நடை (ஆக்கிரந்திகம்), இருகால்களைத் தூக்கி ஆடிக்கொண்டுவரும் நடை (வல்கிதம்), சுற்றி ஓடுதல் (இரேசிதம்), முழு ஓட்டம்(புலிதம்) என்பன ஆகும். முதிரை – கொள்ளு. கோபதி – இந்திரன், ஆயிரம் கண் உள்ளவன்.*

*அதிரை, திரை எனச் சொற்களை ஆண்டது அக்கரச் சுதகம் என்னும் சித்திரவகை.*

*103. பஞ்சவன்னத் துரகதம் – ஐந்து நிறக் குதிரை. பூ மீதில் – நிலத்தின் மேல். சுவட்டு ஒலி என மாறுக, குதிரைகளின் ஓட்ட ஒலி. விலாழி – வாயில் ஒழுகும் நுரை. ஏன்றிடுபவர் – பொருந்துபவர், சவாரி செய்பவர் என்றபடி, இயல் பரி – செல்லுகின்ற குதிரை, வினைத்தொகை*

## தேர்நிலை

104\. மரத்தியன் றனவோ? மேலாம்
மாதவப் பேற்றால் தெய்வ
வரத்தியன் றனவோ? தேரேம்;
அலைஎனத் திகழும் தேர்கள்
குரத்தியன் றனவாம் மாவின்
குலம்தெரி யாம லே,அம்-
பரத்தியன் றனவால்- விண்ணோர்
பயக்க,உள் வியக்க. மாதோ. 20

105\. எண்ணில வாகும் தேரின்
இருக்கைகா ரைவனத் ்தின்பால்
அண்ணிய அரங்க நாதன்
ஐவரை அரங்கம் ஆகப்
பண்ணிய தோர்ந்து, மற்றைப்
பருவதம் எல்லாம் வந்து,
புண்ணியற் கபய மாகிப்
புகுந்தன போலும், மாதோ. 21

## வீரர் இருக்கை

106\. செல்லுடன் மருவும் மின்னில்
சிறந்தவாள் பிடித்து வீரச்
சொல்லுடன் வாள்ப யிற்சித்
துறையினில் நிறைகு வாரும்,
மல்லுடன், பலகை, யானை,
வாம்பரி, விற்ப யிற்சி
அல்லுடன் பகலும் தேர்ச்சி
ஆக்குவீ ரரும்ஆங் குண்டால். 22

*104. மரத்து இயன்றனவோ – மரச்சட்டங்களால் செய்யப்பட்டனவோ, வரத்து – வரங்களால், தேரேம் – தெளிய மாட்டோம். குரத்து இயன்றனவாம் – குளம்புகளால் செல்லுகின்றன ஆகிய. மாவின் குலம் – குதிரைக் கூட்டம். அம்பரத்து – ஆகாயத்தின்.இயன்றன, ஆல் அசை. மாது ஓ ஈற்றசைகள்.*

*105. இருக்கை – இருத்தல். அண்ணிய – பொருந்திய. ஐ வரை – ஐந்து மலைகள், தண்டிரங்கன் மலை, பாலை மலை, தோகை மலை, நீலமலை, குருஇருடி மலை என்பவை. திருப்பேரூர்ப் புராணம், "அயன்வரை, உமையாள் ஓங்கல், அவிர்ஒளி வெள்ளி வெற்பு, புயல்நிகர் மேனிச் செல்வன் பொருப்பு, உயர் மருதக் குன்று என்று இயலும் ஐந்து அடுக்கல்" (அபயப். 38) என பஞ்சகிரிகளைக் கூறுகிறது. பருவதம் – மலை.*

*106. செல் – மேகம். மின்னில் – மின்னலை விட. மல் – மற்போர். பலகை – கேடயம். வாம் பரி – தாவிச் செல்லும் குதிரை. அல்லுடன் – இரவிலும். ஆங்கு உண்டு. ஆல் ஈற்றசை.*

107. புரசைகிம் புரிகள் ஆதி
பூட்கைகட் கமைக்கின் றாரும்,
புரவிகட் கமைவ தாம்பொற்
கலணைகள் புரிகின் றாரும்,
உரமலி வீரர் தங்கட்கு
உறுசரம் கவசம் ஆதி
விரவிடப் புரியும் ஆற்றல்
வினைஞரும் மிகஉண் டாமால். 23

108. படைநகர்த் திடும்மெய். வீரம்
படைத்தவர் ஆதி யோர்வாழ்
புடைநகர்த் திறத்தில் சற்றே
புகன்றனம்; தோடு றக்கட்
கடைநகர்த் திடும்மின் னார்தம்
காதலர் பால்ஆட் டாற்றும்
இடைநகர்த் திறம்நூ லில்தோய்
இலக்கண முறைக்கி சைப்பாம். 24

## இடை நகர்

*(கலித்துறை)*

109. நீடு வார்கட லினைக்கடு அம்பினை நிகர்த்துத்
தோடு வார்செவி அணைவிழித் தோகையர்உள்ளத்து
ஊடு வார்;கமு கில்பொலி வுற்றபொன் னூசல்
ஆடு வார்கள்-ஆ டவர்விழி மனத்துடன் ஆட. 25

*107. புரசை – யானையின் கழுத்தில் கட்டும் கயறு. கிம்புரி – தந்தத்தில் அணிவிக்கும் பூண். பூட்கைகட்கு – யானைகளுக்கு. பொன் கலணைகள் – குதிரையின் முதுகில் கட்டும் அழகிய ஆசனம். உரம் – வலிமை. சரம் – அம்பு. உண்டாம். ஆல் அசை.*

*108. புடை நகர் – ஊரின் வெளிப்பகுதி, புறநகர். தோடு உற – காதில் உள்ள தோட்டின் மீது சென்று பாடும்படி. கட்கடை – கடைக்கண் என மாறுக. ஆட்டு ஆற்றும் – விளையாடும். இலக்கண முறைக்கு – காப்பிய நூல் மரபிற்கேற்ப.*

*109. கடு அம்பினை –வேகமாகச் செல்லும் சரத்தை, கடுவையும் அம்பையும் என உம்மைத்தொகை ஆக்கினும் அமையும். தோகையர் – மயில்போன்ற மங்கையர். கமுகில் – பாக்கு மரத்தில்.*

110. புளின மோடுசெய் குன்றம்ஆர் அணிகளும், பூஆர்
அளிகு லாவும்உய் யானமும், அமரரும் விரும்பும்
ஒளிகு லாம்மணிப் பதணமும் கண்டவர் உளத்தைக்
களிகு லாவிடப் புரிதரும் காட்சிமிக் கனவால். 26

111. முருந்து போன்றவெண் மூரலர் தமதுவாய் மொழியாம்
மருந்து தம்செவிக் கூட்டலர் ஆயினும், மாவில்
திருந்து மங்கையர் திப்பிய மேனிதோய் திருவை
விருந்து செய்யஆ டவர்விடுத் திடுவர்தம் விழியை. 27

112. "வினைத்துன் பால்பிரிந் திட்டயான் என்உள மீதில்
நினைத்துன் பால்அடைந் தனன்"என்அத் தலைவன்மே னியைநீர்
நனைத்துன் பால்என்மீ தன்பிலை என்கைநன் கறிந்தேன்;
அனைத்துன் பால்அமைத் துள்ளன்"என் றிசைவள்கற் பணங்கு. 28.

113. நீடல் ஆற்றிய காமிகள் தமக்கின்பம் நெஞ்சத்
தூடல் ஆற்றிடல் அன்றியே, வினைஇருள் உடலம்
கூட லாற்பெற லாம்கொல்என் ஆதரம் கூர்வார்,
ஆடல் ஆற்றிடும் ஒத்தநெஞ் சினர்இன்பம் அளவோ? 29

*110. புளினமோடு – மணல் மேடுகளுடன், அத்துச்சாரியை கெட்டது. அளி – வண்டு. உய்யானம் – சோலை. பதணம் – மதில். ஆல் – அசை.*

*111. முருந்து – மயில் இறகின் அடிப்பாகம். மூரலர் – புன்முறுவலை உடைய மகளிர். மருந்து – அமுதம். செவிக்கு ஊட்டலர். மாவில் – திருமகளைப் போல, இல் உவம உருபு. திப்பிய – திவ்விய, அழகிய. திருவை – எழிலை. மூரலர் ஊட்டலராயினும், மங்கையர் திருவை விருந்து செய்ய ஆடவர் விழியை விடுவர் என்பது முடிபு. பெண்கள் தங்களை மதித்துப் பேசாவிடினும் ஆண்கள் அவர்களையே ஆவலோடு பார்த்துக்கொண்டிருப்பர் என்பது கருத்து.*

*112. வினைத் துன்பால் – துன்ப வினையால் என மாறுக, துயரம் தரும் தீவினையின் பயனாக, "வினைத்துன்பால்.... அடைந்தனன்" என்பது தலைவன் கூற்று. என் அ தலைவன் – என்று சொல்கின்ற அந்தத் தலைவனின். நீர் – கண்ணீரால். "உன்பால்.... அமைந்துள்ளன்" என்பது தலைவி கூற்று. என்மீது அன்பு இலை. என்கை – என்பதை. அனைத்து – (அறிந்த போதிலும் எனக்குரிய உடல், பொருள், ஆவி) எல்லாவற்றையும், முற்றும்மை விரிக்க. அமைத்துள்ளன் – ஈடுபடுத்தியிருக்கிறேன். என்று இசைவர் – எனக்கூறிப் பொருந்துவாள். கற்பு அணங்கு.*

*113. நீடல் – ஊடலை நீட்டித்தல். காமிகள் – காதல் மிக்கவர்கள். ஊடல் – புலவி. ஆதரம் கூர்வார் – அன்பு செய்வார். அளவோ – அளவிட்டு உரைக்க முடிந்தது ஆகுமோ, ஆகாது என்றபடி இவ்விருத்தத்தின் தெளிவான பொருள் விளங்கவில்லை.*

114. தள்ளை யாம்எனத் தமதுகைத் தலமிசை தாங்கிக்
கொள்ளை மாதூரி யச்சுதை கனிவகை கொடுத்துக்
கிள்ளை கட்குரை பயிற்றி,அங் கவைசெவி கேட்டுப்
பிள்ளை யாம்என உளம்களித் திடுவர்கள் பெரிதும். 30

அகழி

*(எழுசீர் விருத்தம்)*

115. "திருவருட் சோதி மயம்நிறை வான
சீதரன் புவியுளோர் இன்பம்
மருவருட் கதிதோய்ந் துய்ந்திடக் கொங்கு
மண்டலத் தாறைநாட் டின்பால்
பெருகணிக் காரை வனத்தியல் வடிவம்
பெற்றரு ளாட்டயர் மகிமை
தெருளுதும்" எனப்பாற் கடல்அடைந் திட்ட
செய்கையே மானுமால் அகழி 31

116. வானக நீட்டும் மடக்கொடி நெஞ்சும்
வன்கடற் கரைகொள்ஆ ழமுமே
தானகத் தறிய முடிதரா தென்னும்
சரதம்மேற் காட்டுவ தாகித்
தேனகத் தணிமா மலர்திரை வளியால்,
தீஞ்சுவை நீர்ப்பெருக் கதனால்
ஊனகத் துயிர்கட் கைம்புல போகம்
ஊட்டி,மா தவத்துற உய்க்கும். 32

*114. தள்ளை – அன்னை. கைத்தலமிசை – கையின்மேல். கொள்ளை – மிகுந்த. மாதூரிய – இனிய. சுதை – பால். கிள்ளைகட்கு – கிளிகளுக்கு. உரை பயிற்றி – பேசக் கற்பித்து. அவை – அச்சொற்களை. பிள்ளை – தம் குழந்தைகள். மகளிர் என்பது தோன்றா எழுவாய்.*

*115. சீதரன் – திருமால். ஆறை நாடு – கொங்கு நாட்டின் 24 உட்பிரிவுகளில் ஒன்று, வெள்ளியங்கிரி முதல் அவிநாசி வரையுள்ள பகுதி இப்பெயர் பெறும், இன்றைய கோவை, அவிநாசி வட்டங்களைக் கொள்ளலாம். பெருகு அணி – வளர்கின்ற எழிலை உடைய. தெருளுதும் – தெரிந்துகொள்வோம். மானும் – நிகர்க்கும். மால் – பெரிய. அகழி கடல் அடைந்திட்ட செய்கையே மானும் என்பது முடிபு.*

*116. மடக்கொடி – 1. மடப்பத்தை உடைய கொடிபோன்ற பெண், அடையடுத்த உவம ஆகுபெயர், 2. கோயிலின்கண் கட்டப்பட்டுள்ள பதாகை, ஏழன் தொகை. நெஞ்சு–1. உள்ளம் 2. நடுப்பகுதி. கடற்கரை – கடலின்(கீழ்) எல்லை, அடிப்பாகம். பெண்களின் உள்ளமும் கடலின் ஆழமும் கோயிற்கொடியின் உயரமும் உய்த்து உணர முடியாதவை என்பது கருத்து. சரதம் – உண்மை. தேன் அகத்து. அணி – அழகிய. வளி – காற்று.*

117\. நச்சியற் கிடங்கின் அயல்உல களந்த
நாண்மலர்ச் சேவடி பயிலும்
உச்சித இன்பார் ஆதிசே டப்பேர்
உடையவன் உடையநா யகன்தன்
உச்சித வடிவம் கண்டமை தரஉள்
ஊற்றெழும் அன்பினால் அருகே.
நொச்சியாம் வடிவம் எய்துதும் என்ன
நுதலலின் மதில்உயர்ந் திலகும். 33

118\. "பாதல உலகு நம்மது நாமம்
பற்றியே நாகம்ஆ கியது;
மீதல மான துறக்கமும் அப்பேர்
விளங்குபு சிறந்ததால், இடைதோய்
பூதல மும்பேர் பெற்றிடும் வண்ணம்
புரிகுதும்" என்றுளத் தமைந்த
காதலின் வளர்ந்த தன்மைதோய் மதிலின்
காட்சியார் இசைத்திட வல்லார்? 34

119\. அனந்தன்என் றிடும்தன் பேர்க்கிசை தரும்பேர்
அற்புதம் பலபட இயன்று,
கனந்தவழ் முடிபெற் றாங்கதன் மீதே
கவின்றதன் பணாடவி மிசைஆர்
இனம்படும் மணிஞா யிற்குலம் என்ன
இமையவர் தேர்தரக் காட்டி,
மனதுவப் பெனநீள் இன்பமார் நொச்சி
மகிமையார் வகுத்திட வல்லார்? 35

*117. நச்சு இயல் – விரும்பத்தக்க இயல்பை உடைய. கிடங்கின் அயல் – அகழிக்கு அருகில். உச்சித – உயர்ந்த. இன்பு ஆர் – இன்பத்தைத் துய்க்கின்ற. உடைய நாயகன்தன் – திருமாலின். கண்டு அமைதர. நொச்சி ஆம் – மதிலாகிய. நுதலலின் – சொல்லல்போல, மதிற்சுவர் பாம்புபோல் மண்டலித்து விளங்கும்.*

*118. பாதலமும் விண்ணுலகும் நாகலோகம் எனப் பெயர்பெற்றுள்ளன. இடையில் உள்ள நிலஉலகும் அப்பெயர் பெறட்டும் என்னும் விழைவால் மதில் உயர்ந்தும், ஆழ்ந்தும் விளங்குகின்ற தாம். ஆல் அசை, வினா எதிர்மறை. இப்பாடல் மகாவித்வான் அவர்களின் கவியை நினைவூட்டுகிறது. "பூதலம் பொலியும் நாகமா நகர்க்குப் பொருந்துஉறுப்பாம்பெரும் கிடங்கு பாதலம் அடைந்து பொலிதலால் நாஞ்சில் படுபெரு மதில் உயர்ந்தோங்கும் மீதலம் அடைந்து பொலிதலால் அவைக்கும் விளம்பினர் இந்நகர்ப் பெயரே "(திருநாகைக்காரோணப் புராணம் – திருநகரப்.81)*

*119. அனந்தன் – ஆதிசேடன், முடிவற்றவன். கனம் தவழ் – பெருமை பெற்ற. பணாடவி – (பாம்புப்) படங்களின் கூட்டம். ஆர் பொருந்தியுள்ள. மணி – நாகமாணிக்கம். ஞாயில் – மதிலின் உச்சியின் ஓர் உறுப்பு. தேர்தர – அறியும்படி. மகிமை – பெருமை.*

120. கொற்றஅந் நொச்சி மீமிசை கருடக்
கொடிஇசைந் தாடிடும் தோற்றம்,
குற்றம்மிக் கிறைவற் கியற்றி,யான் பூசை
குயிற்றி,நல் தீர்த்தம்ஆட் டிடலால்
பெற்றபே றிதனை யாவரும் எய்திப்
பிழைமினோ! பிழைமினோ! என்னச்
சொற்றடி யவர்கள் பலரையும் கூவும்
தோற்றமே கடுத்திடும் மாதோ. 36

121. தனம்பணம் ஆகும் தீபகத் துணையால்
சார்பவர் கையகத் தவற்றை
இனம்படப் பறித்துப் பரிசின்நோய் மிடிகள்
ஈந்தவர்க் கென்றுமே தீராக்
கனம்படு துன்பக் கடலில்ஆழ்த் தவரைக்
கண்டவர் தமையும்வி டாது,
மனம்படும் கண்ணிக் கண்ணமை வரைவின்
மகளிர்வாழ் சேரியும் உளதால். 37

122. மலையிடத் தமைந்த மலைவுறும் பொருளும்,
மருதமா நிலத்தமை பொருளும்,
அலையிடத் தமைந்த பொருள்களும், திருமால்
ஆட்சிபெற் றணிபெறும் முல்லைத்

*120. கொற்ற – வெற்றியை உடைய. மீமிசை – மேலே, ஒரு பொருட்பன்மொழி. இசைந்து – பொருந்தி. குயிற்றி – செய்து. தீர்த்தம் ஆட்டிடல் – அபிடேகம்.பிழைமினோ – உய்வீராக, தவறவிட்டுவிடாதீர்கள், பிழையுங்கள் பிழையுங்கள் என அடுக்குத் தொடர் ஆக்கினும் அமையும். தற்குறிப்பேற்ற அணி.*

*121. தனம் – நகில்கள். பணம் – பாம்புப்படம் போன்ற நிதம்பம். தீபகம் – பறவையைப் பிடிப்பவர்கள் புதியனவற்றை ஈர்க்கப்பயன்படுத்தும் பழகியபறவை. துணை – இரட்டுறமொழிதலாக இரண்டாலும், உதவியால் என இருபொருள் கொள்க. கையகத்து அவற்றை – கையில் உள்ள பொருளை. பரிசின் – பரிசைப் போல. நோய் மிடிகள் – உம்மைத் தொகை, தரித்திரம் உணவு, உடுப்பு, உறையுள், மருந்து எனப் பலவற்றிலும் வருதலால் பன்மையிற் கூறினார். இனி நோயும் மிடியும் ஆகிய இரண்டு எனப் பன்மையாக்கினும் இழுக்கின்று. ஈந்து அவர்க்கு. கனம்படு – மிகுதியான. ஆழ்த்து – ஆழச்செய்து. மனம் படும் கண்ணி – உள்ளங்களைப் பட வைக்கும் சங்கிலி. கண்ணி கண்ணிகளாலான சங்கிலிக்கு ஆகுபெயர். கண்ணிக்கண் – சங்கிலியைப் போன்ற விழிகள், தொழிலுவமம். வரைவு இல் மகளிர் – விலைமகளிர். ஆல் ஈற்றசை.*

தலையிடத் தமைந்த பொருள்களும் மிகுந்து,
தலைமயக் குற்று,வேண் டுநர்க்கு
விலையிடத் தகுந்த தாம்கடை வீதி
விம்மிதம் விழிப்பெரு விருந்தே. 38

123. மேற்படு சீல நாற்பெருங் குலத்தின்
மேலுடன் கீழ்மைய தாகும்
பாற்படும் ஆண்பெண் மணந்துபெற் றிட்ட
பாலகர், கன்னிவை தவ்யம்
ஏற்படு திறத்தார் ஈன்றுள மக்கள்
ஏற்றநால் வரின்பணிஇயற்றிக்
காற்படு பாரம் பரியராய் உள்ளார்
கலந்துள வீதியும் உளதால். 39

124. மதித்திடும் காரை வனத்தமர் கருணை
மலிதரும் இரங்கநா தன்சீர்
கதித்திடு திருத்தாள் மிசைவரு தரங்கக்
கங்கையின் கான்முளை யாகி
உதித்திடும் உழவுத் தொழிலினால், உலகம்
ஓம்பும்மாண் புற்றவே ளாளர்
விதித்திடு தருமம் பெருக்கி,வாழ்ந் துவக்கும்
வீதிமிக் கணியுடன் விளங்கும். 40

125. சக்கர பாணி என்னமுன் குபேரன்
தான்வழி பாடுசெய் துவக்கும்
மைக்கவின் மேனி அரங்கனுக் கடியேம்
வழிவழி அடிமைகள் என்னப்
புக்கவை சியர்கள் என்றுமே அழியாப்
பொருள்வளத் துடன்அருள் வளமை
மிக்கவிர் தருமா றறம்புரிந் தமையும்
வீதியே ரணிகொடு விளங்கும் 41

*122. மலைவு உறும் – மயங்க வைக்கும், வியப்பூட்டும் ; பிறவினையாக ஆட்சி. அலையிடம் – நெய்தல் நிலம். தலையிடம் – சிறந்த இடம், திருமாலைப் பற்றிய நூலாதலின் முல்லையைத் தலைமையான இடம் என்றார். தலைமயக்கு உற்று – தம்மில் தாம்கலந்து. கடைவீதியின் விம்மிதம் என ஆறன் உருபு விரிக்க.*

*123. பாலகர் என்றது அநுலோம பிரதிலோமர்களை. மக்கள் என்றது கானீன கோளகர்களை. "உயர்ந்த ஆணினும் இழிந்த பெண்ணினும் வியந்த கூட்டத்து அநுலோமர்" (967) "உயர்ந்த பெண்ணினும் இழிந்த ஆணினும் வியந்த கூட்டத் தவர்பிரதி லோமர்" (968) "கன்னியில் பிறந்தோன் கானீனன் ஆகும்" (966) விதவை பயந்தமதலை கோளகன்" (965) என்பன பிங்கல நிகண்டு. பாரம்பரியராய் – தலைமுறை தலைமுறையாக.*

*124. கதித்திடு – மிகுகின்ற. தரங்க – அலைகளை உடைய. கான் முளை – மைந்தர், வேளாளர்களைக் கங்கை மைந்தர் என்பது மரபு. வாழ்ந்து உவக்கும்.*

*125. மை கவின் – மேகத்தின் அழகைப் பெற்ற. அவிர்தருமாறு. குபேரன் வழிபட்ட வரலாறு இந்நூல் குபேரன் பூசித்த படலத்தில் இடம்பெற்றுள்ளது.*

126. சாரங்க பாணி என்னஇந் திரன்முன்
சார்ந்துபூ சித்திடும் திறத்தால்
சீரங்கம் என்னப் பொலிதரு காரைத்
திருநகர் திருநகர் என்னப்
பேரங்கத் துடன்வாழ் வதற்குமிக் குரிமை
பெற்றதென் றரசர்கள் உவகை
கூரங்கண் கொள்ளை கொள்வளத் துடன்தோய்
கோப்பெரு வீதியும் குலவும். 42

127. சுரர்குரு வாகும் வியாழனும், பிரம
தேவனும் தோய்ந்தருள் மகிமை
விரவுசீர் இரங்க நாதனைப் போற்றி
வேண்டிய வேண்டியாங் குற்ற
மரபினால் அந்த மரபிசை எமக்கே
வாய்ப்பதாம் தலம்எனக் கனிவால்
வரம்மலி தருபூ சுரர்களிப் புடனே
வாழ்மறு கொப்பற வயங்கும். 43

128 சைவம்வை ணவம்என் றமைதரு சமய
சமரசத் துடன்,அரி அரற்கு
மெய்வழி பாடு புரிகுநர் இசைசால்
வேதஆ கமத்துணி புகளைக்
கைவளர் நெல்லி யில் தெளிந் தயலார்
கற்கஓ துநர்,கதி வழியில்
உய்வகைத் தவம்செய் குநர்மடம் அகரம்
முயற்சிபெற் றின்பம்மிக் கோங்கும். 44

*126. என்ன – முதலடியில் என்றபெயரில், இரண்டாமடியில் போல. திருநகர் – 1. தெய்வீகப்பதி 2. திருமகள் உறையும் ஊர். பேர் அங்கத்துடன் – பெருமை மிக்க அரசியல் சின்னங்களுடன், இவை தசாங்கம்எனப்படும். பெற்றது என்று. உவகை கூர் அங்கண் – மகிழ்கின்ற அந்த இடத்தில். கோப்பெருவீதி – இராஜவீதி.*

*127. சுரர்குரு – தேவர்களின் ஆசான். மரபு இசை – குலத்தில் பொருந்திய. பூசுரர் – அந்தணர். வியாழனும் பிரமனும் பூசித்தது உரிய படல வரலாறு.*

*128. கைவளர் நெல்லியில் – உள்ளங்கை நெல்லிக்கனி போல. (தாம்) தெளிந்து அயலார் கற்க ஓதுநர், அகரம் – அந்தணர் குடி இருப்பு. மடம் அகரம் – உம்மைத்தொகை. சைவம், வைணவம் – அரி, அரன்; ஓதுநர், தவம் செய்குநர் – மடம், அகரம் எதிர்மறை.*

129\. நால்வகை மலடும் அகன்று,பூ வுலகே
நாகநா டாம்எனத் தக்க
சால்வகைப் போக பாக்கியம் தான
தருமம்ஆ தியின்மிக நிறைந்து,
கால்வரு பாரம் பரியராய், அணிசால்
காரைமா வனப்பதிப் பிறந்து,
மேல்வகைக் கதியே வேண்டுநர் செல்வம்
விரிமனை எண்ணில விளங்கும். 45.

*(கலிவிருத்தம்)*

130\. கான வாரணங் கற்புடை யாங்கிடை
கான வாரணங் கற்புடை யாங்கிடை
நான மாற்றுவர் நன்குளத் தாரிடை
நான மாற்றுவர் நன்குளத் தாரிடை 46

கான ஆரணம் கற்பு உடை ஆம் கிடை
கான வாரணம் கல்புடை ஆம்கிடை
நானம் ஆற்றுவர் நன் குளத்து ஆரிடை
நான் அம் மாற்றுவர் நன்கு உள் அத்தார் இடை.

*129. நால்வகை மலடு – குழந்தைகள் இறந்து பிறத்தல், ஒரே ஒரு குழந்தை பிறத்தல், பெண் குழந்தைகள் மட்டுமே பிறத்தல், ஒன்றும் இல்லாமல் இருத்தல், "செதுமகப் பயத்தல், ஒருமகப் பயத்தல், திலகவாள் நுதலியர்ப் பயத்தல், எதுவும்இன் றாக இருத்தல்என் றறிந்தோர் இயம்பும் நான் மலடு" என்பார் கச்சியப்ப முனிவர் (திருப்பேரூர்ப் புராணம் – திருநகரப் 17) நாகநாடு – வானுலகம். வகைசால் என மாறுக – பலவிதங்களில் மிகுதியான. கால்வரு – மகன், பேரன் என வழிவழி வருகின்ற.*

*130. கிடை – வேத பாடசாலைகள். கான ஆரணம் – இசைக்கப் படுவதாகிய வேதங்களின். கற்பு உடை ஆம் – கல்வியை உள்ளதாக இருக்கும். கான வாரணம் – காட்டு யானைகள். கல் புடை கிடை ஆம் – மலைகளின் அருகே படுத்திருக்கும். நன் குளத்து ஆரிடை – நல்ல குளத்தில் நிறைந்துள்ள நீரில். நானம் ஆற்றுவர் – குளிப்பர். (மக்கள் என்பது தோன்றா எழுவாய்) நன்கு உள் அத்தார் – சிறப்பாகத் தியானிப்பதைப் பொருந்தியோர். இடை – வருத்துகின்ற. நான் அம் – நான் என்னும் தன்மையை (அகந்தையை). மாற்றுவர் – தீர்த்துவிடுவார்கள் (அழிப்பர்). ஆர் – நிறைவு. ஆகுபெயராகத் தண்ணீரை உணர்த்தியது. உள் – முதனிலைத் தொழிற்பெயர். அத்தார் – வினையாலணையும் பெயர். இடை நானம் – வினைத்தொகை.*

131. காம ரம்பை ரவியணிக் கானமே
காம ரம்பை ரவியணிக் கானமே
ஏம பாசத் திடும்பையு ளற்றவர்
ஏம பாசத் திடும்பையு ளற்றவர் 47

காமரம் பைரவி அணி கானம் ஏ
காமர் அம்பு ஐ ரவி அணி கானம் ஏ
ஏம பாசத்து இடும்பை உள் அற்றவர்
ஏம பாசத்து இடும் பையும் அல் தவர்.

132. ஆண வத்தை யகற்று மகத்தினர்
ஆண வத்தை யகற்று மகத்தினர்
காண மாட்சிக் கணந்தரும் பேற்றினர்
காண மாட்சிக் கணந்தரும் பேற்றினர். 48

ஆணவத்தை அகற்றும் மகத்தினர்
ஆள் நவத்தை அகற்றும் அகத்தினர்
காண மாட்சி கணம் தரும் பேற்றினர்
காண மாட்சிக்கண் அந்தரும் பேற்றினர்.

*131. கானம் – பாடல்கள். காமரம் பைரவி அணி – காமரம் பைரவி முதலிய பண்களின் வரிசையைப் பெற்று விளங்கும். ரவி அணி கானம் – சூரியனை நெருங்கியுள்ள (வானளாவிய) சோலைகள். காமர் அம்பு ஐ – மன்மதனின் கணைகளாகிய மலர்களின் அழகைப் பெற்று விளங்கும். ஏம பாசத்து இடும்பை – பொன்னாசை ஆகிய வறுமையை. உள் அற்றவர் – தம் மனத்திலிருந்து நீத்தவர்கள். ஏம பாசத்துஇடும் பையுள் – எமனுடைய பாசக் கயற்றில் சிக்கும் சிறுமையுடையோர்.*

*“அல்லல் செய்யும் அவா எனப்படும் அவ் வறுமை” (சிதம்பர மும்மணிக் கோவை 26:35,36,) என்பதனை நினைந்து இடும்பை என்பதற்கு வறுமை எனப் பொருள் சொல்லப் பெற்றது. அணி, ஐ இரண்டும் பெயர்ப்பயனிலை, பையுள் என்னும் சொல் சிறுமையுடையோரை உணர்த்திற்று. ஈற்றடியின் ஏகாரம் பிரிநிலை. ஏனைய அசைகள்*

*132. ஆணவத்தை அகற்றும் மகத்தினர் – ஆணவமலத்தின் வலிமையை நீக்குகின்ற பெருமையை உடையவர்கள். ஆள் நவத்தை – அடியவர் என்னும் உறவை. அகற்றும் அகத்தினர் – விசாலப்படுத்துகின்ற உள்ளத்தை உடையவர். காண மாட்சி – செல்வச் சிறப்பை. கணம் தரும் பேற்றினர் – ஒரு கணத்தில் அளிக்கவல்ல பெரும் வளமையை உடையவர்கள். காண – பிறர் பார்க்கும்படி. மாட்சிக்கண் – சாவினிடத்து. அந்தரும் – பொருந்துதற்கரிய (பொருந்தாத) பேற்றினர் – வரத்தை உடையவர்கள்*

*மாட்சிக் கணம் தரும் என்புழிக் ககரமெய் மடக்கு நோக்கி விரிந்தது. “கூகா எனஎன் கிளைகூடி அழப் போகா வகை” கண்டவர் என்பது ஈற்றடியின் கருத்து காரைமடை வாழ் மக்கள் என்பது நான்கினுக்கும் தோன்றா எழுவாய்.*

133. மங்க லக்கன் மனத்தை யுடைத்தவர்
மங்க லக்கன் மனத்தை யுடைத்தவர்
தங்க ரத்தினத் தான மிசைத்தவர்
தங்க ரத்தினத் தான மிசைத்தவர் 49

மங்கு அல கல் மனத்தை உடைத்தவர்
மங்கல கன்ம நத்தை உடை தவர்
தங்க ரத்தின தானம் இசைத்தவர்
தம் கரத்தின் அ தானம் இசைத்தவர்.

134. தீர்த்த வாவிய தேற்றதத் தத்தினம்
தீர்த்த வாவிய தேற்றதத் தத்தினம்
பார்த்த மைக்கும் பரம பதத்தையே
பார்த்த மைக்கும் பரம பதத்தையே 50

தீர்த்த வாவியது ஏற்றது அத்தத்தின் அம்
தீர்த்தம் வாவிய தேற்ற தத்தத் இனம்
பார்த்து அமைக்கும் பரம் அப தத்தை ஏ
பார்த்து அமைக்கும் பரமபதத்தை ஏ.

*133. மங்கு – ஒளிகெடச் செய்வதும். அல – சுழலும் இயல்பை உடையதும். கல் – கல்லைப்போன்று கடினத்தன்மை வாய்ந்ததும் ஆகிய. மனத்தை உடைத்தவர் – உள்ளத்தை வலிமை இழக்கச் செய்தவர்கள். மங்கல கன்ம நத்தை உடை – புண்ணியச் செயல்களை விரும்புதலை உடைய. தவர் – தவசிகள். செயல்களை விரும்புதலை உடைய. தவர் – தவசிகள். தங்க ரத்தின தானம் இசைத்தவர் – பொன் மணிகள் முதலியவற்றைக் கொடையாக வழங்கியவர்கள். தம் கரத்தின் – தங்களுடைய கைகளின் செய்கையால். அ தானம் – அந்தத் தேவலோகத்தை. இசைத்தவர் – பொருந்துபவர்கள் ஆவர்.*

*மங்கு – பிறவினைப் பொருளில் ஆட்சி. நத்தை – னத்தை போலி. அ – நூலறி சுட்டு. அறம்புரிபவர் தேவலோகம் புகுதல் திண்ணம் ஆதலின் இசைத்தவர் என இறந்தகாலத்தில் கூறினார்.*

*134. தீர்த்த வாவியது ஏற்றது – புனித நீர்க்குளம் தன்பால் அமையப் பெற்றது. அத்தத்தின் அம் – கண்ணாடியின் அழகு ஆகும். (தெளிந்த நீர்ப்பரப்பு என்றவாறு) தீர்த்தம் வாவிய தேற்ற தத்தத் இனம் பார்த்து – பிறவியைக் கடப்பதற்கு உதவும் ஞானத்தில் அந்தஅந்தச் சம்பந்தத்தை ஆராய்ந்து. அமைக்கும் பரம் அதத்தையே – பரம் அதத்தை அமைக்கும் என்பது அந்வயம், திருமால் தீய ஆபத்துக்களை அடங்கச் செய்வார். பார்த்து அமைக்கும் பரம பதத்தையே – அருள் நோக்கம் செலுத்தி (கடாக்ஷித்து) வைகுந்தப் பதவியில் இருக்கச் செய்வார்.*

*வாவியது என்புழி அது பகுதிப்பொருள் விகுதி. அம் – பெயர்ப்பயனிலை. தத்தத்– அந்தந்த, வடமொழி. பரமபதத்தை அமைக்கும் என்புழி இரண்டன் உருபு ஏழன் பொருளில் வந்தது. இரண்டு ஏகாரங்களும் அசை. ஞான நிலைக்கேற்ப தீயவை களையப்பெற்று வைகுந்தப் பதவி வழங்கப்பெறும் என்பது கருத்து.*

135. அண்டத் தாக்கு மரும்பு வனங்களே
அண்டத் தாக்கு மரும்பு வனங்களே
தண்டபுத் தார்க்குஞ்சன் மங்களை மாற்றிடும்
தண்டபுத் தார்க்குஞ்சன் மங்களை மாற்றிடும் 51

அண்டத்து ஆக்கும் அரும்பு வனங்கள் ஏ
அண்ட தாக்கும் அரும் புவனங்கள் ஏ
தண்டத்து ஆர்க்கும் சன்மங்களை மாற்றிடும்
தண்டத்து ஆர்க்கும் சன்மங்களை

136. காரை மாவனங் கண்ட தரிசனம்
காரை மாவனங் கண்ட தரிசனம்
தாரை யாயகண் ணீர்தரு மாவலர்
தாரை யாயகண் ணீர்தரு மாவலர்

கார் ஐ மா வனம் கண்டது அரி சன் அம்
காரைமாவனம் கண்ட தரிசனம்
தாரையாய கண்ணீர் தரும் ஆவலர்
தாரை ஆய கள்நீர் தருமா அலர்.

*135. வனங்கள் – சோலைகள். அரும்பு – மலர் முகைகளை. அண்டத்து ஆக்கும் – வானில் தோற்றுவிக்கும் (வானளாவி விளங்கும் என்றவாறு) அரும் புவனங்கள் – அருமையான நீர் நிலைகள். அண்ட தாக்கும் – ஒன்றையொன்று நெருங்கும்படி (நீர்) பாயும்.*

*தண்டத்து – யாதொருபயனும் இல்லாமல் வீணாக. ஆர்க்கும் – ஆரவாரம் செய்து கொண்டிருக்கும். சன்மங்களை – பிறவிகளை. மாற்றிடும் (பயனுடைய பிறப்பாக) மாற்றிவிடும். தண்டத்து ஆர்க்கும் – (இத்தலத்தில்) வணங்குதலை உடையவர்கள் யாராக இருப்பினும் அவர்களுக்கு. சன் – நன்மைகளைப் பெற்றவளாகிய. மங்களை – திருமகளாகிய ரங்கநாயகித் தாயார். மாற்று இடும் – தரத்தை உயர்த்தி ஆட்கொள்வாள். திருமகளைப் புருஷாகாரபூதையாகக் கொண்டே திருமாலை அடையவேண்டும் என்பது சம்பிரதாயம்.*

*136. கார் ஐ மா வனம் – மேகத்தின் அழகிய கருப்பு நிறத்தை. கண்டது அரி சன் அம் – பெற்றுள்ளது திருமாலின் நல்ல அழகு (ஆகும்). காரை மாவனம் கண்ட தரிசனம் – காரைமடைத் தலத்தில் பெற்ற இறைக்காட்சி. ஆவலர் தாரையாய கண்ணீர் தரும் – அன்பர்களுக்கு ஒழுகுகின்ற கண்ணீரை உண்டாக்கும். (தரிசனம் ஆவலர்க்குத் தரும் என்க). தருமா அலர்– மாமரத்தின் மலர்கள். கள் நீர் தாரை ஆய– (பொழிந்த) தேன் மழையை நிகர்த்தது.*

137. நாம மெய்யி னயந்தவ மாற்றினர்
நாம மெய்யி னயந்தவ மாற்றினர்
தாம கத்தணித் தாச நலத்தினர்
தாம கத்தணித் தாச நலத்தினர்

நாமம் மெய்யில் நயந்து அவம் மாற்றினர்
நாம மெய்யின் நயம் தவம் ஆற்றினர்
தாம் அகத்துஅணி தாச நலத்தினர்
தாம கத்து அணிந்து ஆசன லத்தினர்.

138. பழங்கணக் கற்ற பண்பி னருந்துவார்
பழங்கணக் கற்ற பண்பி னருந்துவார்
வழங்க வந்தவ மாற்று மினத்தரே
வழங்க வந்தவ மாற்று மினத்தரே.

பழங்கண் அ கற்ற பண் பினர் உந்துவார்
பழம் கணக்கு அற்ற பண்பின் அருந்துவார்
வழங்க வந்து அவம் மாற்றும் இனத்தர் ஏ
வழங்க அம் தவம் ஆற்றும் இல் நத்தர் ஏ.

*137. நாமம் மெய்யில் நயந்து – திருமண்ணை உடம்பில் விருப்பத்தோடு அணிந்து. அவம் மாற்றினர் – பாவங்களை அழித்துக் கொண்டனர். நாம மெய்யின் – இறைவனின் திருப்பெயராகிய சொல்லை ஜபித்தலாகிய. நய தவம் ஆற்றினர் – மேன்மையை உடைய தவசு புரிந்தனர். தாம் அகத்து (மேற் கூறப்பெற்ற அவர்கள். தம் உள்ளத்தின்கண். அணி தாச நலத்தினர் – பூண்டுள்ள (அணிந்துள்ள) பாகவதச் சிறப்பினை உடையவர்கள். தாம கத்து அணிந்து – பெருமை மிக்க முக்தி உலகத்திற்கு அருகே. ஆசனலத்தினர் (லப்தர்) இருக்கை கிடைக்கப் பெற்றவர்கள். முக்தியை நெருங்கியவர் என்றவாறு.*

*திருமால் அடியார்கள் என்பது நான்கிற்கும் தோன்றா எழுவாய். நயத்தவம் எனற்பாலது நயந்தவம் என மெலிந்தது. கம் – வீட்டுலகம், முத்தி.*

*138. பழங்கண் கற்ற அ பண் – முதலில் (பழங்காலத்தில்) தாம் பழகிய அந்த இசையை. பினர் உந்துவார் – பிற்காலத்தில் வெளிப்படுத்துவர் (கற்ற இசையைப் பாடுவர் என்றவாறு) பழம் – (கவாளம் அளித்தல் என்னும் இத்திருத்தல வழக்கத்தின்படிக் கொடுக்கப்படும்) வாழைப்பழங்களை. கணக்கற்ற பண்பின் – மிகுதியாக. அருந்துவார் – சாப்பிடுகின்ற தாசர்கள். வழங்க – (உண்ட மீதத்தைப் பிரசாதமாகக்) கொடுக்க. வந்து – (அதனை ஏற்று அருந்தவே இத்தலத்திற்கு) வருகை தந்து. இனத்தர் அவம் மாற்றும் –பெரும் கூட்டத்தினரான மக்கள் தம் கெடுதியைத் தவிர்த்துக் கொள்வர். வழங்க – (உலகோர் புகழ்ந்து) சொல்லும்படி. இல் நத்தர் அம் தவம் ஆற்றுவர் – வீட்டின்பத்தை விரும்புபவர்கள் அழகிய தவத்தினை இயற்றுவார்கள்.*

*முதலடியில் பழங்கண் கற்ற அ பண், என்பதற்கு ஒலிச் சிறப்பை உடையதும் தாம் கற்றதுமாகிய அந்த இசை எனினும் அமையும், இது வேதம். "கற்றாங்கு எரி ஓம்பி" என்பது தேவாரம். அருந்துவர் – வினையாலணையும் பெயர். இனத்தர் மாற்றும், நத்தர் ஆற்றும் இரண்டும் திணை வழுஅமைதி நத்தர் – குறிப்பு வினையாலணையும் பெயர். ஏகாரம் இரண்டும் அசை.*

139. மாசி னன்மகத் தேர்வடம் பூட்டுவார்
மாசி னன்மகத் தேர்வடம் பூட்டுவார்
ஆசி யாவிர தத்தமை யத்தரே
ஆசி யாவிர தத்தமை யத்தரே 55

மாசி நன் மகத் தேர்வடம் பூட்டுவார்
மாசு இல் நல் மகத்து ஏர்வடம் பூட்டுவார்
ஆசியா விரதத்து அமை அத்தர் ஏ
ஆசி ஆவி ரதத்த மையத்தர் ஏ.

140. துளவி ருந்த தொடையல ரின்மெய்யர்
துளவி ருந்த தொடையல ரின்மெய்யர்
உளமி றந்தவி ரோதவி தத்தரே
உளமி றந்தவி ரோதவி தத்தரே 56

துள்அ விருந்த தொடை அலர் இல் மெய்யர்
துளவு இருந்த தொடை அலர் இன் மெய்யர்
உள் அம் இல் தந்து அவிர் ஓது அ இதத்தரே
உளம் இறந்த விரோத விதத்தரே.

*139. மாசி நல் மக தேர்வடம் பூட்டுவார் – மாசி மாதத்தின் நல்ல மக நட்சத்திரத்தன்று தேரோட்டம் நடத்துவார்கள். மாசு இல் – குற்றம் அற்றதும். நல் மகத்து – மிகுதியான பெருமையை உடையதும். ஏர்– அழகியதும் ஆகிய. வடம் – (துளசி) மணிமாலையை. பூட்டுவர் – அணிவார்கள். ஆசியா விரதத்து அமை – (பிறரிடம் எதையும்) யாசிக்காத உறுதிப்பாட்டை உடைய. அத்தர் – கைகளை உடையவர்கள் (இரக்க மாட்டார் என்றபடி) ஆசி ஆவி இறைவனைப் பிரார்த்திக்கின்ற ஆன்மாவானது. ரதத்த மையத்தர் – பேரின்பத்தின் (வீட்டுலகின்) நடுவே இருக்கப் பெற்றவர்கள். (பிரார்த்தனையால் வீடு பெறுவர் என்றவாறு)*

*140. துள் – துள்ளிப்பாய்கின்ற. அ – அந்த, நூலறி சுட்டு. விருந்த – காம்புகளை உடைய மலர்களாகிய. தொடை – (மன்மதனின்) அம்புகளால் ஏற்படும். அலர்இல் – பழிச்சொற்கள் இல்லாத. மெய்யர் – உண்மையான ஒழுக்கத்தை உடையவர்கள். விருந்தத் தொடை எனற்பாலது மடக்கணி நோக்கிக் கெடுதல் விகாரம் பெற்றது. துளவு இருந்த தொடை – துளசி இலை இடம்பெற்ற மாலை. அலர்இன் மெய்யர் – விளங்குகின்ற இனிய உடலினர் (துளசி மாலை அணிந்தவர் என்றவாறு). உள் அம் இல் தந்து மனமாகிய அழகிய வீட்டை அளித்து (உள்ளத்தில் தியானித்து) அவிர் ஓது – புகழினைச் சொல்லுகின்ற. அ இதத்தரே – அந்த நல்லவர்களே. உளம் இறந்த – தான் என்னும் உணர்வு (தற்போதம்) முற்றிலும் அழிந்துவிட்ட. விரோத விதத்தர் – (சாதாரணமான உலகியலிலிருந்து) வேறுபட்ட வகையில் ஒழுகுபவர்கள் ஆவர் (இயற்பகை என்றவாறு). இதத்தரே என்புழி ஏகாரம் பிரிநிலை. விதத்தர் – பெயர்ப் பயனிலை.*

141. பிரபந் தத்திற் பிறக்கு மிசைக்கணம்
பிரபந் தத்திற் பிறக்கு மிசைக்கணம்
நரபந் தத்துள நாசம ளித்திடும்
நரபந் தத்துள நாசம ளித்திடும் 57

பிரபு அந்தத்தில் பிறக்கும் மிசைக்கண் அம்
பிரபந்தத்தில் பிறக்கும் இசைக்கணம்
நர பந்தத்து உள நாசம் அளித்திடும்.

..........................................................................

142. ஆக மங்கள வைபவத் தேற்றனே
ஆக மங்கள வைபவத் தேற்றனே
ஏக நாயக மென்றுளத் தாக்குவார்
ஏக நாயக மென்றுளத் தாக்குவார். 58

ஆக மங்கள வைபவத்து ஏற்றன் ஏ
ஆகமங்கள் அவை பவத் தேற்றனே
ஏக நாயகம் என்று உளத்து ஆக்குவார்.

..........................................................................

*141. பிரபு – தலைவனாகிய திருமாலின். அந்தத்தில் – திருமேனி அழகில். மிசைக்கண் அம்பிறக்கும் – வானிடத்தில் உள்ள மேகம் ஒளிரும். பிரபந்தத்தில் – நாலாயிர திவ்யப் பிரபந்தப் பாடல்களில். இசைக்கணம் பிறக்கும் – இராக வகைகள் தோன்றும். நர பந்தத்து உள – மனிதர்களுக்குப் பாசங்களினால் ஏற்படுகின்ற. நாசம் அளித்திடும் – கெடுதியினின்று காப்பாற்றும்.*

*அம் பிறக்கும் என்புழி பிறங்கும் எனற்பாலது மடக்கு நோக்கி வலித்தல் விகாரம் பெற்றது.*

*142. ஆகமங்கள வைபவத்து – திருமேனிப் பொலிவின் சிறப்பினால், ஏற்றன் – உயர்வினை உடையவனும் (பேரழகன் என்றபடி) ஆகமங்கள் அவை – பாஞ்சராத்திரம் வைகானசம் ஆகிய வைணவ ஆகம நூல்களால், பவ – மேன்மையுடையவனாக. தேற்றனே. – தெளியப்பட்ட திருமால் ஒருவரே. ஏக நாயகம் என்று – பரம்பொருள் ஆகும் என. உளத்து ஆக்குவார் – மனத்தில் நினைவை எப்போதும் ஏற்படுத்திக்கொண்டிருப்பார்.*

*ஏற்றன் ஆகிய தேற்றனே ஏக நாயகம். முதலடியில் ஏகாரம் அசை. இரண்டாவதில் தேற்றம். அவை – பகுதிப் பொருள் விகுதி. ஆகமங்களவை தேற்றன், பவத்தேற்றன் எனத் தனித்தனி இயைப்பினும் அமையும்.*

143. ஈனத் தாரணி யிங்கணை வாவிமெய்
ஈனத் தாரணி யிங்கணை வாவிமெய்
ஞானத் தாரங்க நாதக ராவென்பார்
ஞானத் தாரங்க நாதக ராவென்பார் 59

ஈனத் தாரணி இங்கு அணை வாவி மெய்
ஈ நத்தார் அணி இங்கண் அவாவி மெய்
ஞானத்தா ரங்கநாத கரா என் பார்
ஞால் நத்தார் அங்க நாத கரா என்பார்.

*143. ஈன தாரணி இங்கு அணை – கீழ்மையான உலகியல் இச்சைகள் இப்பிறப்பில் பொருந்த. வாவி – அவற்றைக் கடந்து. மெய் ஈ நத்தார் அணி – (மற்றும் ஓர்) உடம்பு அளிக்கப்படுவதை விரும்பாதவர்களின் கூட்டம் (பிறவிவேண்டாதார் என்றவாறு) இங்கண் அவாவி – (காரைமடையாகிய) இவ்விடத்தை விரும்பி. மெய்ஞானத்தா – உண்மையான அறிவுடையனவரே. ரங்கநாத – அரங்கநாதப்பெருமானே. கரா – தெய்வமே. என் பார் – அடியேனைக் கடைக்கண் நோக்கி அருளும். ஞால் நத்தார் அங்க – தொங்குகின்ற நத்து என்னும் மூக்கணியை அணிந்துள்ள திருமகளை மார்பில் உடையவரே. நாத கரா – ஒலிச் சிறப்பு வாய்ந்ததும் கரத்துடன் இசைக்கப்படுவதும் ஆகிய வேத வடிவானவரே. என்பார் – என்று துதி செய்வார்கள். பிறவி வேண்டாதவர்கள் இத் தலத்தை அடைந்து போற்றுவர் என்பது கருத்து*

*ஈ – முதனிலைத் தொழிற்பெயர் செயப்பாட்டுவினைப் பொருளில் ஆட்சி, நத்தார் – இரண்டாம் அடியில் வினையாலணையும் பெயர், ஈற்றடியில் – குறிப்பு வினையாலணையும் பெயர். எற்பார் என இருக்க வேண்டியது மடக்கு நோக்கி மெலிந்தது. கரம் ஆகுபெயராகச் கரத்தை உடைய வேதத்தை உணர்த்தியது.*

## திருக்கோயில்

*(அறுசீர் விருத்தம்)*

144. உடுக்கும் நேமி வரையேபோல்
ஓங்கும் மதில்மேல் அண்டமுகடு
அடுக்கும் படிநீள் கோபுரம்முன்பு
அமைமா பலியின் முடிக்கணியக்
கொடுக்கும் பதம்,அல் லதுமுழுதும்
கொள்ளும் படியால் மேலாக
எடுக்கும் பதம்போன் றுயிர்களைமேல்
ஏற்ற எழுந்த செயல்கடுக்கும். 60

145. தாழாக் கருடக் கொடிசிகரந்-
தன்னில் அசையும் பெருந்தோற்றம்
"வாழாட் பட்டுள் ளீர்!வந்து
மண்ணும் மணமும் கொண்மின்;அன்றிக்
கூழாட் பட்டீர் களைஎங்கள்
குழுவிற் புகுதல் ஒட்டோம்"என்று
ஏழாட் காலும் பழிப்பில்விட்டு
சித்தன் இசைத்தல் போலுமே. 61.

*144. நேமி வரை – சக்ரவாளகிரி. மாபலி – மகாபலிச் சக்ரவர்த்தி. கோபுரம் மகாபலியின் தலையில் அணியக் கொடுக்கும் திருவடியை அல்லது உலகம் முழுவதையும் ஓரடியால் அளப்பதற்காக மேல்நோக்கி எடுக்கும் பாதத்தைப் போன்று விளங்கும். அக் கோபுரத்தின் தோற்றம் இறைவன் திருவடி உயிர்களை மேலேற்றுதலைக் காட்டும். மகாபலிக்காகத் திருமால் உலகளந்த வரலாறு வெளிப்படை.*

*145. தாழா – கீழே இறங்காத. சிகரந்தன்னில் – கோபுரத்தில், தன் பகுதிப்பொருள் விகுதி. வாழ ஆட்பட்டுள்ளீர் என்க. மண்ணும் – திருமண்ணும். மணமும் – திருத்துழாயும். கூழ் ஆட்பட்டீர்களை – சோற்றுக்காக அடைக்கலம் புக்கவர்களை. ஏழு ஆட்காலும் – ஏழுதலைமுறையாக. பழிப்பு இல் – வசையற்ற. விட்டு சித்தன் – பெரியாழ்வார். காண்க :*

"வாழாட் பட்டுநின் றீர் உள்ளீ ரேல்வந்து
மண்ணும் மணமும் கொண்மின்;
கூழாட் பட்டுநின் றீர்களை எங்கள்
குழுவினில் புகுதலொட்டோம்;
ஏழாட் காலும் பழிப்பிலோம் நாங்கள்
இராக்கதர் வாழ் இலங்கை
பாழா ளகப் படைபொரு தானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே."

(திவ்வியப்பிரபந்தம் 1-1-3)

146. பொருந்து மடைப்பள் ளியின்நெருப்பும்
புகையும் மேல்கீழ் போந்துலகம்
அருந்தும் ஒருவன் பிரசாதம்
அவனி ஒன்றன் றுலகெவற்றும்
இருந்துள் ளீர்க்கும் பொதுவாம்என்று
இசைத்துத் தம்ம துருவுகளைத்
திருத்தும் பரம பதத்தினிடை
சேர்த்துத் திரும்பாச் செயல்காட்டும். 62

147. சூடிக் கொடுத்த நாச்சியுடன்
தூய அலர்மேல் மங்கையரைத்
தேடிக் கொடுத்த அருள்அரங்கச்
செல்வன் கோயில் திருவிளக்கு
நாடிக் கொடுத்த ஆழ்வார்கள்
நாலா யிரம்என் றுலகறியப்
பாடிக் கொடுத்த பாடல்ஒளிப்
படிவுற் றவிரும் செயல்போலும் 63

148. துளசி மணியும் பத்திரம் தோய்
தொடையும் புனைந்து, துவாதசமாம்
வளமை பொருந்தும் திருநாமம்
வயங்கும் பாக வதர்கூட்டம்
உளம்நெக் குருகிச் சீதரன்தாள்
உன்னி அழல்சார் இழுதேபோல்
இளகிக் கரைவார்; கரையில்லா
இன்பக் கடலின் மூழ்குவார். 64

*146. மடைப்பள்ளி – கோவிலில் உள்ள சமையல் அறை. மேல்கீழ் – மேலும் கீழும், உம்மைத்தொகை. அவனி ஒன்று அன்று – நில உலகம் ஒன்றிற்கு மட்டும் அல்ல. உலகு எவற்றும் – மேல்கீழ் ஆகிய எல்லா உலகங்கட்கும். தம்மது உருவு – தீ, புகை ஆகிய தம் வடிவம்.*

*147. சூடிக்கொடுத்த நாச்சி – ஆண்டாள். அலர்மேல் மங்கை – திருமகள். பாடல் – திவ்வியப் பிரபந்தம். விளக்கு புறக்கண்களுக்கு இறைவனின் திருவடியைக் காட்டுவதுபோல ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் அகக்கண்களுக்குக் காட்டுகின்றன என்றவாறு.*

*148. பத்திரம் தோய் தொடை – துளசி மாலை. துவாதசம் – பன்னிரண்டு. அழல் – தீ. இழுது – நெய். நாமம் என்னும் சொல் இரட்டுற மொழிதலாகத் திருமண்ணையும் திருமாலின் பன்னிரு திருப்பெயர்களையும் குறிக்கும்.*

149. சேவை அகத்திற் கண்டனல்சார்
சேவை எனமெய் உருகி,நீர்ச்
சேவை எனக்கண் ணீர்பொழிந்து,
சேறாக் குவர்ஆ லயம்எங்கும்;
மாவை பவக்காட் சியைக்கண்ட
மாத்தி ரத்தாங் கமைவோரும்
பாவை எனவே பகவன்அடிப்
பதுமம் கருதி அமைந்திடுவார். 65

150. இடியோ எனும்மத் தளத்தொனியும்
இமையோர் அமுதத் தின்சுவைஇப்-
படியோ என்னும் குழல்யாழின்
பண்ணும், இனிய நாதஇசை
முடியோ என்னும் சங்கீத
முழக்கோ வருஞ்சீர்க் கோயிலிசை
குடியோ வரும்மெய் அன்பருள்வை-
குந்தம் குடிகொண் டமையுமே. 66

151. நாலா யிரமாம் பாஇசைத்து
நாவாய் இரங்கும் அவர்விழியப்
போலா யிரந்தந் திடினும்அவை
போதா தென்னும் தகையில்,அவன்
பாலாய் இரங்க வேண்டும்எனப்
பரிவில் தொழுவார் காரைவனம்
மேலாய் இரங்க நாதன்அடி
மெய்யன் புடைய தொண்டர்களே. 67

*149. சேவை – தரிசனம். அனல் சார் சேவை – பந்த சேவை. நீர்ச்சேவை, தீர்த்த சேவை, இவை இரண்டும் இத்தலத்திற்குச் சிறப்பானவை. ஆலயம் எங்கும் சேறு ஆக்குவர். மா வைபவம் – பெரும் சிறப்பு. மாத்திரத்து ஆங்கு. பாவை – சிலை. பதுமம் – தாமரை.*

*150. பண் – இசை. முழக்கு ஓவரும் – ஓசை நீங்காத, முழக்கு என்புழி எண்ணும்மை கூட்டுக. குடி ஓவரும் – வசித்திருத்தலை நீங்காத.*

*151. நாவாய் – நாக்கினைப் பெற்றவாய். அவர் என்றது அடியார்களை. விழியப்போல் என்பது கையெழுத்துப்படியில் உள்ள மூலபாடம். பொருள் விளங்கவில்லை. விழியைப்போல் எனத் திரித்துக் கொண்டால் உவமையின் பயன் தெளிவாக இல்லை.*

152. தூவல் அமையும் கொண்மூவில்
சொரியும் விழி,உள் உருகிடும்பேர்
ஆவல் அமையும் பாகவதர்
அன்றி, அமரா வதிஇறையும்
மேவ உளமீ தச்சம்உறும்
விரம் மலிவார் சயவிசயர்
காவல் அமைசந் நிதிமகிமைக்
கணம்ஆர் இசைத்து முடிப்பனவே.? 68

153. செம்மை பெறவா னகத்தமையும்
சீத முகிலைக் கிழித்தெழுந்து
வெம்மை ஒளிபெற் றிசைகலச
விமானம் அமையும் பெருங்காட்சி
மும்மை அடிகேட் டுலகளந்த
முகுந்தன் உடலா தியகொண்டே
எம்மை ஆளும் கருணையினால்
என்றும் திகழும் படிகாட்டும். 69

(வேறு)

154. கருவடிவாழ் பிறப்பிறப்பைக் கடத்தி,அருட்
பேரின்பக் கடல தான
திருவடிவாழ் வளித்திசையார் திசைஒருபத்து
இசைவார்க்கும் சிறந்த பத்தி
மருவடிவாழ் வார்அமையும் பெருவாழ்வு
தரக்காரை வனத்தில் ஓங்கும்
தருவடிவாழ் அருள்அரங்க நாதன் இசை
துதித்தியல் மா தவம்கொள் வேனே. 70

*நகரப்படலம் முற்றிற்று.*

152. தூவல் – (மழை நீரைச்) சிதறுதல். கொண்மூவில் – மேகத்தைப் போல, விழியும், உள்உருகிடும் பேர் ஆவலும் என ஈரிடத்தும் எண்ணும்மை கூட்டுக. அமராவதி இறையும் – இந்திரனும், உயர்வு சிறப்பும்மை. சயவிசயர் – கோயிலின் வாயில் காப்போர். பாகவதர்களுக்கு எளிய சந்நிதி. ஆனால் இந்திரனுக்கும் அரிய சந்நிதானம் என்றபடி.

*153. சீத முகிலை – குளிர்ந்த மேகத்தை வெம்மை விரும்பத்தக்க. பெற்று இசை. இசை – பொருந்தியுள்ள. மும்மை அடி – மூன்று காலடி (நிலம்)*

*154. கரு அடி வாழ் – கருப்பத்தின் அடியிலே தங்கியிருக்கின்ற. வாழ்வு அளித்து. இசை ஆர் திசை – ஒன்றோடொன்று இணைந்துள்ள திக்குகள். இசைவார்க்கும் – பொருந்தியிருப்பவர்க்கும், எல்லா உயிரினங்களுக்கும் என முற்றும்மை. மருவு – பொருந்தி. அடிவாழ்வார் – திருவடிகளின்கண் நிலைபெற்றிருக்கும் பாகவதர். தரு அடி வாழ் – மரத்தின் கீழே எழுந்தருளியுள்ள.*

## *3. புராண வரலாற்றுப் படலம்*

*(அறுசீர்விருத்தம்)*

155. சத்திய லோக மீதில்
சகத்திரத் தளங்கள் வாய்ந்த
புத்தியற் கமல பீடம்
பொலிந்துவாழ் எண்கண் மேய
நித்தியன் தன்பால் எய்தி
நெஞ்சகம் குழைந்து, மேலாம்
துத்தியம் புகன்று போற்றித்
தொன்முனி வரர்சொல் கின்றார். 1

156. மூலஆ ணவஇ ருட்டுள்
மூழ்குறா துயிர்கட் கெல்லாம்
கோலமும் குணமும் நல்கிக்
குலவும்எண் பத்தின் மேலாம்
நாலதாம் இலக்க யோனி
பேதமும் நல்கிப் பின்னர்
மேலதாம் பிறப்பின் மீதாம்
மெய்த்தவம், விவேகம் தந்தாய்! 2

157. கன்மமும் மாயை தானும்
கதித்தபந் தத்தை ஊட்டி
வன்மம்ஆற் றிடும்இ கத்தில்
மயங்கிடும் எமக்கு நல்ல
தன்மம்ஆம் நெறிமென் மேலும்
தழைக்குமா றருளத் தக்க
மன்மம்ஆம் புனிதத் தானம்
வகுத்தருள் எனஇ ரந்தார். 3

*155. சத்தியலோகம் – பிரமன்வாழ் உலகு. சகத்திரத்தளங்கள் – ஆயிரம் இதழ்கள். கமல பீடம் – தாமரை ஆசனம். எண்கண் – எட்டு விழிகள். நித்தியன் தன்பால் – பிரமனிடம். தொல் – பழமையான.*

*156. கோலம் – வடிவம், உடல். எண்பத்தின் மேலாம் நாலதாம் இலக்க யோனி பேதம் – எண்பத்து நான்கு லட்சம் வகையான உயிரினங்கள்.*

*157. கதித்த – அதிகரித்த. பந்தம் – பிணைப்பு. இகத்தில் – உலகியல் வாழ்வில். மன்மம் ஆம் – இரகசியமான. தானம் – தலம்.*

158. ஆங்கது கேட்ட வேதன்
அளப்பில்பேர் ஆர்வத் தோடும்
தீங்கறு தருப்பை தன்னால்
சிறந்தசக் கரம்ஒன் றாக்கி,
நீங்கவிட் டிதுதான் சென்று
நின்றிடும் இடம்பே ரின்பம்
தாங்கருட் பூமி யாகித்
தழைக்கும்என் றுய்த்த வாறே, 4

159. நலம்பொலி நேமி சென்ற
ஞானஆ னந்த உண்மைத்
தலம்பொலி வான நைமி-
சப்பெயர்க் கானம் ஆகிக்
குலம்பொலி கேள்வி முற்றங்-
குரித்திடும் ஒருதாய் என்னப்
புலம்பொலி சான்றோர் போற்றும்
புண்ணிய வைப்பாய் மன்னும். 5

160. அத்தகு நைமி சப்பேர்
ஆரணி யத்தின் சீரும்,
மெய்த்தவச் சிறப்பும், கேள்வி
வேள்விஆ தியிற்க ளிக்கும்
உத்தம முனிவர் சீரும்
உலகினில் புலமை சான்ற
வித்தகர் இனம்பன் னூலில்
விளம்பினர் மிகவும் மாதோ. 6

*158. வேதன் – பிரமன். தீங்கு அறு. தாங்கு அருள்பூமி. இது சென்று நின்றிடும் இடம் அருட்பூமி ஆகித்தழைக்கும் எனக்கூறி உருட்டிவிட்டான்.*

*159. நேமி – சக்கரம். நைமிசப்பெயர்க்கானம் – நைமிசாரணியம். கேள்வி – வேதம். எழுதாக்கிளவி. முற்று அங்குரித்திடும் – முழுமையாகத் துளிர்விடும். புலம் – அறிவு. வைப்பாய் – நிதியாக.*

*160. ஆரணியம் – காடு. சீர் – சிறப்பு. வித்தகர் இனம் – அறிஞர் கூட்டம். பல் நூலில் – பல புராணங்களில். மாதோ – ஈற்றசை.*

161. அன்னவர் பலரும் பல்வாறு
அருமையும் பெருமை யும்தோய்
நன்னல அணிகள் சால
நவின்றனர்; அதனை யானும்
பன்னலன்; புதிதாய் ஒன்றும்
பகரவும் அறியேன்; அப்பால்
மன்னல்ஆம் செயலை ஓத
மதித்தனன் புவியோர் தேர. 7

162. முழுத்தவச் சவுந காதி
முனிவர்கள் யாரும் சீலம்
பழுத்தவிர் வியாச மேலோன்
பாக்கியச் சீடன் ஆகும்
விழுத்தகு சூத மேலோன்
மெல்லடி அருச்சித் தேத்தி
அழுத்துபே ரன்பி னோடும்
அவன்புடை வினவ லுற்றார். 8

163. தெக்கண திசையின் மீதில்
சேர்பஞ்ச கிரிக ளாகி
முக்கணன் முதலோர் நின்ற
முறைமைபோல், கருணை ஞான
மைக்கவின் மேனி மாயன்
மருவிய தலங்கள் தம்மில்
மிக்கசீர்த் தலம்,தீர்த் தங்கள்,
மூர்த்திசீர் விளம்பு கென்றார். 9

*161. அணிகள் – சிறப்புக்கள். சால – மிகுதியாக. பன்னலன் – கூறேன். மன்னல்ஆம் – நிலைபெற்றுள்ள, (சொல்லவேண்டி) இருக்கின்ற. மதித்தனன் – கருதினேன்.*

*162. சவுநகாதி – சவுநகர் முதலிய. விழுத்தகு – மேன்மையான. சூத மேலோன் – சூத மாமுனிவர். அவன்புடை – அவனிடம்.*

*163. தெக்கண திசை – தெற்கு. பஞ்சகிரிகள் ஆகி – ஐந்து மலைகளின் வடிவம் பெற்று. காண்க : 105ஆம் பாடல். மை கவின் – மேகத்தின் அழகினை உடைய.விளம்புக என்றார்.*

164. அன்னது வினவிச் சூத
அருந்தவன் தன்ன கத்தே
நன்னலக் கொங்கில், ஆறை
நாட்டினுள், மாட்சி சான்ற
பன்னரும் மகிமை தாங்கும்
பஞ்சரங் கச்சீர் உன்னிக்
கொன்னவிர் விழிநீர் மல்கிக்
குளிர்ந் துளம் கூற லுற்றான். 10

165. "அருட்டிரு உளப்பேர் அன்பால்
ஆற்றும்மா தவச்சீர் சான்ற
தெருட்டிரு முனிவீர்! நுந்தம்
செய்கைகள் யாவும் உம்தம்
பொருட்டினால் அன்று; பார்மேல்
போந்தமா னிடருள் உற்ற
இருட்டிறம் தவிர்ந்தீ டேறும்
இயல்பையே வினாவி னீரால். 11

166. கடலகத் துள்ள நீரைக்
கருவிமா முகில்கள் மேய்ந்து,
புடவியில் உயிர்கள் இன்பப்
பொலிவுறப் பெய்தல் போல்என்-
னிடம்மறைந் துற்ற காதை-
யினைவரை முடிமேல் வைத்த
சுடர்எனப் புரிந்தீர்க் கியான்செய்
தொண்டிசைத் திடல்என் றோதும். 12

*164. ஆறை நாடு – முற்காலத்தில் கொங்கு நாடு நிர்வாக வசதிக்காக 24 பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றுள் ஆறைநாடு ஒன்று. இது இன்றைய கோவை, அவிநாசி வட்டங்களும், பல்லடம் வட்டத்தின் வடமேற்குப் பகுதியும் அடங்கிய நிலப்பகுதி ஆகும். மாட்சி சான்ற – சிறப்புக்கள் நிறைந்த. பன்னரும் – சொல்லற்கரிய, அகரம் தொக்கது. கொன் அவிர் – பெருமை மிக்க. உளம் குளிர்ந்து கூறலுற்றான்.*

*165. தெருள்திரு – ஞானத்தெளிவாகிய செல்வத்தை உடைய. போந்த – பிறந்துள்ள. உற்ற – பொருந்தியுள்ள. இருள் திறம் – ஆணவ மலத்தின் வலிமை, அறியாமையின் வன்மை எனினும் ஆம். தவிர்ந்து (மானிடர்) ஈடேறும். ஆல் – ஈற்றசை.*

*166. கருவி – இடி, மின்னல் முதலியவற்றோடு கூடிய. புடவி – நிலம். வரை முடி – மலை உச்சி. புரிந்தீர்க்கு – செய்தவர்களாகிய உங்களுக்கு, வினையாலணையும் பெயர். யான் செய்தொண்டு இசைத்திடல் – என் பணி கூறுதலே ஆகும்.*

## *4. பிரமதேவர் பூசித்த படலம்*

*(அறுசீர் விருத்தம்)*

167. அரிய தவம்தோய் நைமிசப்பேர்
அமலக் கானத் தினுக்கணியாம்
பெரிய குணச்செள நகர்முதலாம்
பெரியீர்! உமது சங்கற்பம்
விரியும் உலகத் தினிற்பத்தி
வித்திட் டிருண்ட நாத்திகத்தை
இரியத் துரத்தி, ஆத்திகம்தந்து,
இதயக் கமலம் விரிக்குமே 1

168. நீடும் புனிதத் தவச்சிறப்பால்
நிறையும் தெய்வா மிசமகிமை
கூடும் பெரியோர் தம்புடைசற்
குணமே யன்றிக் குற்றம்எனக்
கோடும் செயல்எய் தாதெனினும்
குழவி பொருட்டில் தந்தைவிளை-
யாடும் செயல்போல், நம்பொருட்டால்
ஆற்றும் நடிப்பே ஆகுமால்.

169. நாத விந்து நிலைகடந்த
ஞான மயத்தோர் உள்ளத்தில்
பேதம் அமையா தவர்சங்கற்-
பித்த வண்ணம் பஞ்சகலைப்
பூத விளக்கம் இந்திரியம்
புசிக்கக் காட்டி, உயிர்க்கருளும்
ஆத லால்அங் கவர்நமைஒப்
பவர்என் றிசைப்போர் அறிவிலரே. 3

*167. அமல – குற்றமற்ற. சங்கற்பம் – எண்ணம், விருப்பம் எனினும் ஆம். வித்து இட்டு – விதைத்து. இரிய – அஞ்சும்படி.*

*168. பெரியோர் தம்புடை – பெரியவர்களிடம். சற்குணம் – நற்பண்பு. கோடும் – தவறும். எய்தாது. குழவிபொருட்டில் – குழந்தைக்காக.*

*169. அமையாது. பஞ்சகலை – சாந்தி, சந்தியாதீதம், நிவிர்த்தி, பிரதிஷ்டை, வித்தை என்பன. இவற்றின் விளக்கத்தைச் சித்தாந்த நூல்களிற் காண்க. இந்திரியம் – புலன்கள். பஞ்ச என்பதைப் பதம், இந்திரியம் என்பனவற்றோடும் கூட்டுக. அங்கு – அசை. அவர் – ஞான மயத்தோரைச் சுட்டியது.*

170. தருமா ணாக்கர் தம்மதுபக்-
குவத்தின் அளவில் உபதேசம்
தருமாற் றால்,அன் னவன்நிலைமை
சார்ந்த சீடர் தெரிகிலர்போல்,
ஒருவாற் றமையும் காட்சியினால்
உண்மை உணர அமையாதால்;
உருஏற் றமையும் உயிர்உண்மை
உணர்வோர் அறிவே துணிபாமால். 4

171. சருவ உலகம், உயிரினங்கள்
சரத்தி னுடனே அசரம்என
மருவ லாகும் திணைகளுக்குள்
வயங்கி, அவற்றை ஆட்டுவிக்கும்
ஒருவ னான பகவன்அருள்
உளச்சங் கற்பத் தால்பிரமன்
கருவம் மிகஉற் றென்னில்உயர்
கருத்தா இலைஎன் றிறுமாந்தான். 5

172. அன்ன செயல்கண் டரிஅவன்றன்
அகங்கா ரத்துள், அகலாதே
பின்னம் அறநின் றுள,தன்அருட்
பெற்றி உணர்த்தப் பிருகுமுனி
தன்னந் தரங்கத் தினில்தூண்டச்
சார்ந்தான் உயர்சத் தியலோகம்;
மன்ன அமையும் பிரமாவை
வணங்கித் துதிகள் பாடினான். 6

*170. அன்னவன் என்றது குருநாதரை. குருநாதர் தம்பால் வரும் சீடனின் பக்குவத்தை அறிந்து அவனுக்கு எவ்வளவு உபதேசம் செய்ய வேண்டுமோ அவ்வளவே செய்வர். இதனைக் கொண்டு அந்தக் குருநாதர் அறிந்ததே இவ்வளவு தான் என முடிவுசெய்வதோ, அவர் அறிவின் எல்லையை அறிந்துவிட்டோம் என்பதோ தவறாகும். அதுபோலவே இந்தப்பிறவியில் நாம் பெற்றுள்ள அளவான அறிவைக் கொண்டு எல்லாவற்றையும் உணர்ந்து கொண்டு விட முடியாது. ஒருவாற்று அமையும் – ஏகதேசமாக நேரிடுகின்ற. காட்சி – அறிவு அமையாதால் என்புழி ஆல் அசை. உரு – உடல். துணிபு ஆம். ஆல் ஈற்றசை.*

*171. சருவ – எல்லா. சரம் – இயங்குதிணை. அசரம் – நிலைத் திணை. வயங்கி – பொருந்தி. ஒருவனான – ஒப்பற்றவன் ஆகிய. பகவன் திருமால். என்னில் – என்னைவிட. உயர் கருத்தா – மேலான தலைவன். இறுமாந்தான் – கருவம் கொண்டான்.*

*172. அன்ன – அத்தகைய. கண்டு அரி. அகங்காரத்துள் – அந்தக் கரணங்களுள் ஒன்று. பின்னம் அற – வேற்றுமை இன்றி. முனிதன் – பிருகு முனிவருடைய. அந்தரங்கத்தினில் – உள்ளத்தில். செயல்கண்டு நின்றுள தன்பெற்றி உணர்த்த, பிருகு முனிதன் அந்தரங்கத்தினில் அரிதூண்ட முனிவன் சத்தியலோகம் சார்ந்தான் என்பது பொருள் முடிபு. மன்ன அமையும் – நிலையாக வாழும்.*

173. புலங்கள் இசைந்தும், அகங்காரப்
புதிய இருள்மு டியதாலே,
நலங்கொள் முனிவற் பார்த்தொன்றும்
நவிலா னானான் செயல்உணர்ந்து,
பலங்கொள் சினம்உற் றுன்னுடைய
பதவி இழந்து, பவிசிழந்து,
நிலங்கொள் மனிதன் ஆகுகென,
நிகழ்த்தி, அவண்நின் றிலன்,அகன்றான். 7

174. பிருகு முனிவன் அகன்றவுடன்,
பிரமன் பிரமை உற்றுடைந்துட்
கருது கின்றான் இதுநனவோ?
கனவோ? மாயை யோ?எனக் கொண்டு
உருகும் சிந்தை உடையவனாய்
ஒன்றும் தோன்றா தயர்போதில்
கருணை அரங்கன் திருவருளால்
ககன வாக்கொன் றெழுந்ததே. 8

175. "வாராய் பிரம தேவனே!
மன்னும் பூலோ கத்தினிடை,
நீரார் பரத கண்டத்தில்,
நிகழ்தெக் கணத்தில், கொங்கென்னும்
பேரார் நாட்டில், அணிநீலப்
பிறங்கற் கருகாய்ப் பலவிதம்தோய்
காரார் தருக்கள் மிகமலர்ந்து,
கமழ்பூம் பொழில்சூழ் வளம்மிகுந்தே 9

*173. புலங்கள் இசைந்தும் – வந்தது அறிவிற்குத் தெரிந்தும். நவிலானானான் – சொல்லாதவனாகிய பிரமனின், வினையாலணையும் பெயர். நின்றிலன் – நிற்காமல், முற்றுவாய்பாட்டு வினையெச்சம்.*

*174. கருதுகின்றான் – சிந்திப்பவனாகி, வினையெச்சம். ககன வாக்கு – ஆகாயவாணி, அசரீரி. ஈற்றேகாரம் அசை.*

*175. நீலப்பிறங்கல் – நீலமலை, கார்ஆர் – வானளாவிய.*

176. தேவர், கருட காந்தருவர்,
சித்தர், வித்தி யாதரர்தம்
ஆவல் மனைமா ருடன்இணைந்தே
அரிய கானத் துதிகளினால்
தேவ தேவற் குளத்துவகை
செய்யும் கீதத் தினைவினவிக்
காவல் மிதுன கின்னரங்கள்
கனிவில் பகவற் றுதிக்குமால். 10

177. "ஆய மகிமை பலகோடி
அவிரும் புகழ்ச்சண் பகவனத்தில்
நேயம் அமையும் கூர்மஉரு
நிகழ்ந்த குறிஒன் றுண்டதனைத்
தூய விழியால் கண்டவர்க்கும்
துன்ப வடிவாம் ஐம்புலனும்
மாயம் அமைய மறைவித்து
மாயப் புரியும் மாண்புடைத்தால். 11

178. "அன்ன மூர்த்தி தனைப்புறத்தில்
அருமைப் புனலா தியஆட்டிப்
பொன்னந் தளத்தா மரைஆதி
புனைந்து, துழாய்அர்ச் சனைமுதற்செய்து,
உன்னற் கரும்பூ சனைஉஞற்றி,
உலவாத் தவம்செய் திடுவாயேல்
இன்னல் அகலும்; இன்பம் எய்தும்;"
என்ன உணர்வான் இசைத்ததே. 12

*176. கான – இசைப்பாடல்களாகிய. தேவதேவற்கு உளத்து உவகை. காவல் மிதுன கின்னரங்கள் – கூண்டில் உள்ள ஜோடிக் கிளிகள். ஆல் – ஈற்றசை.*

*177. சண்பகவனம் – காரைமடை. கூர்ம உரு – ஆமை வடிவம். குறி – இலிங்கம். கண்டவர்க்கும் – வெறுமனே பார்த்தவர்களுக்குக்கூட, அன்பு செய்தல் வழிபடுதல் இல்லாமல் வேடிக்கையாகப் பார்த்தவர்களுக்கேகூட.*

*178. பொன்அம் தள – ஒளியும் அழகும் பெற்ற இதழ்களை உடைய. உன்னற்கு அரும் – நினைத்தற்கரிய. உஞற்றி – செய்து. உலவா – குறையாத. உணர்வான் – உணர்வதற்காக, இனி உணர்ந்த வானம் என வினைத்தொகையாகக் கொண்டு எழுவாய் ஆக்கினும் அமையும்.*

179. தெய்வத் தகைசால் அசரீரி,
திசைமா முகன்என் செவிகளிலும்
வைவைத் தவிர்வேல் எனப்புகுத்தும்
வன்பார் பிருகு முனிசாப
நைவற் றிடச்செய் தலில்களித்து,
நண்ணும் காரை வனம்மருவி,
உய்வற் புதமார் அரங்கன்அருள்
உருக்கண் டன்பிற் பணிந்தேத்தி, 13

180. தன்பேர் அமையும் தீர்த்தம்ஒன்று
சமைத்துப் பிராதக் காலத்தின்
முன்பே நீரா டி,நன்வேத
முறையில் இறைவன் அருட்பூசை
அன்பே தனது வடிவெனநின்று
ஆற்றி, அளவி லாதமெய்ப்பேர்
இன்பே உள்ளத் தள்ளூற,
இனிய துதிவிண் டேத்திடுவான். 14

181. அஞ்சாக் கிளரும் பொறிபுலன்கள்
அஞ்சாக் கிரம நெறிஇசையப்
பஞ்சாக் கினிமத் தியில்அமைந்து,
பகவன் இணைத்தா மரைஅடிகள்
நெஞ்சாக் கிளர்ஆ லயத்தின்நடு
நீங்கா தமைத்துள் இசைவிரத்தி
எஞ்சாக் களிப்பின் ஓர்அயுதம்
யாண்டு பெருமா தவம்புரிந்தான் 15

*179. வை வைத்து அவிர் – கூர்மை பெற்று விளங்குகின்ற. வன்பு ஆர் – வலிமை மிக்க, இது சாபத்திற்கு அடை. சாப நைவு அற்றிட – சாபத்தின் வருத்தம் தீரும்படி. இப்பாட்டு குளகம்.*

*180. பிராதக்காலம் – அதிகாலை. அள்ளூற – வாயில் உமிழ்நீர்ஊறுதல் என்பது சொற்பொருள், மிகுமாறு என்றபடி.*

*181. அஞ்சாக்கிளரும் – ஐந்தாக விளங்கும். அஞ்சா – அஞ்சி, பயப்பட்டு. கிரம நெறி – ஒழுங்கான வழி. பஞ்சாக்கினி – தவம் புரிபவர் தமக்கு நான்கு பக்கங்களிலும் நான்கு தீக்குண்டங்களை ஏற்படுத்திக் கொள்வர். மேலே காயும் சூரியனோடு சேர்ந்து ஐந்து ஆகிறது. நெஞ்சா – உள்ளமாக. நீங்காது அமைத்து உள். விரத்தி – வைராக்கியம். எஞ்சா குறையாத. அயுதம் – பத்தாயிரம்.*

182. வாணி கொழுநன் புரிதவத்தின்
மாட்சி உலகம் முற்றவுமே
காணி எனக்கொள் உயிர்கள்புரி
கன்மம் அனைத்தும் தவிர்த்தருளால்
பேணி அருள்என் றிடும்முறையில்
பெற்ற உலகெங் கணும்நிறையப்
பாணி அமைசங் காழிஅருட்
பகவன் கருணை பெருகிற்றால். 16

183. நீருண் டவிர்உள் ளொளிபடைத்து
நிறைவார் தெய்வ மணம்கமழ்ந்து
காருண் டமைமே னியின்மீதில்
கவின்ஆர் பீதாம் பரம்துலங்கக்
கூருண் டியல்சக் கரம்சங்கம்
குலவும் அபய வரதமுடன்
பாருண் டுமிழ்செவ் வாய்,அளந்த
பதமா தியும்மிக் கிசைந்தொளிர, 17

184. மின்னை நிகரிட் டிடையருட்கார்
வேலை அனைய விழிமலரும்,
பொன்னை அனைய திருவடியும்,
பொலிசீ தேவி பூதேவி
அன்னை இருபா லினும்பொருந்த
அணிப்பொன் மேரு வரைநிகராம்
கொன்னை உடைய கருடன்மிசைக்
கோலச் சேவை பாலித்தான். 18

*182. வாணி கொழுநன் – கலைமகள் கணவன், பிரமன். காணி – உரிமை. கன்மம் – வினைகள். பாணி அமை – கையில் உள்ள. ஆழி – சக்கரம். ஆல் – ஈற்றசை.*

*183. நீர் உண்டு – அன்பு பெற்று. கார் உண்ட – மேகம் போன்ற. மை – கரிய. பீதாம்பரம் – பொன்னாடை. கூர் உண்டு இயல் – கூர்மைபெற்றுள்ள. பார் உண்டு உமிழ்செவ்வாய், பார் அளந்த பதம், இரண்டும் வெளிப்படை.*

*184. வேலை – கடல். கொன்னை – பெருமையை. கோல – அழகிய.*

185. உள்ளக் கருணை நீர்வடிவாய்
உற்றான் பிரமன் பெருந்தவத்தால்
வெள்ளச் சகுண அருள்மேனி
விளங்கும் படிகாட் டிடஉள்ளப்
பள்ளப் பரமா னந்தம்வெளிப்
பட்டாங் கிகத்தில் விட்டாங்கு
துள்ளிக் கண்ணீர் உடல்நனைத்துத்
தூய்மைப் பரநீர் துலக்கிற்றால். 19

186. அன்பார் அடியார் விழிஅருவி
ஆடும் கருணை உருவாளன்
முன்பாய் இலகக் காண்டலுமே,
முளரிக் கடவுள் முற்படுமெய்
இன்பார் வேலை அலையில்எழுந்-
திடுவான்; வீழ்வான்; "தவம்இல்லா
வன்பா வேன்கண் காணவெளி
வந்தாய்! எந்தாய்!" எனத்துதிப்பான். 20

187. "ஆரா அமுதே! என் உளப்பேர்
அன்பே! அன்பார் அடியர்உளம்
பேரா நிறைவே! பேரின்பப்
பெருக்கே! ஞான பூரணமாம்
பூரா யத்தூ டென்நினைவைப்
பொருத்தும் கோவே! புனத்துளவத்
தாராய்! நின்பொற் பாதமலர்
தாராய்! அன்பு கூராயே. 21

*185. கருணை நீர் – தயை ஆகிய பண்பின். உற்றான் – உற்றவனாகிய. அருள்வெள்ளமாகிய சகுண மேனி என்க. வெளிப்பட்டு ஆங்கு இகத்தில். ஆங்கு அசை. ஆல் ஈற்றசை.*

*186. கருணை உருவாளன் – திருமால். முளரிக் கடவுள் – தாமரையில் இருக்கும் பிரமன். இன்பு ஆர். வேலை – கடல். வன்பு ஆவேன்.*

*187. பேரா – அகலாத. பூராயத்தூடு – விருப்பத்தினுள். புனத்துளவ தாராய் – காட்டுத் துளசிமாலையரே. தாராய் – தருவீராக.*

188. “புனமா யிருக்கக் கண்டேன்முன்;
பூசை புரியும் தொறும்உளத்தே
தினமா யிருக்கக் கண்டேன்பின்;
செய்த தவத்தெட் டெழுத்தோதும்
மனமா யிருக்கக் கண்டேன்;யான்
மாத வத்தால் சண்பகப்பேர்
வனமா யிருக்கக் கண்டேன்;மெய்
மாறா நிலைபெற் றுய்ந்தேனே. 22

189. “சோபங் கொடுத்தாய்; அகங்காரம்
தோய்த்தாய்; பிருகு முனிவரனால்
சாபங் கொடுத்தாய்; அசரீரி
தன்னால் ஈண்டித் தலம்ஆம்நிட்-
சேபங் கொடுத்தாய்; மாதவத்தால்
தேட, அதில்சார் மெஞ்ஞான
தீபங் கொடுத்தாய்; திருவருளின்
சிறப்பென் னென்று துதிப்பேனே! 23

190 “என்பாட் டிசைந்தேன் றனை மனித
என்பாட் டிசையும் பிறவிஎனும்
துன்பாட் டிசைப்பாய் போல்,எனக்குத்
தோன்றி இச்சண் பகவனத்தில்
அன்பாட் டிசைப்பித் ததன்பின்,உனது
அருட்பாட் டிசைத்துத் தவிராப்பேர்
இன்பாட் டிசைத்தாய்; பெருங்கருணைக்கு
என்மாட் டிசைகை மாறென்னே! 24

*188. தினம் – பகல்போன்ற ஒளி. யான் இடைநிலைத் தீபகமாக ஐந்து வாக்கியங்களுக்கும் எழுவாய் ஆயிற்று.*

*189. சோபம் – துன்பம். ஈண்டு – இந்த இடத்தில். ஆம் – ஆகிய. நிட்சேபம் – புதையல். சிறப்பு என் என்று துதிப்பேன். ஏகாரம் ஈற்றசை.*

*190. என்பாட்டிசைந்தேன்றனை – என்பாட்டைப் பார்த்துக் கொண்டு இருந்த எந்தனை. என்பு ஆட்டிசையும் – எலும்புகளோடு கூடிய. துன்பாட்டு – வருத்தம். அன்பாட்டு – அருளாடல். இன்பாட்டு – உவகை. என்மாட்டு இசை கைமாறு என்னே. ஏகாரம் எதிர்மறைப் பொருளாகக் கைமாறு ஒன்றும் இல்லை என உணர்த்தியது.*

191. கன்மம் மாய மாயமான
கடல்வீழ்ந் தாரைக் கடுநரகாம்
வன்மம் ஆய இடத்தில்விடும்
மரபே போல, மாதவமெய்த்
தன்மம் ஆய உருக்கொள்இச்சண் -
பகமா வனம்தற் சார்ந்தேற்குன்
மன்மம் ஆய பெருவாழ்வை.
வலிது தந்தாண் டதுமாதோ. 25

192. "செருக்கு நிலைதோய்ந் திருள்அடைந்து
செய்வ தறியேன் றன்உளந்தான்
இருக்கும் நிலைஓ தறிகிலன்;யான்
இசைத்த சத்த சுரமயமாம்
இருக்கு நிலையோ? அதன்மீதில்
இருக்கும் நிலையோ? உன் அருள்மெய்ப்
பெருக்கு நிலையோ? யாவதெனப்
பேச அறியேன் சிறியேனே. 26

193. "தந்தை எனவே எனைஉலகர்
சாற்றா நிற்பர்; அவர்தமைநான்
நிந்தை பொருந்தும் விதி அமைத்து
நீக்கி அலைப்பேன்; எனைஅளித்த
எந்தை உன்பே ரின்பம்வலிந்து
இழுத்தீந் திட்டாய்; இத்திறம்என்
சிந்தை மிசைஎண் ணிடும்தொறும் செந்
தீவாய் மெழுகில் உருகிடுமே!" 27

*191. கன்மம் – இருவினைகள். மாயமயம் ஆன. மன்மம் – இரகசியம். கன்மம் நரகத்தில் விடும் மரபேபோல, சண்பகவனம் தந்து ஆண்டது என்க. மாது, ஓ– அசைகள்.*

*192. ஓத அறிகிலன். சத்த சுர – ஏழு சுரங்கள். இருக்கு என்றது நான்கு வேதங்களுக்கும் உபலட்சணம்.*

*193. விதி – ஊழ்வினை. உலகத்தார்என்னைத் தந்தை எனப் போற்றுகின்றனர்; நான் அவர்களுக்கு ஊழ்வினையை ஊட்டி வருத்துகிறேன். ஆனால் என் தந்தையாகிய தேவரீர் எனக்குப் பேரின்பம் தந்தருளினீர்கள். தீவாய் – நெருப்பில் விழுந்த.*

194. என்று பலவாத் துதித்துருகி,
எழுந்தும் பணிந்தும் பரவசனாத்
துன்றும் பிரம தேவன்இசை
தொண்டுக் குவந்தச் சுதன்இசைப்பான்,
"நன்று! நன்றுன் பத்திநிலை!
நாம்கண் டுவகை கொண்டேமால்;
இன்றுன் கனிவாய் கொடுவரம்கேட்-
டிடுவாய்; அருள்வேம்" எனப்பகர்ந்தான். 28.

195. வாரி இசையும் புனலதனை
வாரி, வானத் திடைஅடைந்த
மாரி எனவே பொழிகருணை
வள்ளல் இசைப்ப, அயன், "தருஆர்
ஊரில் இசைவார் கேட்டிடும் ஓர்
ஊனம் உடையார்; உன்கண்அருள்
நீரில் இசைவேற் கேதுகுறை?
நிமலா! அருள்வாய்." எனப்பகர்ந்தான். 29

196 அயன்ஓ திடக்கேட் டலும்உவப்புற்று
அரங்க நாதன் இசைக்கின்றான்,
"நயம்ஆர் பிரம! நீதொட்டு
நமைஆட் டியஇத் தீர்த்தம்தான்
வியன்ஆர் உனது பெயர்ஏற்று
விளங்கும்; நீஅர்ச் சனைசெய்அருள்
மயமாம் மூர்த்தி தான் இரங்க -
நாதர் என்ன வயங்கிடுமால். 30

*194. பரவசனா – உவகை கொண்டவனாகி. தொண்டுக்கு உவந்து அச்சுதன்.*

*195. வாரி – 1. கடல். 2. அள்ளிக்கொண்டு. மாரி – மேகம். தரு ஆர் ஊரில் இசைவார் – கற்பக நாட்டுத் தேவர்கள். ஊனம் – குறை. அயன், "தரு ஆர் ஊரில் இசைவார் ஊனம் உடையார். உன்கண் அருள்நீரில் இசைவேற்கு ஏது குறை?" எனப் பகர்ந்தான்.*

*196. நயம் ஆர் – இனிமை பொருந்திய. தொட்டு – தோண்டி. வியன் – பெருமை. மூர்த்தி – விக்கிரகம். வயங்கிடும் – விளங்கிடும்.*

197. "இந்தப் பிரம தீர்த்தத்தில்
எவரே மூழ்கி, உவந்தன்பால்
முந்தப் பொலியும் மூர்த்தியினை
முறையால் பூசை புரிகின்றார்
பந்தப் பிணிகள் முற்றறுத்துப்
பரம பதத்திற் புகுவார்என்று,
அந்தப் படவோ துபு, பகவன்
அந்தர்த் தியானம் ஆயினான். 31

198 பச்சை விரிஆ யிரம்கோடி
பரிதி நிகராம் மேனியுடன்,
செச்சை விரியும் மலர்வாயிற்
சிந்தும் அமுதும் துய்த்திடவே
இச்சை விரியும் விழிசெவிதந்
திருக்கும் பிரமன் பொருக்கெனவே
விச்சை விரியும் உருக்கரப்ப,
விழிநீர் பெருக்கி விம்மினான். 32

199. தெரியா விடைநீ மறைந்ததாச்
சிந்தித் திரங்கேன்; சிந்தையினுள்
பிரியா விடைபெற் றமைந்தஉண்மை
பெரிதும் உணர்ந்தேன்; எவருள்ளும்
அரியாய் நின்றே, அறியார்பால்
அரியாய் எனவும் நின்றருளும்
கரியாய்! நீசெய் மாயைதனைக்
காண வல்லார் யாவரே? 33

*197. உவந்து அன்பால். பந்தப் பிணிகள் – கட்டுப்படுத்தும் நோய்கள், ஆன்மாவைக் கட்டுகின்ற தீவினைகள் என்பது சிறப்புப் பொருள். முற்றும் என முற்றும்மை விரிக்க. அந்தப்பட – முடிவாக, அழகாக எனினும் ஆம். ஓதுபு – சொல்லி. அந்தர்த்தியானம் – மறைதல்.*

*198. பரிதி – சூரியன். பச்சைநிறச் சூரியன் இல்பொருள்உவமை. செச்சை – செஞ்சாந்துக் குழம்பின் நிறம். விழிசெவி நிரனிறை. விச்சை – ஞானம்.*

*199. தெரியா இடை – தெரியாத ஏதோ ஓர்இடம். அரியாய் – 1. (அந்தர்யாமியான) திருமாலாய், 2. உணர்விற்கு எட்டாதவனாய். கரியாய் – கரிய. நிறத்தவரே, 2. அனைத்திற்கும் சாட்சி ஆகியவரே.*

200. சங்கை யுடையான் கரதலத்தில்;
சகல லோக பாவனியாம்
கங்கை யுடையான் தாள் மலரில்
கனிவாய் ஓதும் வரம்பெற்ற
பங்கை யுடைய தீர்த்தத்தில்
படிந்து, பன்னாள் பகவானை
அங்கை கொடுபூ சனைபுரிந்திட்டு
அரிதில் அயன்தன் நகர்தோய்ந்தான். 34

(எழுசீர் விருத்தம்)

201. சண்பக வனத்தி னிடைபொலி தாமோ-
தரப்பெயர்ச் சாமியாய், முதலாம்
பண்பமை கிருத யுகத்தினில் பிரமன்
பரிந்துபோற் றியதிறம் பகர்ந்தேன்;
விண்பதி யாகும் இந்திரன் குருவாம்
வியாழன்சேய் கச்சன்வீந் ததனால்
புண்படு பொன்னி னுடன்கனிந் தியற்றும்
புனிதமான் மியம்புகல் வேனே. 35

*பிரமதேவன் பூசித்த படலம் முற்றிற்று.*

*200. சங்கை – பாஞ்சசன்னியம் ஆகிய சங்கினை. பாவனி – புனிதப் படுத்துபவள். பங்கை – பாங்கினை, குறுக்கல்விகாரம்.*

*201. சண்பகவனத்தினிடை – காரைமடையில். திறம் – சிறப்பு. விண்பதியாகும் – மேலுலகின் அரசனாகிய. கச்சன் – பிரகஸ்பதியின் மைந்தன். வீந்ததனால் – இறந்ததால். புண்படு – வருந்தும். பொன்னினுடன் – வியாழனோடு.*

## 5. இந்திரன் பூசித்த படலம்

(கொச்சகக் கலிப்பா)

202 தேனமுத அருவிஎனத் திகழ்மகதி யாழ்மிழற்றும்
கானஇசை நாரதப்பேர்க் கவின்முனிவன் ஓர்தினத்தில்,
வானவர்கோன் தனைக்காண மருவியபோ தினில்,துறக்கத்
தானம்உறும் தேவர்எல்லாம் சயவைபவம் மிகப்பொலிந்தார். 1

203 வரம்பில்இன்பத் தொடுவெற்றி மாலைபுனை இந்திரன்றான்
கரம்பயில்வீ ணைத்தவனைக் கண்டவுடன் வணங்கி,உளத்து
உரம்பயில்எக் களிப்பொடுதன் னுடையபராக் கிரமத்தைத்
தரம்படப்பல் கால்வியந்து, தான்மிகக்கொண் டாடினனே. 2

204 அடங்காத பெருமகிழ்ச்சி ஆவதிது தான்முடிவில்
விடங்காலும் துன்பமிக விளைத்திடும்என் றுணராத,
கடங்காலும் கரியோன்சீர் கண்டருள்நா ரதமுனிவன்
தொடங்காத ரத்தின்,முடி துளக்கி,விடை கொண்டகன்றான். 3

205. தோல்வியுற்றுத் தளர்ந்து,சிரம் தூங்கசுரன் விருடபர்வா
மேல்விளக்கம் ஒன்றறியான் வெள்ளிஎனும் தம்குரவன்
பால்விளம்ப, மிருதசஞ்சீ வினிஎன்னப் பகர்மறையி-
னால்விளிந்த அசுரர்எல்லாம் ஆவியுறப் புரிந்தனனால் 4

206. இறந்தெழுந்த அசுரர்எல்லாம் ஈர்த்தபெரு மானமுடன்
மறந்தழைத்த உளத்தினராய் வானகம்புக் கிமையவர்கள்
பறந்தலையும் படிவெருட்டிப் பறந்தலையாக் குபு,தலைமை
சிறந்தவிர்இந் திரன்கதிர்சால் சென்னிமணி முடிபறித்தார். 5

*202. மகதி – நாரதரின் வீணையின்பெயர். துறக்கத் தானம் – சுவர்க்கம் ஆகிய இடம். சயவைபவம் – வெற்றி விழா.*

*203. வரம்பு இல் – எல்லையற்ற. பராக்கிரமம் – வீரம்.*

*204. கடம்காலும் – மதம்பொழிகின்ற. கரியோன் – ஐராவதத்தை உடைய இந்திரன். தொடங்கு ஆதரத்தின் – அன்போடு.*

*205. ஒன்றறியான் – ஒன்றும் அறியாதவனாகி, வினையெச்சம். வெள்ளி – சுக்கிரன். குரவன்பால் – குருவினிடம். விளிந்த – இறந்த.*

*206. மறம் – வீரம். வானகம் புக்கு. பறந்து அலையும்படி. பறந்தலை ஆக்குபு – சுடுகாடாக ஆக்கி. கதிர்சால் – ஒளிபொருந்திய.*

*(எழுசீர் விருத்தம்)*

207 இந்திரன் மௌலி இழந்துதுன் புழந்தன்பு
இசைகுரு வின்புடை மேவிச்
சிந்திய கண்ணீ ருடன்பணிந் தேத்திச்
செய்வகை உசாவிடத் தனதன்பு
உந்திய மகவாம் கச்சனைப் புவிமீது
உறுவித்துச் சுக்கிரன் தன்பால்
வந்திடும் மகிமை மிருதசஞ்சீவி
மந்திரம் கொளும்முடி வடைந்தார். 6

208 கச்சனை உடன்கூ வினர்;அணிப் பூலோ-
கத்தியல் மாயையி னுடனே
நச்சணி விழியார் மோகவா ரிதியில்
நனைதரா ஆக்கினை இட்டே,
எச்சரித் தனுப்பச் சுக்கிரன் மகளாய்
இசைதேவ யானிமேல் மோகம்
மிச்சமார் மதனா சுரன்மிசை அவள்கல்
வீச,இன் னோன்மெய்பட் டயர்ந்தான்

209 உடன்அவள் கச்சன் றனைமடி மீதிட்டு,
உற்றசைத் தியோபசா ரத்தால்
இடர்அறப் புரிந்து, தன்மனக் காதல்
இசைக்க,உள் ளிசைவுறா தொருதான்
படர்தரு செயலும், இறைவனும் குருவும்
பகர்ந்துள ஆணையும் இசைத்துள்
மிடலுடன் அவளை நீத்துயர் புகர்முன்
மேவினன்; உண்மைமுற் றுரைத்தான். 8

*207. மௌலி – கிரீடம். துன்பு உழந்து அன்பு. குருவின்புடை – வியாழனிடம். உசாவிட – கேட்க. தனது அன்பு உந்திய.*

*208. நச்சு அணி விழியார் – விஷத்தின் தன்மையையும் அழகையும் பெற்ற விழிகளை உடைய மகளிர். மோகவாரிதி – காதற்கடல். ஆக்கினை – உத்தரவு. தேவயானி – சுக்கிராசாரியாரின் மகள். மிச்சம் ஆர் – அதிகமாகக் கொண்ட. இன்னோன் – இந்தக் கச்சன். தேவயானி மதனாசுரன்மீது கல் எறிய அதுபட்டுக் கச்சன் மயக்கமுற்றான்.*

*209. சைத்திய உபசாரம் – வெப்பம் உற்றவர்க்குச் செய்யும் குளிர்ச்சியான சிகிச்சை, பொதுவாக முதலுதவி. இசைக்க – (தேவயானி) கூற. இசைத்து – (கச்சன்) சொல்லி. உள் மிடலுடன் – மனோதைரியத்துடன். புகர் – சுக்கிரன். கச்சன் புகர்முன் மேவி உண்மை முற்றும் உரைத்தான்.*

210. வினவுசுக் கிரன்தான் மறுத்தனன்; கச்சன்
வித்தியா தானம்ஈந் திடற்கு
மனம்இசை யாமை மேலவர் தமக்கு
மரபல என,மக ளுடனே
முனம்அடைந் திரப்ப, இசைந்ததா தியவாம்
முறையெலாம் விருடபர் வாப்பேர்க்
கனம்மிகும் அசுர இறைதெரிந் துள்ளம்
கனன்றெழு சினத்தினன் ஆனான். 9

211. கச்சனைக் கொன்று சாம்பல்செய் ததனைக்
கள்ளுடன் குருஉணக் கொடுத்தான்;
அச்சம யத்தில் கவியினைக் கொன்றாங்கு
அவன்வெளிப் பட்டவன் உயிரை
மெச்சஈந் தனன்;விண் புகத்துவக் குங்கால்
வெள்ளியின் சுதைஉளக் காதல்
உச்சமுற் றெனைநீத் திடின்மறை பயன்அற்று
ஒழிகஎன் றிட்டனள் சாபம். 10

212 பட்டபா டனைத்தும் வறிதொழிந் துண்மைப்
பயன்அறி கிலன்தளர் கச்சன்
இட்டஆ க்கினைகாத் தனுப்பினர் தம்பால்
எய்தினன்; நிகழ்ச்சிமுற் றுரைப்ப
மட்டறாத் துயர்எய் தினர்;பர சிவன்பால்
வகுத்திட, அரன்,"உளத் துன்னி
வட்டநே மியன்தாள் உன்னுபு காரை
வனம்புக்கு நோற்குதிர்" என்றான். 11

*210. வித்தியாதானம் – கல்விக்கொடை. மகள் – தேவயானி. கனம் – பெருமை. அசுர இறை – அரக்கர் கோமான்.*

*211. குரு – அசுர குரு ஆகிய சுக்கிரன். கவி – சுக்கிரன். ஆங்கு அசை. அவன் – கச்சன், 2. சுக்கிரன். வெள்ளியின் சுதை – சுக்கிரனின் மகளாகிய தேவயானி. உச்சமுற்று – மிகுதியாகி. மறை – மந்திரம், இங்கு மிருத சஞ்சீவினி.*

*212. அறிகிலன் – தெரியாதவனாக, வினையெச்சம். இட்ட ஆக்கினை – (கச்சனை நில உலகத்திற்கு அனுப்பியபோது தேவர்கள்) போட்ட உத்தரவு. காத்து – நிறைவேற்றி. மட்டு அற – எல்லையற்ற. வகுத்திட – சொல்ல. வட்ட நேமியன் – சக்கரத்தை ஏந்திய திருமால். உன்னுபு – தியானித்து. நோற்குதிர் – தவம் புரிவீர்களாக.*

213. சிவபெரு மான்றன் கட்டளை தன்னைச்
சிரமிசை கொண்டு,வா சவனும்
உவமைதீர் குருவும் விண்ணினும் கமழ்சீர்
உற்றவிர் கொங்குநா டதனில்
நவநவ மகிமை பெற்றுள வனத்தின்
ஞானஆ னந்தஅற் புதம்ஆர்
திவள்ஒளி மூர்த்தி யுடன்அமை பிரம
தீர்த்தமும் கண்டுவப் புற்றார். 12

214. நித்திய விதிமுற் றொழுங்குற முடித்து,
நெஞ்சகம் கனிந்தபி டேகம்
பத்தியிற் புரிந்து, பரிமள மலர்சால்
படலையின் மிக்கலங் கரித்துப்
புத்தியற் கனிகாய் நிவேதனம் இயற்றிப்
புனத்துழாய் அர்ச்சனை புரிந்து,
துத்தியம் இசைத்துள் நெருக்குப சாரத்
துறைநிறை முறைஎலாம் முடித்தே, 13

215. அன்னதன் பின்,பஞ் சாக்கினி மத்தி,
அமைந்துறு புலம்கர ணங்கள்
பின்னம்அற் றிசைதன் நினைவிடை ஒடுக்கிப்
பிறங்குதற் போதமா னதனைப்
பன்னக சயனன் திருவடி மலரின்-
பால்அமைத் ததனில்ஊற் றெழுந்த
மன்னருள் அமுதம் மாந்திஉட் களித்து
மாதவம் பெருக்கினர் மாதோ. 14

*213. வாசவன் – இந்திரன். குரு – வியாழன். நவநவ மகிமை – புதுமையான பெருமை. ஒவ்வொரு யுகத்திலும் புதியபுதிய பெருமை.*

*214. நித்திய விதி – அன்றாடக் கடமைகள். பரிமள – மணம்மிக்க. படலை – பூமாலை. புத்துஇயல் – புதிய. துத்தியம் – தோத்திரம். உபசாரத் துறை – பதினாறு வகையான வழிபாட்டு நெறிமுறைகள்.*

*215. புலம் – ஐம்புலன்கள். கரணங்கள் – அந்தக் கரணங்கள்.பின்னம் அற்று – முழுமையாக. தற்போதம் – யான் செயல்படுகிறேன் என்னும் நினைவு. ஆனது – பகுதிப்பொருள்விகுதி. பன்னக சயனன் – பாம்பில் துயில்கின்ற திருமால். மன் அருள் – நிலையான திருவருள். மாந்தி – உண்டு.*

216. ஆண்டுபற் பலஈண் டகன்றிட, அவர்தம்
அருந்தவம் கண்டுவந் தரிதான்
தூண்டுசெங் கதிர்ஆ யிரம்திரண் டனைய
சோதிநன் மேனிகொண் டவிர்கால்,
ஈண்டுகண் கொண்டு நோக்குரம் இலராய்
இளைத்திட, இரங்கிஉட் குளிர்ந்து,
தீண்டுவா ரிசம்போல் பொங்கருட் பெருக்கம்
சிறந்தவிர் தரும்திரு விழியும், 15

217. பச்சைமா ணிக்க நிறம்பொலி மெய்யும்,
பத்தரை மாற்றுப்பொன் உடையும்,
இச்சைமுற் றவும்தன் பால்இசைந் திடவே
ஈர்த்திடும் அவயவ இனமும்,
செச்சைவாய் மலரும், மகரகுண் டலங்கள்
திகழ்கபோ லம்பொலி முகமும்,
விச்சையார் சுதரி சனம்முதற் கொண்டு
விளங்கருட் சேவைகண் டுவந்தே, 16

218. பற்பல விதமாத் துதித்துநிற் பவரைப்
பார்த்தருள் புரிகின்றான், தானே
நற்பயன் அனைத்தும் நல்குவோன் எனினும்
நவிற்றிடு கன்மங்கள் அனைத்தும்
முற்படு வினைப்போ கத்தினைப் போத
முனைப்பிசை வழிபெற ஊட்டி,
உற்பவம் கசப்பித் துறும்உல கப்பித்து
உவர்த்துணர் வளித்திடல் எண்ணி, 17

*216. ஈண்டு – இவ்வாறு. கண்டு உவந்து அரிதான். அவிர்கால் – விளங்கிய போது. நோக்கு உரம் – நேரில் பார்க்கும்திறம். இதுமுதல் 18 வரை குளகம்.*

*217. அவயவ இனம் – உறுப்புகள். செச்சை – செம்பஞ்சுக் குழம்பின் நிறத்தைப் பெற்ற. கபோலம் – கன்னம். கண்டு உவந்து. ஈற்றேகாரம் அசை.*

*218. புரிகின்றான் – புரிபவராகிய திருமால், வினையாலணையும் பெயர். கன்மங்கள் – வினைகள். வினைப்போகம் – செயலின்பயன். போத – மிகுதியான. உற்பவம் கசப்பித்து – பிறப்பின்மீது வெறுப்பு ஏற்படுத்தி. உலகப்பித்து உவர்த்து – உலக இன்பங்களில் சலிப்பை ஏற்படுத்தி. உணர்வு – மெய்யறிவு.*

219. அந்தரி யாமி யாய்அவர் தம்உள்
அமைந்திசை லீலைசெய் திடும்தன்
சிந்தையின் குறிப்பை அவர்கொளப் புகல்வான்—
"சினம்மிகும் அசுரர்கள் தம்மைப்
பந்தமார் உறவு கொண்டலா தும்முள்
பற்றுகா ரியசித்தி ஆகாது.
எந்தவாற் றேனும் அவர்உளப் பகைமாற்
றிடுதலே நலம்"என இசைத்தான். 18

220. பின்னரும் புகல்வான் - "அமிர்தம்உண் டாகும்
பிரயத்த னத்தைமுன் புரிமின்;
அன்னதுண் பவர்கள் மரணம்எய் துநர்க-
ளாயினும் நித்தியம் பெறுவர்;
இன்னதோர் செயலால் நீயிர்நன் றடைவீர்;
இன்னலே அவர்அடைந் திடுவர்;"
என்னஓ தினன்;அன் னவர்விழி காணாது,
இயல்அருள் உருவினை மறைத்தான். 19

221. ஆங்கது கண்டுள் உருகினர்; துதித்தார்;
அரிஅருள் வாக்கியப் படியே
தீங்கமை இகலாய் உறும்அசு ரர்கள்பாற்
சென்றுதற் கச்சுதன் உரைத்த
பாங்கறி வித்தீண் டினிஅமிழ் துதிக்கப்
பண்ணலே கடன்எனத் துணிந்து,
தாங்கள்மந் தரவெற் பெடுத்தனர்; இடையில்
தளர்ந்துவீழ்ந் தரிபதம் துதித்தார். 20

*219. அந்தர்யாமி – ஆன்மாவிற்குள் அமைந்துள்ள இறைநிலை. அவர்தம் உள்–தேவர்களின் மனத்தில். பந்தம் ஆர் – கூட்டுடைய. உம்முள் – உங்களுக்குள். பற்று – நினைக்கின்ற.*

*220. பிரயத்தனத்தை – முயற்சியை. நித்தியம் – சாகாநிலை. அவர் என்றது அசுரரை*

*221. இகலாய் – பகைவராக. தற்கு – தமக்கு. அச்சுதன்– திருமால். பாங்கு அறிவித்து ஈண்டு. இனி அமிழ்து உதிக்க. வீழ்ந்து. அரி பதம் – திருமாலின் திருவடிகளை.*

222. உடன்அரி கருடன் மீதில்உற் றவர்கட்கு
உரம்அளித் தொப்பில்மந் தரத்தை
மிடல்அமை கருடன் மேல்அமைத் திடப்பால்
வேலைமத் தியில்உற விடுத்தான்;
"வடம்என அமையில் அமுதம்உடன் றனக்கும்
வழங்குதும்" எனச்சுரா சுரர்கள்
நடலைதீர் வாசு கிக்குரைத் தவனை
நற்கயி றாம்எனப் புரிந்தார். 21

223. கடைதருங் காலை நீருள்மூழ் கியது
கண்டரி விக்கின ராச-
னுடையதோர் செயல்என் றவற்றுதித் திட,விண்டு
ஒப்பில்சீர்க் கூர்மமாம் உருக்கொண்டு,
அடைதரு பத்தி லக்கயோ சனையில்
அளவுள தன்னது முதுகி-
னிடைஒரு கொதுகொத் தேந்தினன்; யாரும்
எய்ப்புறா தருள்புரிந் திருந்தான். 22

224. "முன்புறும் யாமே முன்புறம் பிடிப்பேம்;
மூதுணர் வின்றிய சுரர்கள்
பின்புறம் பிடிக்க வேண்டும்"என் றுரைத்த
பித்தராம் அசுரர்,வா சுகியின்
துன்புறு சுவாசாக் கினியினால் மெலிந்து
சோகம்உற் றனர்;இமை யோர்கள்
இன்புடன் பகவன் கருணையால் இருந்தார்;
என்னினும் அமுதெழுந் திலதால். 23

*222. உற்று. அவர்கட்கு – தேவர்களுக்கு. உரம் – வலிமை. மிடல் – வலிமை. பால் வேலை – பாற்கடல். வடம் – கயிறு. சுராசுரர்கள் – தேவரும் அசுரர்களும், வடமொழி தீர்க்கசந்தி. நடலை – குற்றம். உரைத்து அவனை. நல்கயிறு ஆம்என.*

*223. கடைதருங்காலை – கடையும்போது. கண்டு. விக்கினராசனுடைய – கணபதியின். அவரைத் துதித்திட. விண்டு – திருமால். கூர்மம் – ஆமை. பத்து இலக்க யோசனை. முதுகினிடை – முதுகுக்கு நடுவில். கொதுகுஒத்து – கொசுபோல. எய்ப்புறாது – மெலியாமல்.*

*224. துன்புறு – வருத்தப்படுத்தும் எனப் பிறவினையில் ஆட்சி. சுவாசாக்கினி – மூச்சுத்தீ, சுவாச அக்கினி, தீர்க்கசந்தி. அமுது எழுந்திலது, ஆல் அசை.*

225. அதனைஓர்ந் தரிதன் கரம்கொடு கடைய
ஆலகா லம்பிறந் ததனால்
விதனமுற் றிமையோர் கயிலையங் கிரிப்பால்
மேவினர் அரனிடம் விளம்ப;
மதனைநீற் றியகண் ணுடையவன் அங்கை
மாட்டமைத் துண்ணக்கண் டத்தில்
திதமுறக் கறுமை காட்டிய தயலிற்
சிந்திய தராமுதற் புசித்த. 24

226 பரசிவன் ஆல காலத்தை நுகரப்
பார்த்துவப் புடன்சுரா சுரரும்
சிரமம்அற் றனர்;முன் போற்கடல் கடையத்
தேனுமுன் வந்ததாங் கதனைப்
பிரமநிட் டைஉ ளார் கொண்டனர்; உச்சைச்-
சிரவசு பின்உதித் தது;மேல்
தரமலி ஐரா வதம்,மணப் பாரி-
சாதம்,அப் சரசுகள் உதித்தார். 25

227 ஆங்கதன் பின்எண் திசையினும் ஒளிமிக்கு
அவிர்ந்தெலாம் பரிமள மாக்கும்
தேங்கமழ் மேனி கொண்டுளம் கவரும்
திறத்தினால் திருவெனும் திருப்பேர்
ஓங்கருள் லக்ஷ்மி உற்பவித் தனைவோர்
உளக்கம லாதனத் தமைந்தாள்—
நீங்கரும் யோகம் உயிரகத் தமைந்த
நிறைவினை நிலைத்தவர் உணர. 26

*225. ஓர்ந்து அரி. பிறந்தது அதனால். விதனமுற்று – கவலைப்பட்டு. மேவினர்— மேவி, வினையெச்சம். மதனை – மன்மதனை. கை மாட்டு – கரத்தில் அமைத்து உண்ண. கண்டத்தில் – கழுத்தில்.திதம் உற – திரமாக நிலைக்க. காட்டியது. அயலில் – பக்கத்தில். அரா முதல் – பாம்பு முதலியன.*

*226. தேனு – காமதேனு. வந்தது ஆங்கு அதனை. உச்சைச்சிரவசு – சிறந்த தெய்வலோகக் குதிரை. ஐராவதம் – வெள்ளை யானை. மண – வாசனை மிக்க. அப்சரசுகள் – தேவமங்கையர்.*

*227. பரிமளம் – நறுமணம். உளம் கவரும் திறத்தினால் திரு எனும் பேர் கொண்டு என்றது திரு என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம் என்னும் பேராசிரியரை(திருக்கோவை. 1 உரை) நினைந்து. உற்பவித்து – தோன்றி. உளக்கமலாதனம் – மனமாகிய தாமரைத்தவிசு. கமலாதனம் தீர்க்க சந்தி. நிலைத்தவர் உணர அமைந்தாள் என்பது முடிபு.*

228. திருவினை விரும்பார் யார்உளர்? அந்தத்
திருஉளம் விரும்பிடத் தக்க
பெருமையை உடையார் யார்உளர் அந்தப்
பிரபுவாம் முகுந்தனை அல்லால்?
மருவலர் மேலு மங்கைதன் கையில்
வயங்கிடும் கருநெய்தல் மாலை
சருவரும் தோயும் அவையுள்ஆம் புருடோத்-
தமன்திருத் தோளில்இட் டனளால். 27

229. வட்சமாம் தலத்தை நோக்கியே இலச்சை
மந்தகா சத்துடன் நிற்கும்
அட்சய ஐசு வரியவித் தாகும்
அகிலதா யகத்தினை மால்உள்
பட்சம்உற் றுயர்மார் பிடத்தெழுந் தருளப்
பண்ணினான்; பார்த்தனை வோரும்,
கட்சமைந் திடும்பே றெய்தினோம் என்னக்
கடிமலர் தூய்த்துதித் துவந்தார். 28

230. அனந்தரம் கன்னி யாம்சுரா தேவி -
யானவா ருணிஅடைந் திட்டாள்;
கனம்பெறும் அவளை அரிதன்ஆக் கினையால்
கலகவல் அசுரர்பெற் றிட்டார்;
பினங்கதில் கமல விழியுடன் பச்சை
பிறங்குமெய்க் காமர்பொங் கிடவே,
மனம்கவர் அமுத கலசம்ஏந் துபுதன்-
வந்திரி வந்தனன் மாதோ. 29

*228. மரு – மணம்மிக்க. சருவரும் – (தேவர் அரக்கர் ஆகிய) அனைவரும். ஆம் – இருந்தவராகிய. புருடோத்தமன் – திருமால். ஆல் ஈற்றசை.*

*229. வட்சம் – மார்பு. இலச்சை – நாணம், மந்தகாசம் – புன்முறுவல். அட்சய – குறைவற்ற. ஐசுவரிய வித்து – செல்வங்களுக்கு மூலகாரணம். அகில தாயகத்தினை – உலகங்கள் எல்லாவற்றையும் தந்த இலக்குமியை. பட்சம் – விருப்பம். பார்த்து கண் சமைந்திடும் பேறு. துதித்து உவந்தார்.*

*230. அனந்தரம் – பிறகு. சுராதேவியான – கள்ளிற்கு அதிதேவதை ஆகிய. ஆக்கினை – உத்தரவு. பின் அங்கு அதில். அது என்றது பாற்கடலை. மெய்க்காமர் – உடலழகு. ஏந்துபு – தாங்கியவராக. மாதோ அசை.*

231\. சருவமங் களம்சால் புருடனை அவன்கை
தாங்கிய அமுதகும் பத்தைத்
தருவமை இமையோர் கொள்ளும்முன், அசுரர்
தாம்வலிந் தபகரித் தவராய்க்
கருவம்மிக் கமையக் கண்டிமை யோர்உட்
கலங்கி,அச் சுதற்சரண் அடைய,
"வெருவலிர்" எனத்தா னவர்முன்,மோ கினியாய்
மிக்ககா மாதுரம் விளைத்தான். 30

232\. வரம்பிலாக் காமர் கொண்டமோ கினிதன்
வதனம்ஆம் மலர்இசை மதுஆர்
உரம்பயில் வண்டாம் கண்இணை அவர்தம்
உளத்தினைக் கொள்ளைகொண் டிடலால்,
வரம்பயில் அவளைத் துதித்தமு தத்தை
வழங்கிட, இமையவர் உள்ளத்
திரம்பெற அளித்துக் கள்ளம்ஆர் இராகு
சென்னியை நேமியால் சிதைத்தான். 31

233\. இவ்வகை யாகத் தன்னடிக் கன்பார்
இமையவர் யாவரும் மனத்தில்
செவ்வகை அமையும் படிஅறக் கருணை
செய்து,மூர்க் கத்திறம் திறம்பாத்
தெவ்வகை அசுரர் பக்குவம் பொருந்தச்
செய்மறக் கருணையும் உடைய
தெய்வநா யகன்அங் கவர்கள்முன் அந்தர்த்-
தியானம்ஆ யினன்மறைந் திட்டான். 32

*231. சருவமங்களம் சால் – அனைத்து நலங்களும் பொருந்திய. தரு அமை – கற்பக நாட்டில் உள்ள. வலிந்து. கண்டு. வெருவலிர் – அஞ்சாதீர்கள். தானவர் – அசுரர். காமாதுரம் – காமமாகிய இச்சை, நோய் எனினும் ஆம்.*

*232. வரம்பு–எல்லை. வதனம்–முகம். அவளுடைய முகமாகிய மலரில் உள்ள வண்டாக அவள் கண் உருவகிக்கப்படுகிறது. அவர்தம் – அசுரருடைய. வரம்பயில் – மேன்மை மிக்க. கள்ளம் ஆர் – (தேவர்களுக்கு இடையிலே தன் அசுரத்தன்மையை மறைத்து இருந்த) வஞ்சம் பொருந்திய. நேமி – சக்கரம்.*

*233. மூர்க்கத்திறம் – அறியாமை மிக்க பிடிவாதம். தெவ்வகை – பகைவர்களாகிய. அந்தர்த்தியானம் ஆயினன் – மறைந்தவனாகி, வினையெச்சம்.*

234. ஆர்அமு தயின்ற தேவரை நோக்கி,
அதுபெறா அசுரர்பொ றாது,
போர்அள வறவே புரிந்தசு ரர்கள்தாம்
பொன்றிடு கால்அவர் எதிரே
நாரதர் தோன்றி, மிகுசமா தானம்
நவின்றிடச் செருஒழிந் தனர்;பின்
வாரம்மிக் கமைசுக் கிரன்இறந் தவரை
மந்திரத் துயிர்பெறப் புரிந்தான். 33

235. பின்னர்இந் திரன்தான் செயம்பொலி உவகைப்
பெருக்கொடு, தேவர்க ளுடனே,
முன்னமை சண்ப கப்பெயர்க் காவின்
முதல்வனைப் பற்பல வகையால்
நன்னலப் பூசை யாகம்ஆ தியவும்
நவிற்றி,ஆ லயப்பணி இயற்றித்
தன்னகத் துவந்து தவம்செய்கால், அரிநேர்
தன்தரி சனம்பெறப் புரிந்தான். 34

236. காண்டலும் அன்பு பெருகிட, விழிநீர்
கான்றிட, மெய்ம்மயிர் பொடிப்ப
மூண்டமை புளகம் மூடிட, வசம்போய்
முதிர்பர வசம்அடைந் தவனாய்,
"ஆண்டநா யகனே! கருணைவா ரிதியே!
அதில்திரு உருக்கொள்பெம் மானே!
நீண்டவன் என்ன மறைமுடி வேத்த
நின்றநிர் மலவெளி யானே! 35

*234. பொறாது – சகிக்காமல். புரிந்து அசுரர்கள். பொன்றிடுகால் – இறக்கும் போது. செரு – போர். வாரம் – (அசுரர்களின் மாட்டு) அன்பு. மிக்கு அமை.*

*235. நவிற்றி – செய்து. தன் அகத்து உவந்து. அரி தரிசனம் பெறப் புரிந்தான்.*

*236. கான்றிட – வெளியாக்க. மூண்டு அமை. வாரிதி – கடல். மறைமுடிவு ஏத்த. நிர்மல – குற்றமற்ற. இது முதல் 5 கவிகள் குளகம்.*

237. “நிருபன்என் றிடில்ஆம் கெருவம்என் றறிஞர்
நிகழ்த்துசொற் கோர்இலக் கியனாய்த்
தருஅமை தரும்இந் திரத்திரு அதனால்
தருக்கியும் செருக்கியும் மோகம்
மருவியே, போக பாக்கியத் தமிழ்,துன்
மதியினால் உனைமறந் தயர்கால்,
செருமலி அசுர ரால்துயர் புரிந்தென்
திருக்கறுத் துன்னதன் பருள்வாய். 36

238 “கச்சனால் அடியேம் கருதிய வண்ணம்
காவலார் மிருதசஞ் சீவி-
னிச்சய மந்தி ரம்பெறா வாறு
நீக்கிய தெனதுபாக் கியம்ஆர்
உச்சநற் பயன்என் றின்றுன தருள்உள்
உணர்த்தலால் ஐயம்அற் றறிந்தேன்;
மிச்சம்ஆர் கருணை வள்ளல்நீ புரியும்
வியன்விளை யாடல்மாண் பென்னே! 37

239 “மணப்புது மலர்வாய்ந் துள,தரு நிழலின்
மன்னியற் கற்புடன் காமர்க்
குணப்பொலி வமையும் புலோமசை விழைவுட்
கொண்டுதாள் வருடிட, நான்மை
வணத்திலோத் தமைஆ தியர்களின் ஆடல்
பாடல்வை பவங்கள்ஆ தியவாம்
கணத்திரள் சுகத்தைத் திரட்டினும் உன்தாள்
கருதும்ஓர் கணச்சுகம் போன்மோ? 38

*237. நிருபன் – அரசன். இலக்கியன் – எடுத்துக்காட்டு ஆனவன். தரு – கற்பகம். பாக்கியத்து அமிழ். துன்மதி – தீய சிந்தை. அயர்கால் – சோர்வுறும்போது. செருமலி – போர்க்குணம் மிக்க. என். திருக்கு அறுத்து – குற்றத்தைப் போக்கி. உன்னது அன்பு அருள்வாய்.*

*238. காவல் ஆர் – மிகவும் போற்றிப் பாதுகாக்கப்பெறுகின்ற. மிருதசஞ்சீவினி. சய மந்திரம் – வெற்றியைத் தரும் மறை. உச்ச – உயர்ந்த. என்று இன்று உனது அருள். மிச்சம் – மிகுதி.*

*239. தரு – மரம், கற்பகம். புலோமசை – இந்திராணி. விழைவு உட்கொண்டு – விருப்பத்துடன். நான்மைவண – நால்வர் ஆகிய. ஆதியர் என்றது அரம்பை. மேனகை, ஊர்வசியரை. வைபவங்கள்– பெருவளங்கள். கண திரள் சுகத்தை – கூட்டத்தால் கூடுகின்ற இன்பத்தை, திரள்சுகம் – வினைத்தொகை. கணச் சுகம் – ஒரு விநாடி இன்பம். போன்மோ – நிகர்க்குமோ. நிகர் ஆகாது என்றபடி.*

240. நன்றொரு வாநின் திருவருட் கன்றி
நவிலும்எவ் வுலகினில் எவர்க்கும்
ஒன்றொரு செயலும் இன்றெனை, அதுநின்று
உள்ளவா றுணர்த்த,நன் கறிந்தேன்;
புன்றொழிற் கொடியேன் மாயைகன் மத்தில்
புக்குனை மறக்கினும், தயவால்
நன்றொரு வாக்கல் உன்பர மேஆம்;
நான்உன தபயம்ஆ னேனே" 39

241. எனப்பல வாறு துதிக்கும்இந் திரனுக்கு
இரங்கி,அச் சுதன்இசைத் திடுவான்-
"கனப்பரி உடைய இந்திர! உனது
காமர்மெய்த் தவச்சிறப் புணர்ந்துள்
இனப்படு களிப்பெய் தினம்;கருத் தாவல்
இசைத்திடில் ஈகுதும்" எனலும்,
வனப்பரி மளத்தாள் மீதுறப் பணிந்து
வாசவன் வேண்டிடு கின்றான். 40

242. "சண்பக வனம்ஈ தென்னது பொருட்டால்
சமிவனம் ஆகவும், கருணைக்
கண்பதி தருநீ சாரங்க பாணிக்
கடவுளாய், மந்தர கிரி,யாம்
புண்படக் கடலுண் மூழ்குகால், காத்த
புனிதம்ஆர் கூர்மமெய் பெற்றிம்
மண்பதி நரர்க்கும் காட்சிஈந் தென்றும்
வாழவும் வேண்டுவன்; அன்றி, 41

*240. நன்று ஒருவா – நலத்தை விட்டு நீங்காத. ஒன்று – பொருந்துகின்ற. இன்று – இல்லை. அது என்றது திருவருளை. புன்தொழில் இழிசெயல்களை உடைய. புக்கு – புகுந்து. நன்று ஒறுவு ஆக்கல். – நல்லபடியாக வருத்தத்தை அளித்தல், மறக்கருணை காட்டி ஆளல். ஒருவு ஆக்கல் எனக்கொண்டு (மாயைகன்மத்தை) நீக்கும் செயலைச் செய்தல் எனினும் ஆம் இப்பொருளில் ஒறுவு என நின்றது எதுகை நோக்கிய போலி.*

*241. கனபரி உடைய – மாண்புடைய குதிரையாகிய உச்சைசிரவசுவை உடைய, இனிக் கன பரிவு எனக் கொண்டு பேரன்புடைய எனினுமாம். கருத்து ஆவல் – எண்ணத்தில் உள்ள விருப்பம். இசைத்திடில் – கூறினால். வனப்பரிமள – துளசியின் வாசனை மிக்க. வாசவன்– இந்திரன்.*

*242. சமிவனம் – வன்னி மரக்காடு, கருணைக் கண் – அருளில். பதிதரு – நிலைத்துள்ள. யாம் புண்படக் கிரி மூழ்குகால் காத்த கூர்மம் என இயைக்க. கூர்மம் – ஆமை. இம்மண் பதி – இந்த நில உலகத்தில் உள்ள. இது முதல் மூன்று கவிகள் குளகம்.*

243. "உன்னையான் வந்து தரிசனம் புரிபோது
உற்றதாழ் வோதுவ தோ?நின்
பொன்னைஒத் தவிரும் திருவடி மலரைப்
பூசைசெய் துனைத்தரி சித்த
பின்னை,யான் பெற்ற பெருமைபே சுவதோ?
பின்னைம ணாளனே! இதுபோல்
அன்னைஒத் திங்குன் றனைவழி படுவார்
ஆவல்முற் றளித்திட வேண்டும். 42

244. "மறந்திகழ் கொடியேன் யான்உனை என்றும்
மறந்திடா துன்னதன் பென்னுள்
சிறந்திலங் கிடுதல் வேண்டும்;என் பெயர்சார்
திக்கில்,யான் தொட்டிடு தீர்த்தம்
நிறந்திகழ் தருசக் கிரப்பெயர் கொண்டு
நிலவி,மூழ் குநர்பவக் கடலை
வறந்திடப் புரியும் வடவைபோன் றென்றும்
வயங்கிடும் வண்ணம்வேண் டுவனே" 43

245 என்னவேண் டிடும்இந் திரன்முகம் நோக்கி,
இந்திரை மகிழ்நன்ஓ திடுவான் -
உன்னவா வினில்பற் பலவரங் களையும்
உதவினம்; ஆயினும் ஒன்று
பன்னவேண் டியதுண்டு; யாதெனில் உம்மைப்
பாற்கடல் கடைந்திடும் காலம்
முன்னம்உற் பவித்த விடத்தினை அருந்தி
முற்றிலும் புரந்தருள் வரதன். 44

*243. பின்னை – நப்பின்னை, கண்ணபெருமானின் நாயகியருள் ஒருத்தி*

*244. உன்னது அன்புஎன்னுள். என் பெயர்சார்திக்கு – இந்திரனுக்குரிய கிழக்கு. சக்கிரப்பெயர் கொண்டு – சக்கிரதீர்த்தம் எனத் திருநாமம் பெற்று பவக்கடலை – பிறவியாகிய சமுத்திரத்தை. வறந்திட – வற்றிப் போகுமாறு. வடவை – கடலுக்குள் குதிரை முகத்தோடு உள்ள நெருப்பு*

*245. இந்திரை மகிழ்நன் – திருமகள் கேள்வன். உன் அவாவினில். பன்ன – கூற. முன்னம் – முதலில். உற்பவித்த – தோன்றிய. விடத்தினை அருந்தி உம்மைப் புரந்தருள் என இயையும். இச்செய்யுள் குளகம்.*

246. "ஆனசங் கரன்செய் துள்ளதாம் நன்றி-
யறிதலின் ஞாபக மாயும்,
ஈனமார் மதவா திகள்சம ரசம்உற்று
எனைஅரன் றன்னைஒன் றெனத்தேர்
ஞானம்உற் றிடவும் புரி"எனப் புகல,
நன்றுநன் றெனக்களித் தவனாய்
தேனலர்க் கமலத் தாள்பணிந் திடலும்,
சீதரன் திருவுருக் கரந்தான். 45

247. அரங்கநா தன்வாய் மொழிசிரம் தாங்கும்
அமரர்கோன், தேவதச் சனைக்கூய்,
வரங்கமழ் இலிங்கத் துடன்திருக் கோயில்
வளம்பெறப் புனைதல்செய் தின்பத்
திரங்கவின் றிடும்ஆ கமமுறைப் படிப-
திட்டைசெய் தேத்துபு, தன்செங்
கரம்பயில் பூசை புரிந்து,நஞ் சுண்ட
கடவுள்என் றியற்பெயர் அமைத்தான். 46

248. போதநா யகி,மெய் அன்பர்மேற் கருணை
பொங்குநா யகி,எழு சுரம்தோய்
வேதநா யகிவா மம்பொலி தரவே
விளங்குசீர் நஞ்சுண்டேச் சுரர்தம்
ஆதர சீர்த்தி விரித்திடில் விரிவாம்;
ஆதலின் நூல்முறைக் கடுப்பப்
போதரச் சிறிதே ஓதி,ஈண் டெனது
புந்தியை மீட்குவன் மாதோ. 47

*246. தேன் அலர் கமலம் – தேன் தோன்றுகின்ற தாமரை.*

*247. வரம் கமழ் – மேன்மை மிக்க. செய்து இன்பத்திரம். பதிட்டை – பிரதிட்டை, எழுந்தருளச் செய்தல். ஏத்துபு – போற்றி, வினையெச்சம்.*

*248. போத நாயகி – ஞானத்தின் தலைவி. வேதநாயகி – காரைமடையில் உமாதேவியார் திருப்பெயர். வாமம் – இடது பக்கம். ஆதர சீர்த்தி – அன்பின் பெரும்புகழ். முறைக்கு அடுப்ப, அரங்கநாதர் கோவிலுக்குரிய தலபுராணத்தைக் கூற வேண்டியதாகிய இந்தப் புராணத்தின் மரபிற்கு ஏற்ப. போதர – மிகவும். புந்தியை – அறிவை, உள்ளத்தை எனினும் ஆம்.*

249. நந்தணி ஆழி புனைகரத் தரங்க-
நாதன்ஓ தியமொழிப் படியே,
கொந்தணி மலர்க்கற் பகத்தருக் கீழ்வாழ்
குரிசில்செய் பூசனை உவந்தே,
சந்தணிக் கொங்கை வேதநா யகிஎந்
தாய்இடம் பொலிதா, முடிமேல்
இந்தணி குலவ, இடபவா கனமீது
இன்பம்ஆர் சேவைஈந் திட்டான். 48

250. "பாயிரங் களைக்கொண் டுளமறை யினங்கள்
பற்பல்ஆ யிரமுகத் தளந்து,
வாயிரங் குபுகூ றிடமுடி யாத
வள்ளலே! வேதநா யகிஎந்
தாயிர மிக்கும் தலைவனே! உனது
தரிசன மானஆர் அமுதென்
ஆயிரம் கண்க ளும்பருகி கிடுமாறு
அளித்தனை; ஈதுநின் அருளே! 49

251. அண்டம்ஏ தவற்றுள் அமைஉயிர்க் குலம்ஏ
தவைபொருந் தியசரா சரமாம்
பிண்டம்ஏ தவைகள் பெற்றயில் போகப்
பிராத்திஎன் றுற்றபற் பலவாம்
பண்டம்ஏ திவைஎல் லாம்கனல் மீதில்
பஞ்சுறும் பண்பல வோ?நின்
கண்டமே நீலம் காட்டிஎம் கண்கள்
களிப்புறச் செய்திடா விடத்தே 50

*249. நந்து – சங்கு. அணி – அழகிய, இடைநிலைத் தீபமாகச் சங்கு சக்கரம் இரண்டிற்கும் அடை ஆயிற்று. கரத்து அரங்கநாதன். சந்து அணி – சந்தனம் பூசப்பெற்ற. இந்து அணி – பிறையின் எழில்.*

*250. பாயிரம் – முன்னுரை. அனந்தா வை வேதாஹா என்பது வடமொழி வாக்கியம். வாய் இரங்குபு. இரமிக்கும் – இன்பம் துய்க்கும். நின் அருளே என்பதில் ஏகாரம் பிரிநிலை; என் தகுதி அன்று என்பதன் பொருட்டு.*

*251. ஏது அவற்றுள். பிண்டம் ஏது. அயில் – துய்க்கும். போகப்பிராத்தி – நுகர்ச்சியை அடைதல். பண்டம் – பொருள்கள். காண்க. "ஆலாலம் உண்டிலனேல் அன்று அயன்மால் உள்ளிட்ட மேலாய தேவர் எல்லாம் வீடுவர்காண் சாழலோ," திருவாசகம்:12–8)*

252. “இலங்கும்உன் கண்டம் காணில்,எந் தமக்குள்
இசைஅகங் கரம்அதி தூரம்
விலங்கும்;மேல் ஆகத் துலங்குமே? எந்த
விதத்தெனில் விடத்தைஉம் கண்டத்
தலங்குடி வைத்து வாழ்திறம் நினைந்து,
“சாற்றும்அஃ. தருந்தியும் நம்மை
நலங்கொளக் காப்பான் உளன்”எனும் திறத்தை
நாடுதோ றெம்மகத் தன்றே. 51

253. “அனைத்திடம் கொண்ட கருணையால் உயிர்கள்
அனைத்தினுள் உயிர்எனக் கலந்து,
தினைத்துணைப் பொழுதும் நீங்குறா தாட்டும்
திருவருட் செல்வ!என் போத
முனைப்பினை உனக்கே தந்தனன்; ஏற்றுன்
முதிர்மறை மோலியாம் தாள்வந்-
தனைத்தொழில் இசையப் புரிந்தருள்; வாழி!
சம்பு!சங் கர!மகா தேவ!

254. இன்னவா றனந்தம் துதிபுரிந் திரங்கும்
இந்திரற் கிச்சையாம் வரங்கள்
நன்னலம் பெறஈந் துமையவ ளுடன்தன்
நல்உருக் கரத்தலும், சுரர்கோன்
இன்னலும் இன்பும் கவர்உளத் தினனாய்,
எண்ணிலா முறைபணிந் தேத்தித்
தன்னகர் ஆன அணித்துறக் கத்தைத்
தனிஅர சியற்றிவாழ்ந் திட்டான். 53

*252. இலங்கும் – ஒளிரும். அகங்கரம் – செருக்கு. விலங்கும் – நீங்கும். துலங்குமே – வெளிப்படுமோ, வினா எதிர்மறை. கண்டத்தலம் – கழுத்து ஆகிய இடம். சாற்றும் அஃது – சொல்லப்பெற்ற அந்த நஞ்சு. எம் அகத்து வாழ்திறம் நினைந்து திறத்தை நாடுதோறும் (அகங்கரம் விளங்கும்) எனப் பொருள் முடிபு காண்க. அன்று ஏ அசைகள்.*

*253. அனைத்திடம், அனைத்தினுள் ஆகிய இரண்டு இடங்களிலும் முற்றும்மை விரிக்க. ஆட்டும் (கருணையில்) மூழ்கவைக்கும். போத முனைப்பு – தற்போதம், யான் என்னும் செருக்கு. “கொண்டது என்றன்னைச் சங்கரா” என்னும் மணிவார்த்தையும் (22:10) இது. மறைமோலி ஆம் – வேதத்திற்குக் கிரீடம் ஆகிய.*

*254. இன்னவாறு – இப்படி. அனந்தம் – பற்பல. இந்திரற்கு இச்சை ஆம். ஈந்து உமையவளுடன். கரத்தலும் – மறைதலும். சுரர்கோன் – தேவராஜா. கவர்உளம் – கவரப்பட்ட மனம் என்ற பொருளில் ஆட்சி. ஒரே சமயத்தில் இன்னலாலும் துன்பத்தாலும் கவரப்பெற்ற உள்ளம். தன் நகர். அணி – அழகிய. துறக்கத்தை – சுவர்க்கபுரியை.*

255. ககபதி, காரை வனப்பதி மேவும்
கடவுளர் பதியினைச் சுவர்க்க
மகபதி வழிபா டாற்றி,ஆ னந்த
வாழ்வுபெற் றுயர்திறம் வகுத்தேன்;
சுகபதி யதன்தென் குடதிசை வரையில்
சுரர்குரு வதிந்துநோன் பியற்றிச்
சகபதி யினர்கொண் டாடும்ஐ தீகம்
தந்தவா றினிஇசைப் பேனே. 54

*இந்திரன் பூசித்த படலம் முற்றிற்று.*

*255. ககபதி – கருடவாகனன். சுவர்க்க – வானுலகை ஆளுகின்ற. மகபதி – இந்திரன். பெற்றுஉயர். வகுத்தேன் – கூறினேன். சுகபதி – இனிமையைத் தரும் ஊர். தென்குடதிசை – தென்மேற்கு. வரையில் – மலையில் (இன்று குருடிமலை என வழங்கப்படும் குருஇருடிமலை) சுரர் குரு – வியாழன், வதிந்து – வசித்து. சகபதியினர் – உலக மாந்தர், சகபதி இருபெயரொட்டு. ஐதீகம் – செவிவழிச்செய்தி. (நூற்சான்று கிடைக்கவில்லை என்பதைக் குறிப்பாக உணர்த்துகிறார் போலும்) தந்தவாறு – தெரிவித்தபடி*

# 6 பிரகற்பதி வழிபடு படலம்

*(அறுசீர் விருத்தம்)*

256. பெருமை மிக்கிமை யோர்குரு வாம்பிர
கற்பதிப் பேர்சான்ற
அருமை மிக்கபொன், வெள்ளிஎன் றிசைதரும்
அசுரர்தம் குரவன்பால்
ஒருமை ஆம்மனத் துடன்வழி பட்டுத்தன்
உயர்மகன் கச்சன்தான்
இருமை தன்னினும் பயன்பெறா விதம்உளத்து
எண்ணி உட் கவலுற்றான். 1

257. மந்தி ரத்துணை கொண்டதற் குயிர்எனும்
வான்சகு ணத்தன்பார்
செந்தி ரத்துபா சனைபுரிந் தொப்பிலாச்
சித்திமுத் தியும்தோய்ந்து,
முந்தி ரப்பவர் குறைநிறைத் திடும்தவ
முறையைவிட் டழிசீவ
தந்தி ரச்செயல் வழிப்புகல் மேலவர்
தமக்கடாத் தகைத்தாமால். 2

*256. மிக்க இமையோர், அகரம் தொக்கது. பிரகற்பதி, பொன் – வியாழன். வெள்ளி – சுக்கிரன். குரவன் – ஆசான். தான் – பகுதிப் பொருள் விகுதி. பொன் தன் மகன் கச்சன் வழிபட்டுப் பயன்பெறாவிதம் எண்ணிக் கவலுற்றான் என்பது பொருள் முடிபு.*

*257. கொண்டு அதற்கு உயிர். சகுணத்து – உருவத்திருமேனியின்பால். அன்பு ஆர். செம்திரத்து – செம்மையான உறுதியோடு. உபாசனை – ஆழ்ந்த வழிபாடு. புரிந்து ஒப்பு இலா. முந்து இரப்பவர் – தம்மிடம் வந்து வேண்டுபவர்களின். விட்டு – நீத்து. அழி – அழியும் தன்மையுள்ள. சீவதந்திரம் – சீவனோபாயம், பிழைக்கும் வழி. புகல் – புகுதல், ஈடுபடுதல். மேலவர் தமக்கு அடாத்தகைத்து ஆம். ஆல் – ஈற்றசை.*

*மந்திர உபாசனையில் ஈடுபடுபவர்களுக்கு அதற்குரிய திருவுருவத்தின் தியானம் மிகமிக இன்றியமையாததாகும். இறைவனை உருவம் உள்ளவனாக உபாசித்துத் தாம் சித்திகளையும் வீட்டுப் பேற்றையும் பெறுவதோடு அமைந்துவிடாமல், தம்மை அண்டின அன்பர்களையும் உய்விக்க வேண்டும். இதுவே உண்மையான தவநெறி. அவ்வாறில்லாமல் மந்திரங்களைப் பிழைப்பதற்குரிய தொழிலாக மேற்கொள்ளுதல் சான்றோர்களுக்குத் தக்கதன்று என நூலாசிரிய சுவாமிகள் அறிவுறுத்துகின்றார்.*

258. இசைய தாம்எச்சம் பெறாவிடில் ஒருவனுக்கு
இகபரத் தினும்தீரா
வசைய தாம்எனும் மறைமொழி சுரர்குரு
மனத்தில்எண் ணினன்ஆகித்
திசைய தூடவிர் புகழ்க்கொங்கு நாட்டிடை
திகழ்ஒரு வரைமீதில்
இசையும் ஓர்அரங் கன்சுயம் புருவங்கண்டு
இன்புடன் பூசித்தான். 3

259. உக்கி ரப்பெருந் தவம்பல ஆண்டுகள்
உஞற்றினன்; அமையுங்கால்
அக்கி ரத்தகை இரங்கநா தன்தனது
அகம்களித் தவனாகி,
மைக்கி ளர்ச்சிசால் மேனிகண் கவர்தரு
வனப்பியல் ஒளிவீசச்
சக்கி ரம்சங்கத் துடன்அப யவரதம்
சார்கரங் களும்தோன்ற, 4

260. ஒளிகு லாவிய வீரகண் டையின்இசை
ஓதைஜம் புலம்தேக்கிக்
களிகு லாவ, வைத் திடுபத பங்கயக்
கழல்விளங் கிட,இன்பத்
தெளிகு லாம்நகை பெற்றசீ தேவிபூ
தேவிமத் தியில்ஞான
வெளிகு லாம்பக வன்சகு ணத்திரு
மேனிகண் டின்புற்றான். 5

*258. இசை – புகழ். எச்சம் – மீதம். இகபரம் – இம்மை மறுமை. மறைமொழி – திருக்குறள். இங்கு ஆளப்பெற்றுள்ள குறள் – "வசை என்ப வையத்தார்க் கெல்லாம் இசை என்னும் எச்சம் பெறாஅ விடின்" (238). திசையது ஊடு அவிர், அது பகுதிப்பொருள் விகுதி. வரை – மலை. இசையும் – பொருந்தியுள்ள. ஓர் – ஒப்பற்ற. சுயம்பு உருவம் – தானே உண்டான வடிவம்.*

*259. உக்கிர – கடுமையான. உஞற்றினன் – செய்தான். அமையும்கால் – நிறைவேறும் பொழுது. அக்கிரத்தகை – முதன்மையான. அகம் – உள்ளம். மை கிளர்ச்சி சால் – மையைப் போன்றதும் கவர்ச்சி மிக்கதும் ஆகிய. வனப்பு இயல் – அழகு பொருந்திய.*

*260. வீரகண்டை – ஒருவர்தம் வீரத்திற்கு அறிகுறியாக அணிந்து கொள்ளும் மணி. இசை ஓதை– பொருந்திய ஒலி, வினைத்தொகை. களி குலாவ – உவகை பொங்க. தெளி – ஒளி. நகை– சிரிப்பு.*

261. “அவத்தி னால்மருள் ஐம்புல மாயையின்
அயர்ந்தநித் தியக்காட்சிப்
பவத்தி னால் அகங் கரமம காரம்ஆம்
பற்றமைந் திளைத்தேனைத்
தவத்தி னால்அமை இன்பம்மெய் இன்பெனச்
சாரத்தேற் றுவைபோல,
நவத்தின் ஆயநின் திருவுருச் சேவைஎன்
நயனநேர் உறநின்றாய். 6

262. “அடர்த ரும்புலக் காட்சிதுன் பெனஅறி-
யாது,மேன் மேலாகப்
படர்த ரும்சிறு போகபாக் கியத்திசை
பற்றமைந் துழல்வார்கட்கு
இடர்த ரும்செயல் உன்னரு ளின்திறம்
என்றறிந் தனன்-நீமுற்
சுடர்த ரும்பெரும் சேவைகாட் டினைஅருட்
சுகம்பெருக் கியதாலே. 7

263. “கன்ம மேநிறை வுற்றஇவ் வுடற்பகைக்-
கண்அமைந் துற்றார்க்கு
வன்மம்மேலிடும் தீவினைத் துற்குணம்
வழிந்துபொங் கிடல்அன்றித்
தன்ம நாயக தாயக மெய்ப்பெரும்
தவம்உளார்க் குரித்தாம் உன்
மன்ம ஞானம்உண் டாகுமோ? எனக்கருள்
வலிந்தளித் தனை;வாழி!” 8

*261. அவத்தினால் – பயனற்றபொருள்களால். மருள் – மயங்குகின்ற. அயர்ந்து – சோர்வுற்று. அநித்திய – நிலையற்ற. பவத்தினால் – தோற்றத்தால். அகங்கரமம காரம் – நான் என்னும் அகம்பாவமும் என்னுடையது என்னும் எண்ணமும், பற்று அமைந்து இளைத்தேனை. இன்பு என. தேற்றுவை போல – தேற்றுகின்றவனைப் போன்று. நவத்தின் ஆய – புதுமையான. நயனநேர் – கண் எதிரே.*

*262. அடர்தரும் – செறிந்த, புலக்காட்சி – ஐம்புல அநுபவம். துன்பு என. இசைபற்று – பொருந்திய ஆசை, வினைத்தொகை. இடர் – துயரம். காட்டினை – காட்டி, வினையெச்சம். காட்டினை பெருக்கியதால் அறிந்தனன் என்பது முடிபு.*

*263. உடற்பகைக் கண் – சரீரமாகிய விரோதியினிடத்து. வன்மம் – நிலைத்த கோபம். தன்ம – அறத்தொடு பட்டதும். நாயக – தலைமையானதும். தாயக – வள்ளல்தன்மை உடையதும். மெய் – உண்மையானதும். பெரும் – பெரியதும் ஆகிய, எல்லா இடங்களிலும் எண்ணும்மை விரிக்க. மன்ம – இரகசியமான, எளிதில் புரிந்துகொள்ள முடியாத என்பது கருத்து. வலிந்து – (என் முயற்சி இல்லாமல் நீயாகவே) வலிதில்.*

264. எனத்து தித்திடும் சுரர்குர வன்செயற்கு
இருதயம் களித்தோனாய்க்
கனத்தை நேர்கைமா றற்றியல் மெய்யுடைக்
காரணன் இசைப்பான் "உன்
மனத்தின் ஆவல்கள் ஓதுதி; வல்லையில்
வழங்குதும்" என ஓதத்
தனக்கு நேர்பிர கற்பதி இன்பகம்
தழைத்திசைத் திடுகின்றான். 9

265. "கருணையங் கடலே! உனதருள் என்பால்
கலந்து,தூண் டியதாலே
மருவி யான்தவம் புரிந்திடும் இம்மலை
வளர்குரு இருடிப்பேர்
பெருகி நிற்க,என் உள்ளமேல் சோதியாம்
பிறக்கம்வாய்ந் திடும்ஊற்றம்
ஒருவி லாதுநின் றென்பவம் கெடுத்தல்போல்,
ஓங்கும்இவ் வரைமீதும் 10

266. "ஊற்றம் ஒன்றுதித் துன்அருள் எனக்குதித்து
ஓடி,ஆ றுயிர்கூடும்
சீற்ற வெம்பவம் ஒழித்தென்ஓர் பொன்பெயர்
சிறந்திலங் கிடல்வேண்டும்;
தேற்றம் மேவுசீ தேவிஎன் சுதைஎனச்
சேரவேண் டும்;பின்யான்
மேற்ற ழைந்திடும் திருமண விழாச்செய
வேண்டும்"என் றிரந்திட்டான். 11

*264. சுரர்குரவன் – தேவகுரு, வியாழன். கனத்தை நேர் – மேகம் போன்ற. கைமாறு அற்று இயல். ஓதுதி – கூறுவாயாக. வல்லையில் விரைவில். தனக்கு நேர் – தனக்குத்தானே இணையான, நிகரற்ற. இன்பு அகம் தழைத்து.*

*265. பிறக்கம் – ஒளி. உள்ளமேல் என்புழி அத்துச் சாரியை கெட்டது. ஒருவிலாது – நீங்காமல். பவம் – பிறவி.*

*266. ஊற்றம் – ஊற்று. என – போல. இது இப்போதும் பொன்னூற்று என்றே வழங்கப்படுகிறது. சீற்ற – சினம் மிக்க. சுதை – மகள். மேல் தழைத்திடும்.*

267. “முன்நு வன்றன யாவும்உன் இச்சையின்
முறைவழா தீந்திட்டேன்;
பின்நு வன்றமை காரைமா வனத்தின்மேல்
பிறங்குபேர் அணியோடு
மன்னு கின்றதாம் வரைமிசை அமைந்துநீ
மாதவம் புரிவாயேல்
உன்னு கின்றவா றளிக்குதும்” என இசைத்து
உருக்கரந் தனன்மாதோ. 12

268. மாத வன்திரு உருமறைத் தலும்மிக
வணங்கிவாழ்த் தெடுத்தோனாய்ப்
“போத வம்கழித் துழலும்என் அகத்தினுள்
புக்கு,மிக் கரிதான
மாத வம்செயத் தூண்டரிக் கேதுகை
மாறவன் மறைகாணாப்
பாத வந்தனை யேஇனி யான்செயற்
பால”தென் றுவந்தோனாய், 13

269. சண்ப கப்பெயர்ச் சமிவனத் தமைதரு
தயாபரன் தனை,வேலைக்
கண்ப டர்ந்திடும் புகழ்அலர் மேலுமங்
கைத்திரு வினை,சிந்தை
நண்ப டர்ந்தநஞ் சுண்டநா யகன்வேத
நாயகி தமைநன்றாய்க்
கண்ப டைத்தபே றாம்எனக் கண்டனன்;
கருதிஏத் தினன்மாதோ. 14

*267. முன் நுவன்றன என்றது குருஇருடிமலைப் பெயரையும், பொன்ஊற்றின் தோற்றத்தையும். பின்நுவன்றது திருமகளை மகளாகப் பெற விருப்பம். வழாது – தவறாமல். அணியோடு – அழகோடு. மன்னுகின்றது. ஆம் – நிலைபெறுவதாகிய. வரைமிசை–மலையினிடத்து உன்னுகின்றவாறு – நினைக்கும்படி. மாதோ அசை.*

*268. போது அவம் கழித்து. மிக்கு அரிது ஆன. தூண்டு அரிக்கு ஏது கைமாறு. மறை காணா அவன் பாத வந்தனையே. என்று உவந்தோனாய்.*

*269. தயாபரன் – கருணைமிக்கவன், திருமால் வேலைக்கண் – பாற்கடலில். நண்பு அடர்ந்த – நட்பு (இங்கு அருள்) நிறைந்த.*

270. இன்ன வாறுளம் தழைத்தெழும் அன்பினால்
இறைஞ்சினன் கனிவோடும்
பன்ன லாயினன் - "யான்புரி தவம்வல்லே
பயன்அளித் திடல்வேண்டும்;
இன்னல் ஆயின எவையும்யான் இசைதரும்
இடத்துறா தறவேண்டும்;
துன்ன லானஇன் பங்கள்சூழ்ந் திடும்படி
துணைபுரிந் திடல்வேண்டும்". 15

271. என்று போற்றினன் திருவருள் உளத்தினில்
இசைந்தசான் றுறஏற்றுக்
குன்று றாஉவப் புடன்,குட திசைஅமை
குன்றிடத் தமைந்தோனாய்
மின்து லங்கிய திருவருட் சூல்அமை
மேகமே னியைத்தன்னுள்
நன்று றப்பதித் திட்டனன்; அகக்கணால்
நாடி,எட் டெழுத்தோதி. 16

272. கையி ரண்டும்உச் சியின்மிசை கூப்பி,மேல்
கதிரவன் றனைநோக்கிப்
பொய்இ சைந்தஜம் புலக்கத வடைத்துளே
பொங்குபே ரின்பமான
மெய்யி லங்கிட, என்பெலாம் அங்கியின்
மெழுகெனும் படிஆகக்
கையில் ஆமல கம்எனப் பயன்கொள்வான்
கடுந்தவம் புரிகின்றான். 17

*270. இறைஞ்சினன் – இரந்த வியாழன், வினையாலணையும் பெயர். பன்னல் ஆயினன் – கூறத்தொடங்கினான். வல்லே – விரைவில். இடத்து உறாது அறவேண்டும். துன்னல்ஆன – பொருந்துகின்றனவாகிய.*

*271. போற்றினன் – புகழ்ந்தவனாகிய வியாழன், வினையாலணையும் பெயர். சான்று – சாட்சி, இங்கு உள்ளக் குறிப்பு. குன்றுறா – குறையாத. குடதிசை – மேற்கு. திருமகளாகிய மின்னலையும் திருவருளாகிய தண்ணீர்க் கருப்பத்தையும் உடைய மேகமாகிய திருமேனியை.*

*272. தனை – தன் பகுதிப் பொருள் விகுதி. புல கதவு அடைத்து உளே. என்பு எலாம் – எலும்புகள் யாவும். அங்கியின் – தீயிலிட்ட. கையில் ஆமலகம் என – உள்ளங்கை நெல்லிக்கனி போல. கொள்வான் – கொள்வதற்காக.*

273. கொள்ளை யாம்உ யிர்க் குலத்துளம் முழுமையும்
கோயில்கொள் பவன்உ ள்ளம்
கொள்ளை கொண்டிசை உலகமா தாஎனும்
கோகன கத்தாளைப்
பிள்ளை யாம்எனக் கொண்டுல கோர்எலாம்
பேசிடும் பெருவாழ்வு
வெள்ளை நெஞ்சமை எனைஅனார் உள்ளமேல்
விரும்பவும் முடியாதால். 18

274. தாய கத்தினை, பேர்அழ கியாவையும்
சார்ந்துருண் டொன்றான
நாய கத்தினை, திருவடித் துணைகளை
நாடிநம் பிடுகின்றார்.
ஆய கத்தினை, தன்திருப் புகழ்ச் சிறப்பு
அன்பினில் எடுத்தேத்தும்
வாய கத்தினைத் தூய்மைசெய் வாட்டரு
மாதவம் சிறிதாமோ? 19

275. "வருத்தம் மாதவத் தெவ்வள வெய்தினும்
மற்றது சற்றென்னப்
பொருத்த மானபேர் இன்பளித் திடும்"எனும்
புனிதர்வாய் உரைதன்னால்
திருத்த மார்பிர கற்பதி அன்பினால்
செய்திடும் தவமாட்சி
குருத்து வம்பெறு கொங்குநாட் டிடைஇன்றும்
குமுகும்என் றுறும்மாதோ. 20

*273. கொள்ளையாம் – எண்ணிக்கையால் அளவற்ற. உயிர்க்குலத்து உளம் முழுமையும் கோயில் கொள்பவன் – அந்தர்யாமி ஆகிய திருமாலின். இசை – பொருந்தியுள்ள. கோகனகத்தாளை – தாமரையில் வாழும் திருமகளை, பேசிடும் – புகழ்ந்திடும். வெள்ளை நெஞ்சு அமை – அறியாமையையுடைய மனத்தனாகிய. உள்ள மேல் என்புழி அத்து இன்சாரியைகள் கெட்டன.*

*274.தாயகத்தினை – கருணை வள்ளலை. நாயகத்தினை – தலைவியை. ஆய் – ஆராய்கின்ற. அகத்தினை – மோட்சத்தை, திருமகளே வீட்டுப்பேறு என்றபடி. வாய் அகத்தினை – வாயை, அகம் பகுதிப்பொருள் விகுதி, வாயாகிய இடம் எனப்பொருள். செய்வாள்த்தரு – செய்பவளாகிய இலக்குமியை மகளாக அளிக்கின்ற. வினா எதிர்மறை.*

*275. மா தவத்து வருத்தம் எவ்வளவு எய்தினும் மற்று அது சற்று. தவத்தால் கிடைக்கும் பயன் அதன் வருத்தத்தைவிட மிக அதிகம் என்பது கருத்து. மற்று மொழிமாற்றின்பொருட்டு, திருத்தம் ஆர் – தெளிவுடைய. குருத்துவம் – மேன்மை குமுகும்என்று உறும் – நறுமணம் பரப்பி விளங்குகிறது.*

276. மாட்சி மிக்கிசை வார்திரு மால்அருள்
வட்சமே இடம்என்ன
ஆட்சி பெற்றமை அம்மையை அகத்தினூடு
அமைத்திடல் எளிதோ?பின்
காட்சி நேர்வரத் தன்அள வாய்த்தெரி
காரணம் எளிதோ?மெய்க்
காட்சி மானிடர் களும்கொளப் புரிந்திடும்
கடுந்தவ வலிஎன்னே! 21

277. சித்தம் ஏற்றிடும் புகழ்ப்பிர கற்பதி
சிரத்தையுட் குறையாதே
நித்தம் ஆற்றிடும் தவத்தினை யாதென
நிகழ்த்திடில், ஒளிவீசும்
நத்தம் ஏற்றகை அரங்கநா தன்கொளும்
நங்கைவந் திப்பாரைச்
சுத்தம் ஆக்குவ தென்னலாம்; இதும்அவன்
சுகந்தரத் துணி பென்றே 22

278. கருமம் செய்திடற் கதுதுணை ஆகிடும்;
கலக்கம்மிக் குறக்கூட்டும்
வருமம் செய்திடற் கன்னதே உதவியாம்;
மகிமைமிக் கமைதான
தருமம் செய்திடற் கதுதுணை ஆம்எனில்,
சலசையே சுதைஆகும்
மருமம் செய்திட ஊக்கிடல் சுரர்குரு
மதிச்செயல் எனப்போமோ? 23

*276. இசைவார் – பெற்றிருப்பவர் ஆகிய, வினையாலணையும் பெயர். வட்சமே – மார்பே. அகத்தினூடு – உள்ளத்தில். காட்சி நேர் – கண் எதிரே. மானிடர்களும் என்பதில் உம்மை இழிவு சிறப்பு. என்னே – வியப்பிடைச்சொல்.*

*277. சிரத்தை –நம்பிக்கையோடு கூடிய ஆர்வம். உள் – உள்ளத்தில் நத்தம் – சங்கு, நங்கை – திருமகள். அவன் என்றது வியாழனை. சுதந்தர– தன்னிச்சையான. திருமாலின் அருளே வியாழனின் விருப்பமாக உருக்கொண்டது.*

*278. அது என்றது தவத்தினை. வருமம் – பகை, இங்கு பகையை வெல்லல் "அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார்; மறத்திற்கும் அஃதே துணை" (குறள் 76) என்பது போன்றது இது. சலசை – திருமகள். சுதை – மகள். மருமம் – இரகசியம். இவ்விடத்தில் மனத்தின் எண்ணம். வினை எதிர்மறை. சுதந்தர மதிச்செயல் அன்று; இறையருளே என்பது கருத்து. முற்பாடலின் பொருள் இங்கு விளக்கப்பட்டது.*

279. தளர்ச்சி என்கைசற் றறிகிலான்; திருஉருத்
தாங்குமேல் வரப்போகும்
வளர்ச்சி தன்னையும், அங்கதன் மேல்அருள்
மாட்சிஆர் விளையாடற்
கிளர்ச்சி தன்னையும், அன்னதன் பின்உறும்
கேடில்சீர் மிகுஞான
உளர்ச்சி தன்னையும் பெற்றநு பவித்திடும்
உளத்துரம் பெறும் மேலோன் 24

280. "உள்ளி டத்திவன் கொண்டஇன் பத்தினை,
உற்றஜம் புலம்ஆய
வெள்ளி டத்தினும் காட்டி,ஞா னானந்தம்
விளைத்திடு வேன்" என்ன
எள்ளி டத்திசை நெய்அனாள் திருவுளத்து
எண்ணி,அன் னவற்கோதி
நள்ளி டத்திரு உருஅமைந் தியைந்தனள்
நயனம்நேர் உறக்காண. 25

281. எண்இ றந்தகா லம்தவம் புரிந்தவன்
எதிரில்,ஏழ் இயல்பேதோய்
பண்நி றைந்தவே தங்கள்ஈ தலஎனப்
பகர்ந்துகாண் கிலதெய்க்கும்
விண்நி றைந்தபே ரானந்த மேஒரு
மேனிகொண் டருளாலே
கண்நி றைந்தமைந் திடும்எனில் அவன்உளம்
கலந்தஇன் பளவேதோ? 26

*279. அறிகிலான் – பயனிலை; மேலோன் எழுவாய். திரு உரு தாங்குமேல் – இலக்குமி தன் மகளாக வடிவெடுத்தால். உளர்ச்சி – மிகுதி. அநுபவித்திடும் – நுகர்தற்குரிய. உளத்து உரம் – மனவலிமை.*

*280. உற்ற–(இவன்பாற்) பொருந்தியுள்ள. வெள்ளிடம் – வெளியிடம். நெய் அனாள் – அனைத்துப் பொருள்களினூடும் இருக்கும் திருமகள். அன்னவற்கு – அந்த வியாழனுக்கு. நள்ளிட – நட்புக்கொள்ள, இங்கு மகளாகப் பாசம் காட்டுமாறு. அனாள் எண்ணி, ஓதி, அமைத்து, காண இயைந்தனள் என்பது முடிபு.*

*281. ஏழ்இயல்பே தோய் பண் – ஏழு சுரங்களைக் கொண்ட இசை, ஏகாரம் அசை. ஈது அல என – மறைகள் இவை இவை பரம்பொருள் அல்ல என்று கூறுமேயன்றி இதுதான் கடவுள் என்று சுட்டிக் கூறாது. "அல்லை ஈது அல்லை ஈது என மறைகளும் அன்மைச் சொல்லினால் துதித்து இளைக்கும்" (திருவிளையாடற், புராணம் – அவையடக்கம் 4). காண்கிலது – காணாமல், வினையெச்சம். நிறைந்து அமைந்திடும். இன்பு அளவு ஏதோ.*

282. "முரண்த ரும்குணத் தசுரரும் அமரரும்
முழங்குபாற் கடலூடே
அரண்த ரும்புய வலியினால் கடைய,ஆ-
லாலம்உற் றதன்பின்னர்
திரண்ட துன்உரு என்பர்கள்; சிறியனேன்
சிறிதுதுன் படையாமல்
சரண்த ரும்படி வந்தனை; அன்னை!நின்
தயவைஎன் என்பேனே? 27

283. "பிள்ளை யாம்எனும் கோலம்மேற் காட்டி,நீ
பிறங்கினும் உன்னுள்ளே
தள்ளை யாம்எனும் திறத்தினைக் கொஞ்சமும்
தவிர்த்திலை; அதனாலே
கொள்ளை யாம்எனும் தகையில்என் உள்ளத்தைக்
கொண்டஉன் அருள்வாய்மைக்கு
எள்ளை ஒத்தும்யான் புரிபரி சொன்றிலை
என்கைநன் கறிந்தேனே. 28

284. "கருத்து ளேநினைத் திடில்,தவம் காட்டிய
கருணையே திரண்டொன்றாம்
உருத்து லங்கி,என் முன்இலங் குற்றெனது
உணர்வுகொண் டருள்ஞான
விருத்தி தந்தது; மேல்இனி யான்செயும்
விதம்தெரி யேன்;அம்மை
திருத்தி மிக்கமை சேவைஈந் தனள்இனித்
திருத்திஆட் கொள்வாளே." 29

*282. முரண்தரும் – தம்முள் மாறுபட்ட. அரண் தரும் – உரியவர்க்குப் பாதுகாப்பளிக்கும். உற்றது அதன்பின்னர். திரண்டது உன் உரு. சிறிதும் என உம்மை விரிக்க.*

*283. பிறங்கினும் – என் முன் தோன்றினாலும். தள்ளை யாம் – நாம் தாய்.*

*284. நினைத்திடில் – ஆராயுமிடத்து. கருணை ஏது – வினா எதிர்மறை, தவம் தானே பலன் அளிக்காது. இறையருள் இருந்தால்தான் பயன்கிட்டும் என்பது சமய நூல் துணிபு, கருமமே பயன் தரும் என்பது நிரீசுவர சமயங்களின் கொள்கை. இரண்டு ஒன்றும் உரு என்றது திருமாலின் கருணை என்னும் நுண் உருவமும் திருமகள் என்னும் பருவுடலும் இணைந்த வடிவத்தை, ஞான விருத்தி – மெய்யறிவின் வளர்ச்சி. திருத்திமிக்கு அமை – (அடியேனுக்கு) மன நிறைவை அதிகமாகத் தருகின்ற. அமை சேவை – அமைக்கின்ற சேவை எனப் பிறவினைப் பொருளில் ஆட்சி, இனி அம்மை திருத்தி மிக்கு – திருமகள் மன நிறைவுற்று. அமை சேவை – நிறைவான காட்சியை எனினும் இழுக்கின்று.*

285. என்ன வேசுரர் குருதவம் புரிந்தமைந்து
உளேஇசை தரும்காலம்
மன்ன வேஇலக் குமியைநேர் கண்டுளே
மற்றொன்றும் மதியானாய்த்
தன்ன ருந்தவத் தால்கொள்சித் திரைத்துவா
தசிவெள்ளி வாரத்தில்
நன்ன லம்தர வரும்சுதை வடிவமே
நாடிஇன் புருஆனான். 30

286. கொன்பி றங்கிய மகட்கவிர் சைலலக்-
குமிஎனப் பேரிட்டான்;
மன்பி றங்கிய தோற்றத்தின் இளமைகால்
விதுஎன வளர்வுற்றே,
அன்பி றங்கிய தோழிய ரொடுவிளை
யாடல்செய் துறும்காலை,
இன்பி றங்கருட் சீதரன் காட்சிதந்
திட,நெடு மால்ஆனாள். 31

287. சயில லக்குமி யாம்திரு மாதுதன்
தாதையாம் குருபாற்போய்,
"வெயில்வி ரித்திடு மரகத மாணிக்க
மேனிதோய் அரங்கப்பேர்
பயிலும் நாதற்கே எனைஅளிக் குதி"எனப்
பகர,என் தவம்என்றே,
ஒயில்கு லாவரங் கன்புடை விண்ணப்பித்து,
ஒப்பலின் உவப்புற்றான். 32

*285. சித்திரைமாதம் பன்னிரண்டாம் பக்கம் வெள்ளிக்கிழமையன்று திருமகள் வியாழனின் மகளாகத் தோன்றினாள். சுதை – மகள். இன்புஉரு ஆனான் – உவகையே வடிவமாக ஆனான்.*

*286. கொன்பிறங்கிய – பெருமை விளங்குகின்ற. மகட்கு அவிர். சைல லக்குமி – மலையில் தோன்றிய திருமகள் எனப் பொருள். மன் – சிறப்பு. விது – சந்திரன். அன்பு இறங்கிய – சிநேகம் வெள்ளம் போல் பாய்ந்த. இன்பில் தங்கு – மகிழ்ச்சியில் நிலைத்திருக்கும். நெடுமால் ஆனாள் – பெரும்காமம் கொண்டாள். திருமகள் நெடுமால் ஆனாள் என்றது நயம்.*

*287. வெயில் விரித்திடு – ஒளி வீசுகின்ற. அளிக்குதி – திருமணம் செய்து கொடு. பகர – சொல்ல. ஒயில் குலாவு – அழகு மிகுந்த.*

288. தேவ தச்சனை அழைத்தணி மண்டபம்
சிறப்பஆற் றலும்,இன்பம்
மேவ லுற்றவா னவர்கள்மா தவர்சித்தர்
வித்தியா தரர்ஆதிக்
காவல் பெற்றவர் அடைந்ததும், அவர்உளம்
களித்தல்ஆ தியவான
ஆவல் பெற்றசீர் சொற்றிடில் பாக்கள்ஓர்
ஆயிரம் சிறிதாமால். 33

289. தரும ணம்புணர் பூவினம் வானவர்
சயசய எனத்தூற்ற,
உரும ணம்புணர் பான்மையின் இமைத்திடா
உவப்பினில் எதிர்போதில்
கரும ணம்பெறா உண்மையில் நரர்தவர்
கடவுளர்ச் சரியாக்கும்
திரும ணத்திரு மண்டபத் தரிபொறி
சேவைதந் தனர்மாதோ. 34

290. அம்மை அப்பரைக் கண்டனர்; பிறப்பிறப்பு
இருப்பென அமைவாகும்
மும்மை யும்தெரி கின்றிலர்; ஆணவ
மூலமூ டிசைவுற்ற
தம்மை யும்தெரிந் தாரிலை; கண்ணகத்
தலமெலாம் குடிகொண்ட
செம்மை யாம்மணி வண்ணமே கண்டனர்;
சிந்தைஅற் புதம்மிக்கார். 35

*288. தேவதச்சன் – மயன். காவல் – அரசாட்சி. பாக்கள் – செய்யுள்கள். சிறிது ஆம் ஆல் அசை.*

*289. தரு – பஞ்ச தருக்களின். தூற்ற – பொழிய. உரு – அழகிய. கருமணம் பெறா உண்மையில் – பிறவியோடு தொடர்பு ஏற்படாது என்னும் காரணத்தால். நரர் – மானிடர்களையும். அரிபொறி – திருமாலும் மலர்மகளும், உம்மைத்தொகை.*

*290. இருப்பு – வாழ்தல். ஆணவ மூலமூடு – ஆணவமாகிய மூல மலத்துடன், ஆணவக்கிழங்கு எனல் சைவ மரபு, "அகந்தைக் கிழங்கை அகழ்ந்தெடுக்கும் தொண்டர்" என்பார் குமரகுருபரர். மூலமூடு என்புழி அத்துச் சாரியை கெட்டது. தம்மை என்பது ஆன்மாவை. தரிசித்தவர்கள் தற்போதம் இழந்து இன்புற்றனர் என்றவாறு.*

291. ஞால மாகிய மாந்தர்தம் செய்கையும்,
நாகம்என் றிசைகீழ் மேற்
பால ஆகிய மற்றையோர் நிலையும்இப்
படிஎனில் தவத்தாலே
சீல மாகிய யாவையும் நல்கும்இச்
சேவைகண் டிடஆதி
மூல மாகிய சுரர்குரு நிலைமையார்
மொழிந்தனர் முடிக்கின்றார்? 36

292. உந்தி அம்புயத் துதித்துள நான்முகத்து
ஒருவன்உள் உவப்பாலே
முந்தி டும்திரு மணச்சடங் கியற்றிட,
முகுந்தநா யகன்அம்மை
அந்தி ருக்களத் தின்மிசை மங்கலம்
அதிகரித் திடச்செய்தான்;
புந்தி ஓகையின் அமைந்துளார் சயசய
போற்றிஎன் றனர்ஆர்த்தார். 37

293. கணங்கி ளர்ந்துளார் யாவரும் உவகைஅம்
கடலின்மூழ் கினராகி,
வணங்கி வாழ்த்தினர்; இச்சையாம் பலபல
வரங்களும் கொண்டேதாம்
இணங்கி வாழ்நகர் எய்தினர்; மனக்கணில்
இச்செயல் மறையாராய்க்
குணங்கி ளர்ந்தனர்; இகபர சாதனக்
கோப்புடன் குலவுற்றார். 38

*291. ஞாலம் ஆகிய – நில உலகில் தோன்றியுள்ள. நாகம் என்பது வானுலகு, கீழ் உலகு ஆகிய இரண்டிற்கும் பெயர். காண்க: இந்நூல் பா 118. மற்றையோர் என்றது தேவர்களையும் நாகர்களையும் ஆதிமூலம் – அடிப்படைக் காரணம் . மொழிந்தனர் – வினையெச்சம். முடிக்கின்றார் யார்? எவரும் இலர் என்பது கருத்து.*

*292. உந்தி அம்புயம் – கொப்பூழாகிய தாமரை. அம் திரு களத்தின் மிசை – அழகும் புனிதத் தன்மையும் கொண்ட கழுத்தில். மங்கலம் – (அதன்) நன்மையை. புந்தி ஓகை – உள்ளத்து உவகை. என்றனர் – என்று வினையெச்சம்.*

*293. கணம் – கூட்டம், பதினெண்கணத்தினர் எனினும் ஆம். குணம் கிளர்ந்தனர் – இன்பம் மிக்கனர். கோப்பு – தொடர்பு.*

294. உய்வ மைந்ததன் செய்கையை நினைந்துநின்று
உவகைஅம் கடல்முழ்கும்
தெய்வ மந்திரி தனைஅரங் கேசன்உட்
சிறப்பில்நோக் கினன்விள்வான்
"மெய்வ ரும்திறம் தோய்நின்சீர் நாடிஉள்
மெச்சினம்; இக்கோலம்
கைவ ரும்படி மக்கட்காண் டுகள்தொறும்
காட்சிஈந் திடுவேமால் 39

295. "நீயி ருந்தவெற் பதுபிர கற்பதி
நிலைமலைப் பெயர்ஏய்க;
தாயி ருந்தஇந் திரைவரை என்னவும்
சார்க;அவ் அணிவெற்பின்
வாயி ருந்தம்மை தனைஅழைத் தனர்,திரு
மணவிழாக் கொண்டாடி
மேயி ருந்தவர், யாரும்நின் பேறுற
விழியருள் பொழிவேமால். 40

296. என்று வாய்மலர்ந் தருளிய கருணைசால்
இரங்கநா தன்பாதம்
ஒன்றும் அன்பினால் வணங்கி,"என் செயல்எலாம்
உன்செயல்" என ஓதி,
நன்று தோய்மணக் கோலமே உளம்கொடு,
ஞானஆ னந்தம்சால்
குன்றுள் ஆம்தவம் பெருக்கினன் யாவரும்
குருஎனும் புகழோனே. 41

*294. உய்வு அமைந்த. தெய்வமந்திரிதனை – தேவகுருவை. நோக்கினன் – பார்த்து, வினையெச்சம். விள்வான் – கூறினான். மக்கட்கு ஆண்டுகள். ஆல் – ஈற்றசை.*

*295. வெற்பது – மலை, அது பகுதிப்பொருள் விகுதி. ஏய்க – பொருந்துக. இந்திரைவரை – திருமகள்மலை. வெற்பின்வாய் இருந்து – மலையிலிருந்து. அம்மைதனை – திருமகளை. மேய் இருந்தவர் – கூடி இருந்தவர். ஆல் – அசை.*

*296. புகழோன்பெருக்கினன் என்பது முடிபு. ஏகாரம் ஈற்றசை.*

297. வாச னைத்துணர்ச் சண்பக வனம்சமி
வனப்பெரு வாழ்வாகும்
ஈச னைப்பிர கற்பதி வழிபடும்
இயல்புரைத் திட்டேன்;மேல்
மாச னைத்தும்நீங் கிடவட திசையினில்
வாழ்குபே ரன்செய்த
பூச னைத்திறம் உலகினர் உணர்தரப்
புகலுவன் சிறிதம்மா. 42

*297. வாசனைத் துணர் – மணம் மிக்க பூங்கொத்துக்களை உடைய. ஈசனை – கடவுளாகிய திருமாலை. மாசு அனைத்தும். அம்மா வியப்பிடைச்சொல்.*

*பிரகற்பதி வழிபடுபடலம் முற்றிற்று*

## 7. குபேரன் பூசித்த படலம்.

(கலித்துறை)

298 பரமன் மெய்ப்பரம் என்றுணர்ந் துபாசனை பயின்றுள்
உரமன் னும்தவச் சிறப்பியல் சாத்தியம் உற்றோர்
பிரமன் மன்மதன் காலனை நகைசெய்பண் பினைப்போல்
வரமன் னும்புகழ்க் கைலைவெள் ஒளிமிக வயங்கும். 1

299. நயம்தி கழ்ந்திடும் அவ்வரை மீதினில் நல்லோர்
வியந்தி டும்பெருந் தவம்பொலி இமவரை வேந்தன்
பயந்தி டும்கரு ணாகரப் பார்வதி பாகச்
சயம்பு வானவர் மாதவர்க் கருளுபு தழைக்கும். 2

300. அத்த கைப்பர மற்கிசை தோழமை அமைந்த
வித்த கக்குபே ரன்தரு பாலர்கள், மேன்மை
வைத்த சீர்நள கூபரன் மணிக்கிரீ வப்பேர்ச்
சுத்தர், தாதைசொற் படிஅரன் தொண்டுசெய் தமைந்தார்.

301. இன்ன வாறியல் காலத்தோர் நாளினில் இறைவன்
தன்ன கத்திவர் பணிசரி எனும்பரி சாலோ,
முன்னம் இங்கிவர் ஆற்றிய வினைமுதிர் வாலோ,
நன்ன லம்கண்ண னால்பெறும் நாள்வர லாலோ, 4

*298. பரமன் – சிவபிரான். உள் வரம் மன்னும் – மனோதிடம் நிலைத்துள்ள. வரம் – மேன்மை. கயிலை மலையின் வெண்மை தவசிகள் பிரமன், மாரன், இயமனைவென்று சிரிப்பது போல் உள்ளது.*

*299. இமவரை வேந்தன் – இமவான். கருணாகர – அருளுக்கு இருப்பிடம் ஆகிய. பாக – ஒரு பாதியிலே உடைய. சயம்பு – சிவபெருமான். அருளுபு – அருள்புரிய.*

*300. வித்தக – நல்ல. பாலகர்கள் – மைந்தர்கள். சுத்தர் – தூயவர். தாதை – தந்தையாகிய குபேரன்.*

*301. அகத்து – உள்ளத்தில். பணி – தொண்டு. பரிசாலோ – தன்மையாலோ வினை – இங்கு புண்ணியமாகிய நல்வினை. நல்நலம். கண்ணனால் நலம் பெறும் நாள் என இயையும்.*

302. அந்த மால்வரைச் சாரலில் அணிமிக அமையும்
கந்த நாண்மலர் வாவியில் சுந்தரம் கலந்த
பந்தம் நீடும்அப் சரமடந் தையருடன் பரிவாய்
முந்த கக்களிப் பினர்சலக் கிரீடையின் முயன்றார். 5

303. மதுஅ ருந்தினர் ஆகி,நிர் வாணராய், மயக்கப்
புதுமை சான்றகா மப்பெரும் பித்தமும் பொருந்தி,
எதுவும் எண்ணல ராய்மதோன் மத்தராய் இருந்தார்;
அதுல நாரத முனிஎதேச் சையில்அவண் அடைத்தான். 6

304. புக்க நாரதற் கண்டு,நா ணுடன்பயம் பொருந்தி,
மைக்கண் மங்கையர் தம்உடை புனைந்தனர் மறைந்தார்;
மிக்க தாம்வெறி யால்உணர் வழிந்தவர் விருக்கம்
ஒக்க நின்றனர் வேழம்உண் விளங்கனி ஒப்பார். 7

305. கோப மும்பெரும் கருணையும் நாரதர் கொண்டு
சாபம் ஓதுவர்; "நீர்முப்பத் தறுசகத் திரங்கள்
பாபம் ஆர்மர உருவமாய்க் கண்ணன்தாள் பதும
சோப னத்துயர் சொர்க்கம்எய் துதிர்" எனச் சொன்னார்.

*302. மால் – பெரிய. கந்த – நறுமணம்மிக்க. சுந்தரம் – அழகு. பந்தம் நீடும் – தோழமை மிக்க. அப்சர மடந்தையர் – வானுலக மகளிர். பரிவாய் – அன்புடன். முந்து அக களிப்பினர். சலக்கிரீடை – நீர்விளையாட்டு.*

*303. மதோன்மத்தராய் – மத உன்மத்தராய், களிப்பில் தம்மை மறந்தவராக. அதுல – இணையற்ற. எதேச்சையில் – தற்செயலாக. அவண் – அங்கு.*

*304. புனைந்தனர் –அணிந்து, வினையெச்சம். உணர்வு அழிந்து அவர். அவர் என்றது நளகூபர, மணிக்கிரீவரை. விருக்கம் ஒக்க – மரம் போல. யானை என்னும் நோயால் தாக்குண்ட விளங்கனியில் உள்ளீடு இருக்காது. இவர்களிடமும் நாணம், தெளிவான அறிவு முதலிய நற்பண்புகளாகிய உள்ளீடு இருக்கவில்லை என்பது உவமையின் பயன். அறிந்து ஒப்பார் (ஆகிய) அவர் விருக்கம் ஒக்க நின்றனர் என்பது முடிபு.*

*305. கோபத்தால் சாபம், கருணையால் விமோசனம் இரண்டும் அளித்தார். சகத்திரங்கள் – ஆயிரம். பாபம்ஆர் – இத்தீவினையால் பொருந்திய என்க. மரங்கள் தீவினை உடையனவல்ல. தாள்பதும – திருவடியாகிய தாமரையின். சோபனத்து – வாழ்த்தினால்.*

306. பரம னுக்குயர் பணிசெய்தார் காமம்கட் பானா
துரக ராய்இவண் துயர்அமைந் திடில்,என்றும் சூழ்அக்-
கிரமம் அன்றிநன் குய்த்தறி யாத்துரா கிருதர்
நரக லாற்கதி காண்பதுண் டேகொலாம் நாடின்? 9

307. கிருபை மிக்கவிர் நாரதர் சாபவாக் கியத்தால்
மருவு நந்தகோ பரின்இடைப் பாடியின் மருதத்
தருஎ னும்படிவ த்தொடெம் பிரான்அவ தாரம்
கருதி னார்அசை வறும்தவம் புரிகுநர் கடுத்தார். 10

308. இனையர் இவ்வணம் திகழும்நாள் கிருட்டினன் இடையர்
தனையன் என்றிட வளர்ந்தன்னை யசோதைகைத் தாம்பால்
இனைவு றாதுர லூடுபந் தித்திட, இரண்டுஆம்
சினைவி ராவிய மருதிடை புகுந்தனன் சென்றான். 11

309. பகப்ப டும்துணை மருதிடைப் படும்உரல் பலம்மிக்கு
அகப்ப டும்தகை யால்வரா தாகநின் றமையால்,
மிகப்ப டும்தன்மெய் வலிமையால் இழுத்திட வீழ்ந்து
சுகப்ப டும்தம்ஓர் தொல்உரு அமைந்தனர் தூயோர். 12

310. "நல்லர் ஆயினார் கண்படும் விடம்பொலி நாகம்
அல்லல் எய்திடா தெனில்,பர மன்பணி ஆற்றி
வல்ல நாரதர் அநுக்கிர கத்தினை வாய்ப்பேம்
ஒல்ல ருங்கதி பெற்றிடற் கையம்ஒன் றுண்டோ? 13

*306. உயர்பணி. கட்பானாதுரகராய் – கள்பான ஆதுரகர் ஆய், கள்ளைக் குடிக்கும் பெருவிருப்பினராக. அக்கிரமம் – தீயநெறி. நன்கு உய்த்து அறியா. துராகிருதர் – தீயசெய்கையர். நரகுஅலால். கதி – மோட்சம். நாடின் – ஆலோசிக்குமிடத்து. வினா எதிர்மறை.*

*307. நந்தகோபர் – கண்ணபெருமானின் வளர்ப்புத்தந்தை. மருதத்தரு – மருதமரம். படிவத்தொடு – உருவத்துடன். கருதினார் – எண்ணி, எச்சம். கடுத்தார் – போன்றவர் ஆயினார்.*

*308. தனையன் – மகன், ஐகாரம் போலி. கைத்தாம்பால் – சிறிய கயிற்றால். இனைவு உறாது – வலிக்காதபடி. உரலூடு. பந்தித்திட – கட்டிவிட. சினை விராவிய – கிளைகள் நிரம்பிய. புகுந்தனன் வினையெச்சம்.*

*309. பகப்படும் – பிரிந்துள்ள. துணை – இரண்டு. படும் – சிக்குண்ட. மெய் – உடல். வீழ்ந்து (மரங்கள்) விழுந்து. தொல் உரு – பழைய வடிவம்.*

*310. அநுக்கிரகத்தினை – தயவினை. வாய்ப்பேம் – பெற்றவர்களாகிய நாங்கள், வினையாலணையும் பெயர். பெற்றிடற்கு ஐயம். வினா எதிர்மறை.*

311. "மட்டில் பேரருட் கிருட்டிண! எமைஅருள் வாழ்வில்
ஒட்டி இன்பம்எய் திடச்செய, இடையினில் உரலைக்
கட்டி வைத்திடச் செய்தலக் கண்மிகுத் தாய்போல்
· திட்டி நோக்கிநல் அருள்புரிந் · தாய்க்கென்செய் வேமே?

312. "இம்மை உம்மைஅம் மைப்பிறப் பெம்மையி னிடையும்
அம்மை அப்பனும் குரவனும் தெய்வமும் ஆகிச்
செம்மை நற்கதி புகப்புரி திருவருள்த் தேவே!
எம்மை ஆண்டருள் என்னவும் அஞ்சுகின் றேமே! 15

313. "புற்று மாய்,மர மாய்ப்புனல் கால்உண்டி யாகி,
வற்றி யாரும்நின் மலர்அடி காண்கிலர்; மதிஒன்று
அற்றி டும்சிறி யேம்பெற வலிதளித் தாண்டாய்!
மற்றி யாம்இனி யாதினை நல்கென வகுப்பேம்? 16

314. மனக்க ளிப்புடன், நீஅருள் உடல்உயிர் வகைகள்
உனக்க ளித்தனம்" எனவணங் கினர்க்கருள் உதவித்
தனக்கு நேர்கரு ணாகரன் சாற்றிடு கின்றான் -
"கனக்கும் ஓர்செல்வச் செருக்கினால் பெரும்அகங் கரத்தீர்! 17

315. பங்கம் அற்றசீர் நாரதன் பரமத யாளப்
பொங்கம் மிக்கவன் ஆதலின், நல்அருள் பொழிந்தே,
உங்க ளுக்குநல் அநுக்கிர கப்பெருக் குரைத்தான்;
மங்க ளச்சொல்மெய் ஆக்க,யான் நும்புடை வந்தேன்; 18

*311. அலக்கண் – துன்பம். திட்டி நோக்கி – கண்களால் பார்த்து. புரிந்தாய்க்கு – செய்த தேவரீருக்கு.*

*312. எம்மையினிடமும் – எந்தப் பிறவியிலும். குரவன் – குருநாதர். என்னவும் – என்று விண்ணப்பித்துக் கொள்ளவும். ஈற்றேகாரம் அசை.*

*313. புனல் கால் – நீரும் காற்றும். வற்றியாரும் – உலர்ந்துவிட்டவரும் (தன்மேல் கறையான் புற்று மூடும்படி நீரையும் காற்றையும் மட்டும் உட்கொண்டு உடல் இளைக்கும்படித் தவம் புரிபவர்களும்) உயர்வு சிறப்பும்மை. வலிது அளித்து ஆண்டாய்.*

*314. உனக்கு அளித்தனம். தனக்கு நேர் – தனக்குத் தான் மட்டுமே நிகரான, இணையற்ற. கனக்கும் – மிகுதியான. அகங்கரத்தீர் – செருக்குற்றவர்களே.*

*315. பங்கம் – குற்றம். பரம தயாளப்பொங்கம் – உயர்ந்த கருணைப் பெருக்கம். மங்கள – நன்மை பயக்கின்ற. நும்புடை – உம்அருகே.*

316 "சமானம் அற்றஎம் சேவையால் நலம்எலாம் தழைத்தீர்;
உமாது வைப்பமை மின்"என உரைத்தலும், வணங்கி,
எமாத வப்பயன் எனப்பணிந் தேத்தி,ஆண் டெய்தும்
விமானம் ஊர்ந்தனர் தம்உல கத்தின்மே வினரால். 19

317 வந்த மைந்தரைக் கண்டனன் வைச்சிர வணன்றான்;
அந்தம் இன்றிய உவப்புடன் அவர்த்தழீஇக் களித்து,
நந்த கோபன்மைந் தனைத்தரி சித்துளம் நயந்தே,
முந்த இந்திரன் குருவதி வனம்கொள முனைந்தான். 20

318. தான வண்புரி பூசனைக் கடமையோ? தனக்குஉள்
ஆன அன்பமை அரங்கநா தன்திரு அருளோ?
மேன வின்றிடும் இரண்டும்ஒன் றாய்அமை விதமோ?
யான றிந்திவண் இதுஎனச் சொலும்துணி விலனே. 21

319. கண்ட னன்;பர வசம்உளத் திடைமிகக் கலந்தான்;
விண்ட னன்துதி பல;புவி மிசைஉற வீழ்ந்தான்;
கொண்ட அன்பினில் கூத்தியற் றினன்;குதூ கலித்தான்
தொண்ட மைந்தசீர்க் குபேரன்மெய் நிலைஎவர் சொல்வார்? 22

*316. சமானம் – நிகர். உமாது – உம்முடைய. வைப்பு – இருப்பிடத்தில். அமைமின் – பொருந்தி வாழுங்கள். எம் மாதவப்பயன். ஊர்ந்தனர் – ஊர்ந்து, வினையெச்சம், மேவினர் என முடிந்தது. ஆல் – ஈற்றசை.*

*317. வைச்சிரவணன் – குபேரன். தான் – பகுதிப்பொருள் விகுதி. அந்தம் – முடிய. தழீஇ – தழுவி. தரிசித்துஉளம். இந்திரன் குரு – வியாழன். வதி வனம் – வசித்த காடாகிய சமீவனம், காரைமடை, வினைத்தொகை. முனைந்தான் – முற்பட்டான்.*

*318. தான்அவண். மேல் நவின்றிடும் – மேலே கூறப்பெற்ற. யான் அறிந்து இவண்.*

*319. விண்டனன் – கூறினான். கூத்து இயற்றினன் – நடம் ஆடினன். தொண்டு அமைந்த. சீர் – சிறப்பினை உடைய.*

320. பரங்க லந்திடும் பிரமதீர்த் தப்புனல் படிந்தே,
தரங்க மழ்ந்திடும் தீர்த்தம்ஒன் றகழ்ந்து,மஞ் சனம்கொண்டு
உரங்க லந்திடத் தினம்அபி டேகம்மிக் குஞற்றி,
அரங்க நாதன்உள் உவப்புறப் பூசனை ஆற்றி, 23

321 வாயு பக்கணம் புரிந்து,பே ரன்புதன் மயமாய்
ஓயும் நெஞ்சகத் தலத்திடை, உலகெலாம் உண்ட
வாயும், யாவையும் அளந்துயர் வானக மாடே
தோயும் நல்திரு வடிமலர் ஆதியும் துலங்க, 24

322. கண்ட கண்பர மானந்தம் ஆம்கதிர் மேனி
மொண்ட முந்திடப் போதம்ஆ னந்தத்தின் மூழ்கத்
தொண்ட ரும்தவம் புரிதரும் அரனது தோழன்
கொண்ட மாதவப் பெருநிலை எவர்களே குணிப்பார்? 25

323 அவத்தி னால்வரும் ஐம்புலப் போகவாழ் வல்லல்
உவர்ப்பு ளேகொடு விளங்கிய குபேரனுள் உயர்வாம்
தவத்தி னால்வரும் இன்பம்மேன் மேல்உறத் தழைப்பப்
பவத்தி னாற்பெறும் பாக்கியம் இதுஎனப் படிந்தான். 26

324 திருவின் ஆகிய செல்வத்தாம் இன்பினில் திளைத்தோன்
மரும மேஇட மாக்கொடக் கமலையுள் மருவும்
பொருவில் நாயகன் காமர்மெய்ச் சகுணமேற் பொருந்திக்
கருவி யாதிதீர்ந் தவிர்பரத் தின்பமும் கண்டான். 27

*320. பரம் கலந்திடும் – பழமையான. தரம் – தகுதி. மஞ்சனம் – நீராடல். உரம் கலந்திட – ஆர்வத்தோடு. உஞற்றி – செய்து.*

*321 வாயு பக்கணம் – காற்றை (மட்டும்) உணவாகக் கொள்ளுதல், உண்ணா நோன்பிருந்து என்பது கருத்து. அன்புதன் மயமாய் – அன்பையே தன் சொந்த வடிவமாகக் கொண்டு, ஓயும் – சஞ்சலம் அற்று அமைதியாக அடங்கியுள்ள. வானகமாடே – ஆகாயத்தின்கண். தோயும் – பொருந்துகின்ற. ஆதியும் – முதலியனவும்.*

*322. மேனியை என இரண்டன் உருபு விரிக்க. போதம் – அறிவு. தொண்டு – பணியாக, பழமையான எனினும் ஆம். அரனது தோழன் – சிவபெருமானின் நண்பன் ஆகிய குபேரன். குணிப்பார் – கணக்கிடுவார். வினா எதிர்மறை.*

*323. அவம் – வீண். வாழ்வு அல்லல். உவர்ப்பு – வெறுப்பு. உளேகொடு – மனத்தில்கொண்டு. பவம் – பிறப்பு. படிந்தான் – ஒழுகினான்.*

*324. திருவின் – இலக்குமியால். திளைத்தோன் என்றது குபேரனை. மருமமே – மார்பை, ஏகாரம் அசை. இடம் ஆ கொடு அ கமலை உள். கமலை – மலர்மகள். உள் மருவும் – உள்ளத்தால் பொருந்துதல், உள்ளப்புணர்ச்சி. பொரு இல் – இணையற்ற. காமர் – அழகிய. மெய் – உண்மையான. சகுணம் – உருவத்திருமேனி. கரு வியாதி – பிறவிப்பிணி. பரம் – மோட்சம்.*

325. மாத வத்தினில் பொருந்தும்பேர் இன்பினை மாந்திப்
போத மற்றவா நந்த,ஆ னந்தத்தேன் புசிக்கும்
ஆத ரத்தினர்க் கைம்புலம் தோய்அகங் கார
மீத வத்தையுள் கூடிடும் ஆசைமே விடுமோ? 28

326. தன்ன கத்துளே அண்டகோ டியைஎலாம் தாங்கிப்
பொன்ன கத்துளே தங்கினோன் றன்னைத்தன் புந்தி
என்ன கத்துளே தாங்கிய குபேரன்றான் எய்தும்
மின்ன கப்பொருள் பொருள்கொலோ எனும்தவம் மிகுந்தான். 29

327. துன்ப மேஎன உற்றஆ பத்தெலாம் தொலைத்தே
இன்ப மேஎன மெய்ப்பொருள் மாதவம் இசைக்கும்;
இன்ப மேஎனத் தோன்றிய அனைத்தும்இன் றாக்கித்
துன்ப மேஎனச் செய்யும்பொய்ப் பொருள்அவம் துணிவே. 30

328. நின்றி டும்சன காதியர்க் காக்கல்லால் நீழல்
துன்றி டும்பெரும் தவம்பொலி அரனது தோழன்
என்றி டும்பெயர் இன்னவற் கேற்புடைத் தென்ன
நன்றி டும்தவம் முடித்தனன் குபேரன்ஆம் நாமன். 31

*325. மாந்தி – துய்த்து. போதம் அற்று – (நான் என்றும்)தற்போதம் நீங்கி. அவா நந்த – ஆசை அழிய. ஆதரத்தினர் – பக்தர்கள். அவத்தை – வேதனை, வினா எதிர்மறை.*

*326. தன் அகத்துளே – தனக்குள். பொன் அகத்துளே – திருமகளின் உள்ளத்தில். தங்கினோன்றன்னை – நிலைபெற்ற திருமாலை, தன் பகுதிப்பொருள் விகுதி. புந்தி என் அகத்துளே – அறிவு என்னும் வீட்டில். மின்ன – மின்னலைப்போல் நிலையற்ற. கப்பொருள் – கைப்பொருள், ஐகாரத்திற்கு (கை) அகரம்போலி. இச்செய்யுளில் திரிபணி பயின்றது.*

*327. மெய்ப்பொருளாகிய மாதவம் இன்பமே இசைக்கும்; இன்றாக்கி – அழித்து. அவம் – பயனற்றது என்பது. துணிவே என்புழித் தேற்றேகாரம்.*

*328. நின்றிடும் – நிலையான. துன்றிடும் – பொருந்துகின்ற. அரனது – சிவபெருமானுடைய. நன்று இடும் – நன்மையைத் தருகின்ற. நாமன் – பெயரை உடையவன்.*

329. பரிக்கும் அன்னவன் தவநிலை மகிமையைப் பார்த்தே,
சரிக்கும் மாதவர் வானவர் வித்தியா தரர்கள்
விரிக்கும் ஆர்வமும் மானமும் மிக்கமே வினராய்,
"அரிக்கும் தோழன்ஆ குவன்கொலோ?" என்றுளத் தயிர்த்தார். 32

330. இன்ன வாறுகின் னரர்பிரான் தவம்புரிந் திருப்பப்
பொன்ன வாவிய மார்புடைப் புண்ணிய மூர்த்தி
அன்ன வன்றன்மேல் அளப்பில்பே ரார்வம்உற் றானாய்க்
கொன்ன மைந்ததன் சேவைதந் திடஉளம் குறித்தான் 33

331. பரிம ளத்துழாய் வாசனை திக்கெலாம் படர,
விரிம ணிக்கதிர் மெய்ஒளி உலகெலாம் விழுங்க,
புரியும் மந்தகா சத்தணி கட்புலம் புகுத,
அரிய புண்டரீ காட்சங்கள் அருள்மழை பொழிய, 34

332. சீத சந்திரன் செங்கதிர் போற்சங்கம் திகிரி
மேத கும்கரத் துடன்,அப யவரதம் விளங்கப்
பாத பங்கயத் தவிர்கழல் ஒலிஒளி பரப்பி
நாத விந்துகள் யாம்என உணர்த்தல்போல் நயப்ப, 35

*329. பரிக்கும் – தாங்கியுள்ள. சரிக்கும் – (எல்லா உலகங்களிலும்) இயங்குகின்ற. அரிக்கும் தோழன் – குபேரன் அரனுக்குத் தோழன். இனி திருமாலுக்குக் கூட நண்பன், இறந்தது தழுவிய எச்சவும்மை. அயிர்த்தார் – ஐயுற்றார்.*

*330. கின்னரர் பிரான் – குபேரன். பொன் அவாவிய மார்பு – திருமகளால் விரும்பப்பெற்ற மார்பகம். பொன்னை (திருமகள்) விரும்புரி அமர்த்திக் கொண்ட மார்பு எனினும் ஆம். கொன் அமைந்த – பெருமையுடைய. சேவை – தரிசனம்.*

*331. விரிமணிக்கதிர் – பரவுகின்ற நீலமணியின் ஒளி. மந்தகாசத்து – புன்னகையின். அணி – அழகு. கட்புலம் – கண் ஆகிய புலன், இருபெயரொட்டு. புண்டரீகாட்சங்கள் – தாமரைக் கண்கள்.*

*332. சீத – குளிர்ந்த. திகிரி – சக்கரம். சந்திரன் சூரியன் – சங்கு, சக்கரம், நிரனிறை. ஒலிஒளி – நாதவிந்துகள், உம்மைத்தொகையும் நிரனிறையும்.*

333. கோல மிக்கசீ தேவிபூ தேவிஉட் குளிர்ந்து
சால மங்களம் பொலிந்திரு புடையினும் சாரப்
பால மைந்திடும் பவளவண் ணப்பணிப் பகையின்
மேலமைந்திடும் சேவைதந் தனன்அருள் மிகுந்தே. 36

334. கண்ட னன்குபே ரன்;திருக் காட்சிஆ னந்தம்
கொண்ட னன்விழி அருவி;அன் னவன்உருக் குழைந்துள்
உண்ட னன்;பர வசத்தினாம் உவகையில் துதிகள்
விண்ட னன்;கரம் கூப்பினன் சிரத்தின்மீ துறவே. 37

335. இன்ன பான்மைதோய் குபேரனை நாடிமிக் கிரங்கித்
துன்ன ரங்கநா தன்சொல்வான் - "உன்அகம் துதையும்
பன்ன ரும்வரம் தருகுதும்; புகல்"எனப் பகர்வான் -
"என்ன கத்துன தன்பறா திசைந்திடல் வேண்டும்; 38

336. "பதிஇ தற்குயர் சுரர்வனப் பேர்பதிந் திடுக;
விதிரும் சக்கர பாணிப்பேர் உனக்குமே விடுக;
நிதிமு தற்சங்குப் பேர்கொடென் நிருமித தீர்த்தம்
அதிப வம்தொலைத் தாடினர்க் குன்பதம் அருள்க. 39

*333. கோலம் – அழகு. சால மிகவும். இருபுடையினும் – இரண்டு பக்கங்களிலும். பால் – உரிமை. பணிப்பகை – பாம்பின் பகைவனாகிய கருடன்.*

*334. கொண்டனன் என்னும் முற்றுவினை இடைநிலைத் தீபகமாக ஆனந்தம் அருவி என்னும் இரண்டுடனும் இணையும்.*

*335. துன் – நெருங்கிய. துதையும் – இருக்கின்ற. பன்ன அரும் – சொலற்கரிய. என் அகத்து உனது அன்பு அறாது.*

*336 பதி இதற்கு – இந்தத் தலத்திற்கு. விதிரும் – பகைவர்களை அச்சமுறச் செய்யும் என்ற பொருளில் ஆட்சி. நிதிமுதல் சங்கு -- ஒன்பது நிதிகளில் முதலாவதான சங்கநிதி. என் நிருமித – என்னால் படைக்கப்பட்ட. அதிபவம் – பெரிய பாவங்களை. தொலைத்து. ஆடினர்க்கு.உன்.*

337. "என்னை ஒப்பஇவ் வனத்தில்உன் பூசைசெய் திடுவோர்
பொன்னை ஒத்தநின் பதம்பெற அருள்"எனப் புகல,
அன்னை ஒத்தெலா நலமுமந்நிற் கமையும்என் றருளி
மின்னை ஒத்துருக் கரந்தனன் கார்உறழ் மெய்யன். 40

338. ஓத மீதினும் கொதித்தெழுந் திட்டநஞ் சுண்ட
நாத மூர்த்தியை, அவன்திரு அருள்என நண்ணும்
வேத நாயகச் செல்வியைப் பூசனை விளைத்துப்
போத நாள்அமர்ந் தான்புற விடைகொடு போந்தான். 41

339. சாற்றிசைச் சுரர்வ னம்,சங்கு தீர்த்தம்,
சக்கர பாணிப்பேர் இறைவன்
ஏற்றிசை தரவே துவாபர யுகத்தில்
இசைகுபே ரன்சிறப் பிசைத்தேன்;
ஆற்றிசைக் கருடன் கண்ணபி ரான்பால்
அமர்த்தொழில் புரிந்தவன் ஆடற்
பேற்றிசை தீர்த்தம் பூசைஆ தியசெய்
பெருமையை அருமையில் பகர்வாம். 42

*குபேரன் பூசித்த படலம் முற்றிற்று.*

*337. கரந்தனன் – மறைந்தான். கார் உறழ் – மேகம்போன்ற. (குபேரன்) புகல, மெய்யன் அன்னைஒத்து அருளி உருக் கரந்தனன் என்பது முடிபு.)*

*338. ஓதம் மீதினும் – எல்லையற்ற தண்ணீர்ப்பரப்பாகிய பாற்கடலின்மீதும், உயர்வு சிறப்பும்மை. போத – பல. புற – (தூல உடலாகிய) வெளிப்புறத்தில், அகத்தில் சிந்தித்திருந்தான் என்பது அருந்தாபத்தி.*

*339. சாற்று இசை – சொல்லப்படும் புகழ்மிக்க. இசை தர ஏற்ற – சம்மதித்து ஏற்றுக் கொண்ட, ஏகாரம் அசை. இசை குபேரன் – (இந்தத் தலத்தில்) பொருந்திய குபேரன், வினைத்தொகை. இசைத்தேன் – கூறினேன். இசை ஆற்று – நட்புப் பொருந்திய. அமர்த்தொழில் – போர். ஆடல் பேறு – திருவருளாகிய பாக்கியம். இசை என்னும் சொல் பலகால் பயின்ற சொல்பின்வருநிலை அணி.*

## *8. கருடாழ்வார் பூசித்த படலம்*

*(அறுசீர் விருத்தம்)*

340. கடலை அனைய பெருங்கருணைக்
கடவு ளிடத்தாம் வரம்பகன்ற
மிடலை நினையும் பத்தர்உளம்
மேவும் அகந்தை வேர்அறும்;தம்
உடலை அபிமா னிப்பவர்கட்கு
உயர்ச்சி தாழ்ச்சி தோற்றுவதால்,
நடலை அகந்தை ஏழைமைதான்
நனியா ரையும்வி டாதரோ. 1

341. பாவ வினை ஏழையை மடிக்குப்
பற்றாய்த் துன்பம் பலஅளிக்கும்;
மேவ வரும்புண் ணியம்செல்வ
மிகையால் கருவம் விளைத்தலைக்கும்;
ஆவ தவத்தாம்; செருக்கெதற்கும்
அஞ்சா அகங்கா ரம்பொருத்தும்;
சீவ கருணை ஆதிஇலார்
செயல்முற் றவும்பாழ் ஆகிடுமே. 2

342. ஞான விளக்கம் மிகப்பொருந்தி
ஞாலத் தமையார் உயிர்துன்ப-
மான பிறப்பிற் பட்டவதி
அடையும் தன்மை உய்த்துணரார்;
வான மிசைப் பதவியிடை
வாழ்வார் எனினும், அவர்க்குடல
மான மபிமா னக்குணமே
மலிந்து, சுழற்றி, வாட்டிடுமே. 3

*340. வரம்பு அகன்ற – எல்லையற்ற. மிடலை – வலிமையை. அபிமானிப்பவர் – நேசிப்பவர். நடலை – துன்பம். அரோ – ஈற்றசை.*

*341. மிடி – வறுமை. பற்றால் – பிடிப்பாக. விளைத்து அலைக்கும். ஆவது அவத்து ஆம் – விளைவு பயனற்றது ஆகும்.*

*342. அமையார் (தம்) உயிர் அடையும் தன்மை உணரார். உடல – சரீரத் தொடர்புடைய. மான அபிமானம் – செருக்கும் ஆசையும்.*

343. மெஞ்ஞா னம்தான் அகண்டம்என
விளங்கும் பரிபூ ரணநிலைமை;
சுஞ்ஞா னம்தான் மெய்ப்பொருளில்
தோயும் உண்மை அநுபூதி;
விஞ்ஞா னம்தான் தீமைநன்மை
வேறு வேறாப் பிரித்தறிதல்;
அஞ்ஞா னம்தான் பிடித்ததைமேல்
ஆம்என் றடம்கொண் டுக்குவதே. 4

344. இன்ன வகைஆ ருயிர்இனத்தை
இழுத்து மேல்கீழ் ஆக்கியே
பன்ன அரிய மாயைகன்மப்
பரப்பில் விளையாட் டியற்றியிடும்
தன்ன தாம்ஓர் பொருட்டும், மற்றோர்
தமது பொருட்டா லும்புரிவர்.-
சொன்ன வகையில் கருடனுக்கும்
தோன்றிற் றுளத்தில் அகந்தையே. 5

345. "ஈங்கார் எனக்கு நிகர்ஆவார்?"
யாண்டும் ஒப்பார் இலர்;என்னும்
ஆங்கா ரப்பேர் இருள்மூட,
ஆக்கைத் தினவு மிகவலிக்கும்
தீங்கால், வைகுந் தம்கடந்தெண்
திக்குப் பாலர் இயக்கர்சித்தர்
பாங்கார் தேவர் அரக்கர்பால்
படர்ந்து கர்ச்சித் தமர்த்ததே. 6

*343. அகண்டம் – பகுதிகளால் ஆகாத முழு முதற்பொருள். சுஞ்ஞானம் – நல்லறிவு. விஞ்ஞானம் – சிறந்த அறிவு. அடம்கொண்டு – பிடிவாதமாக.*

*344. பன்ன – கூறுவதற்கு. அகந்தை – செருக்கு.*

*345. ஈங்கு ஆர். ஆங்காரம் – ஆணவம். ஆக்கை – உடல். பாங்கு ஆர் – அருகில் பொருந்திய, எதிரிட்ட. கர்ச்சித்து. அமர்த்ததே – போரிட்டது, ஏகாரம் ஈற்றசை.*

346. "புல்லே என்ன ஓதுதற்கும்
போதா உலகீர்! புருடர்உண்டேல்
வல்லே வம்மின்" என்னஅறை
கூவி, மார்பைப் புடைத்திடிபோல்
கல்லேற் புடைய நகைகாட்டிக்
கறங்கில் திரிந்தாங் கெதிர்வார்பால்
மல்லே புரிந்தும், புயத்தினவு
வளரச் சகியான் ஆயினான். 7

347. காணான் அமர்க்கு வருவாரைக்
கண்ணின் எதிர்தோன் றினர்கள்தமை
வீணா னவர்என் றவருடன், "வல்
வீரர் தமைநீர் கண்டதுண்டேல்
ஆணா னவர்சொல் மின்கள்"என
அதட்டி வினவி, அவர்மொழியான்
மாணார் கண்ணன் விளையாடும்
மகிமை மலிகோ குலம்அடைந்தான். 8

348. நந்த கோபன் சேயன்என
நண்ணும் கண்ணன் தான்கருடன்
வந்த செயல்ஆ தியஉணர்ந்தும்
மற்றொன் றவன்பால் உரையானாப்
பந்தம் மலிபா லரொடாடற்
பயின்றான்; உற்ற பகற்காலம்
அந்தம் அடையும் வரைஅவனும்
அண்ணல் உருக்கண் டமைந்தானே. 9

*346. புருடர் – ஆண்கள். வல்லே – விரைவில். கல்ஏற்புடைய – கல்என, ஒலிக்குறிப்பு. கறங்கில் – பம்பரம்போல. மல்லே – மற்போர், ஏகாரம் அசை. சகியான் – பொறுக்க இயலாதவன்.*

*347. காணான் – காணாதவனாகிய கருடன், வினையாலணையும் பெயர் – மாண்ஆர் – மாட்சிமை மிக்க.*

*348. மற்று ஒன்று அவன்பால், ஒன்றும் என உம்மை விரிக்க. பந்தம் மலி –அன்பு மிகுந்த. அந்தம் – முடிவு. அவன் என்றது கருடனை.*

349. மனைதோய் தரும்போழ் தறிந்தான்போல்,
வந்த நீயார்? இவ்விடத்தெவ்
வினையால் அடைந்தாய்? என, கருடன்
விள்வான்-"எந்த உலகிடத்தும்
எனைவென் றடக்கும் வீரர்இலை
என்னத் தேடி னேன்;பலரும்
உனைவீ ரம்உ ளான் என,அடைந்தேன்;
உண்மை எனில்மல் இயற்றெ"ன்றான்.

350. கேட்ட கண்ணன் முறுவலித்து,
"கிரிநேர் உடல்கொண் டனை"உன்முன்
வாட்டம் அமையும் மழவமர்க்க
வல்லேன் அல்லேன்; ஆயிடினும்
நாட்ட கத்தார் பற்பலரும்
நவில்கை பொய்யா மலும்,என்பால்
வேட்ட பயன்நீ பெறநல்க
வேண்டும் என்னும் படியாலும். 11

351. சற்றே விளையா டிடவாஞ்சை
தழைத்தேன்" என்னத் தனிக்கருணை
உற்றே மற்போர் புரிகாலை,
உவணன் உடலின் தினவுசிறிது
அற்றே மன்னும் படிபுடைத்தும்,
அதனை அறியா விதம்மறைத்தும்,
எற்றே என்ன வியந்திவற்கொப்பு
இல்லை எனத்தோற் றிடப்புரிந்தான். 12

*349. போழ்து – போதில். எவ்வினையால் – எந்தக் காரியத்திற்காக. மல் – மற்போர்.*

*350. மழவு – இளம் பாலகன் (ஆனநான்). அமர்க்க – போரிட. நவில்கை – கண்ணனை வீரன் எனக்கூறியது. வேட்ட – வேண்டிக்கொண்ட.*

*351. வாஞ்சை – விருப்பம். உவணன் – கருடன். புடைத்தும் – அடித்தும். எற்றே – எத்தன்மைத்து, ஏகாரம் வியப்பிடைச் சொல். கண்ணன் தோன்றா எழுவாய்.*

352. வல்லை மறைத்துத் தான்தோற்ற
வண்ணம் மாயம் காட்டிடும்ஓர்
எல்லை, உவணன் சினந்திறையை
எடுத்தம் பரத்தில் வீசினான்;
தொல்லை மறைகா ணரும்கருணைத்
தோன்றல் எதிர்கா லத்தினிலே
எல்லை யறும்பே ராடல்அன்பர்
இனங்கள் புரிந்து தவம்பெறவே. 13

353. காரை வனத்தின் அருகமையும்
கவின்ஆர் பிரகற் பதிமலையின்
நீரை உடைய மடையினிடை
நிலவி விழும்போ தினில்பிரமா
தாரை யுடைய கண்ணீரில்
தடம்ஆர் புனலின் மஞ்சனம்செய்து
ஏரை உடைய மேனியைக்கண்டு
இன்பப் பெருக்கம் எய்தியே, 14

354. கனிவர்க் கங்கள் மிகக்கொணர்ந்து,
கருத்தில் பெருகும் ஆதரவால்
இனிதூட் டினன்;என் தவப்பெருமாண்பு
இதுவே என்று கொண்டாடி,
நனிஅர்ச் சனைபூ சனைபுரிந்தான்;
நண்ணும் அதனைத் திருவிழாப்
புனிதச் செயல்ஐ தீகம்உறப்
போற்றி உலகம் பயன்பெறுமே. 15

*352. வல்லை – வலிமையை. எல்லை – நேரத்தில். எடுத்து அம்பரத்தில். அம்பரம் – ஆகாயம். தொல்லை – பழமையான. எதிர்காலத்தில் அன்பர் தவம்பெறவே உவணன் வீசினான் என்பது முடிபு.*

*353. கவின் ஆர் – அழகிய. மடை – மதகு. ஏரை – எழிலை.*

*354. நனி – நன்றாக. ஐதீகம் உற – செவிவழிச்செய்தியாக நிலவி தொடர்ந்து நடைபெறும்படி.*

355. தீவர்த் தியைக்கொண் டந்நிலையைத்
தெரிதல் பந்தச் சேவைஎன்றும்,
ஆவற் பெருக்கில் நீராட்டும்
அதனைத் தண்ணீர்ச் சேவைஎன்றும்,
தாவற் புதவான் கனிகள்நிவே-
தனம்செய் திடலைக் கவளம் என்றும்
காவற் புவியோர் புரிந்தின்றும்
களிப்பார் தவம்மிக் கமைகின்றார். 16

356. "கொடியன் கருடன் எனவேகைக்
கொண்டான் அரங்கன்" எனில்,ஓதும்
படியன் றவன்சீர் அகங்காரம்
பதியா திருக்கின், முதிர்வேத
முடியன் தனைநம் காரைமடை
முறையிற் புகுந்து, நம்இதயக்
குடியன் னவன்கொண் டுருவம்எலாம்
கோயி லாகக் கூடுமோ? 17

357. "குற்றம் ஒன்று பெரியோர்தாம்
குயிற்றி னாலும், ஆங்கதனில்
உற்ற பலரும் இகபரச்சீர்
உதவும் மேலாம் உபகாரம்
பற்ற லாகும்" என்னமறை
பகர்ந்த மொழிக்குக் கருடன்உளம்
பெற்ற அகங்கா ரம்தான்ஓர்
பெரும்சான் றாகிப் பிறங்கிடுமால். 18

*355. தீவர்த்தி – தீப்பந்தம். பந்தசேவை, தண்ணீர்ச்சேவை, கவளம் என்பன இத்தலத்திற்கே உரிய விழா நிகழ்ச்சிகள். தாவு – முன்னால் நீட்டப் படுகின்ற. வான் – உயர்ந்த.*

*356. அரங்கன் கருடனைக் கொடியன் எனக் கருதவில்லை என்பது கருத்து. கொடியன் – கொடியில் இருப்பவன் எனத் தொனிப்பொருள். முறையில் – திருமால் அடியார்களாகிய தாசர்களின் ஒழுக்கத்துடன், இந்தத் தலத்திற்குரிய முறைப்படி. அன்னவன் நம் இதயம் குடிகொண்டு (நம்) உருவம் எலாம்.*

*357. குயிற்றினாலும் – செய்தாலும். பிறங்கிடும் – விளங்கும். ஆல் ஈற்றசை.*

358. பரிச வேதி யால்இரும்பும்
பைம்பொன் ஆகும் பரிசேபோல்,
சரிச மானம் அறும்கண்ணன்
தனதற் புதமார் திருமேனி
தரிச னம்செய் தமர்ந்துபெரும்
சமர்என் றோதும் மாதவச்சீர்
புரிசத் தியத்தால் கருடனுள்மெய்ப்
போதம் கலந்து கனிந்ததுவே. 19

359. "ஆவா! என்ன தகங்காரத்
தடிப்பால் ஏதிங் காற்றினேன்?
மூவா முதலை, என்அகம் தோய்
முகுந்தன் தன்னை, வான்இயலும்
தேவா தியர்க்கும் தேவான
செல்வப் பெருக்கை அறியாதே
தீவாய் நிரயத் தழுந்துசெயல்
செய்தேன் பாவச் செறிவேனே!" 20

360. என்னப் பலசொற் றிரங்கி,"யான்
எவ்வா றினிஎன் கண்ணன்அருள்
வன்னக் கமல முகம்காண
மனம்ஒப் புவன்"என் றயர்ந்திரங்கி,
அன்னக் கழனிக் காரைமடை -
யதில்ஓர் கணத்தில் அடைந்துடையான்-
றன்னற் புதத்தாள் மிசைவீழ்ந்து,
தளர்ந்து கனிவில் துதித்திட்டான். 21

*358. பரிசவேதி – தாழ்ந்த உலோகங்களைப் பொன்னாக்கும் ஒரு இரசவாத மருந்து. சரிசமானம் – நிகர், ஒருபொருட் பன்மொழி. சமர் என்று ஓதும் மாதவம் என்றது மற்போரே தவமாயிற்று என்னும் கருத்தில்.*

*359. ஆவா – ஐயோ, இரக்கக்குறிப்பு. என்னது அகங்கார. தடிப்பு – மிகுதி. ஏது இங்கு. மூவா முதலை – பரம்பொருளை. நிரயத்து – நரகத்தில். செறிவேன் – செறிவினை உடையேன், குறிப்புவினையாலணையும் பெயர்.*

*360. வன்னம் – நிறம். அன்னம் – நெல். கழனி – வயல். உடையான்தன் – தலைவனின்.*

361. அடியார் வருந்த உடன்வருந்தும்
அமலன் திருத்தாள் முன்வீழ்ந்து
முடியாத் துயர்கொண் டழும்கருடன்
முகம்நோக் குபுநின் செயல்அனைத்தும்
குடியா உன்னுள் கூடியான்
குயிற்றும் விளையாட் டே;பின்ஆம்
படியர் அடியார் கொண்டாடப்
பண்ணும் எனது திருக்கூத்தே. 22

362 "ஈது குறித்து நின்உள்ளத்து
இரங்கேல்; கருட! வாழி! உன்னுள்
ஏது குறித்துத் தூண்டியதென்று
இதயம் களித்தென் றன்உபய
போது குறித்துத் தவம்இயற்றிப்
புனித தீர்த்தம் அகழ்ந்தென்முடி
மீது குறித்துப் புவிஆற்ற
விரைவிற் புரிவாய்" எனவிடுத்தான். 23

363. செய்யும் செய்கை யாவையும் மெய்ச்
சிறப்பார் தவமாக் கொள்ளும்உள்ளம்
மெய்யுந் திய சீர்க் கருடன்அன்பு
மிகவே, அபிடே கம்புரிந்து,
பொய்யுந் தியபா தகம்அனைத்தும்
போக்கும் அரிக்குத் தன்னதுசெங்
கையுந் தியநற் பணியினுடன்
கடினதவமும் புரிந்திட்டான். 24

*361. நோக்குபு – பார்த்து. குடியா – அந்தர்யாமியாக. பின் ஆம் – பிற்காலத்தில் தோன்றப்போகின்ற. படிஆர் – நில உலகத்தைச் சேர்ந்த.*

*362. ஏது – காரணம். களித்து என்றன். உபய போது – இரு மலரடிகள். புவி ஆற்ற – உலக மக்கள் நீராட்ட.*

*363. பாதகம் – பாவம். தன்னது – தன்னுடைய. செங்கை உந்திய – கரங்களால் செய்யப்படுவதாகிய, கை என்றது உறுப்புக்கள் அனைத்திற்கும் உபலட்சணம்.*

364. அந்தக் கருட தீர்த்தத்தை
அன்பர் கொண்டே அரிக்குவகை
முந்தச் சொரிந்து, செந்தீயின்
முழங்கும் பந்தச் சேவைஎடுத்து,
உந்தத் தேனார் கனிதாசர்க்கு
ஊட்டி, மகிழும் பெருங்காட்சி
இந்தப் போதும் கண்டடைந்தார்க்கு
இன்பம் ஊட்டும் மகிமையதே. 25

365. காராய் அணவும் திருமேனி
கருத்தில் அமைத்துக் கசிந்துருகி,
நீராய் அணவும் கண்ணருவி
நிகழப் பிரபந் தாதிஅன்பிற்
பாரா யணம்செய் திடுவாரும்,
பசனைக் கருவி யுடன்பாடி
நாரா யணகோ விந்தஎன
நவிற்றும் ஓதை அண்டம்உறும். 26

366. புனித கருட தீர்த்தத்தில்
புக்கு முழ்கிப் பரவசராய்,
நனிஅங் கத்தில் துவாதசமாம்
நாமம் அணிந்து, நாவதினும்
இனிமை பொருந்த ஓதி,உளம்
என்பு கரைந்தா னந்தநடம்
கனிவில் புரியும் பாகவதர்
கணம்கண் விருந்தாம் காட்சியரோ. 27

*364. அரிக்கு உவகை. உந்து அ தேன் ஆர் – வடிகின்ற அந்தத் தேன் பொருந்திய. கனி – கவளம், (பேச்சுவழக்கில் கவாளம் என வழங்கப்படும்) வாழைப்பழம். தாசர் – பந்தசேவை செய்யும் வைணவ அடியார்கள். அடைந்து கண்டார்க்கு என மாறுக.*

*365. கார் ஆய் – மேகம் போல. அணவும் – பொருந்துகின்ற. பிரபந்தாதி – நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் முதலிய வைணவ நூல்களை. அண்டம் – ஆகாயம்.*

*366. அங்கத்தில் – உடலில். துவாதசம் ஆம் – பன்னிரண்டு ஆகிய. நாமம் – இரட்டுற மொழிதலாகத் திருமண்காப்பையும் திருப்பெயர்களையும் சுட்டுகிறது. ஒவ்வொரு பெயராகச் சொல்லி ஒவ்வொரு திருமண்காப்பை அணிதல் மரபு. கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விட்டுணு, மதுசூதனன், திரிவிக்ரமன், வாமனன், ஸ்ரீதரன், இருஷீகேசன், பத்மநாபன், தாமோதரன் என்பன பன்னிரு திருநாமங்கள் ஆகும். என்பு – எலும்பும், உள்ளமும் என்பும் கரைந்து ஆனந்த. பாகவதர்கணம் – திருமாலடியார் கூட்டம்.*

367\. பழிபட் டிடுவெம் பவம்அகலப்
பாற்றி, அன்பார் பாகவதர்
வழிபட் டிடச்செய் தீர்த்தம்உற
வயக்கும் மகிமைக் கருடாழ்வார்
வழிபட் டுயரும் திறம்உரைத்தாம்;
மாண்டவ் வியன்சா பம்தருமன்
அழிபட் டின்பம் அடைந்தநலம்
அதனில் சிறிதீண் டுரைத்திடுவாம். 28.

*கருடாழ்வார் பூசித்த படலம் முற்றிற்று.*

*367. வெம் பவம் – கொடிய பாவம். பாற்றி – நீக்கி. அன்பு ஆர். தீர்த்தம் – புனித நீர் நிலை. வயக்கும் – செய்யும். மாண்டவ்வியன் – ஒரு முனிவர். தருமன் – இயமன். அழிபட்டு இன்பம்.*

# *9. இயமன் வழிபடு படலம்*

*(கொச்சகக் கலிப்பா)*

368. வன்கழுவின் மிசைஅமையும் மாண்டவிய முனிவன்மிசை
நன்கமைமெய்க் கற்புடைய நளாயினிதன் நாயகனைப்
புன்கண்அற அமைத்தியங்கும் பொருவருவட் டிகைபடலும்
தன்கருத்தின் மிகவருந்திச் சாபம்உரைத் திடுகின்றான். 1

369. "இங்களவாப் பெருந்துயரம் எனக்களித்த கொடியவள்தான்
செங்கதிர்வா னவன்உதயம் செய்யும்அமை யம்களத்தின்
மங்கலியம் இழக்க"என வகுத்திடக் கேட் டலும்வருந்தி,
"மங்களம்மிக் கமைபரிதி வராதொழிக" எனஇசைத்தாள். 2

370. ஞாலவழக் கிசைதரவே நாள்கோள்கள் இசைதரும்ஓர்
காலவழக் கினைக்காட்டும் கதிர்வரவெய் தாமையினால்
தூலவழக் கிசைமனிதர் சுரர்முதலா யினர் தாமும்
சாலவழக் கம்பழக்கம் தவிர்ந்துளச்சஞ் சலம்மிகுந்தார். 3

371. அக்காலை பிரமன்முத லாம்அமரர் நளாயினியாம்
மிக்காள்பால் வந்து,மிக வேண்டலும்,மற் றவள்வணங்கி,
"இக்காலை இனன்உதிக்கில் என்உயிர்நா யகன்முனிஆம்
தக்கான்சொல் சாபத்தால் தான்மரணம் அடைவானால்; 4

*368. கழுவின்மிசை – கழுமரத்தில். நளாயினி தன்நாயகனை. புன்கண் அற – (நோயின்) வருத்தம் நீங்கும்படி. அமைத்து இயங்கும் – அமர்த்தி நடமாடும். பொருஅரு – இணையற்ற, நளாயினியின் கற்பின்பெருமை வட்டிலின்மேல் ஏற்றப்பட்டது. வட்டிகை – கூடை. முனிவன்மிசை வட்டிகை படலும் வருந்திச் சாபம் உரைத்திடுகின்றான் என்பது பொருள் முடிபு.*

*369. இங்கு. அளவா – அளவற்ற. அமையம் – நேரத்தில். களத்தின் – கழுத்தில் உள்ள. மங்களம் – நன்மை. பரிதி – சூரியன்.*

*370. ஞால வழக்கு – உலகியல் நடைமுறை. நாள்கோள்கள் – நட்சத்திரங்களும் கிரகங்களும். காலவழக்கு – நேரக் கணிப்பின் ஒழுங்குமுறை. கதிர் – சூரியன். தூல வழக்கு – பரு உடலின் பழக்கவழக்கங்கள். இசை – பொருந்திய. சால – மிகுதியாக.*

*371 அக்காலை – அப்போது. அமரர் – தேவர். மிக்காள்பால் – கற்பில் சிறந்தவளிடத்து. மற்றுமொழி மாற்று. அவள் என்றது நளாயனியை. இனன் – சூரியன். முனிஆம் தக்கான் – மாண்டவிய முனிவர் ஆகிய தகுதிவாய்ந்தவர். நாயகன்தான் மரணம் அடைவான் என இயையும். ஆல் ஈற்றசை.*

372. "பரிகாரம் அதற்கமையப் பண்ணுதிரேல் உம்உளம்தோய்
விரிவாரும் சங்கற்ப விதம்இசைப்பேன்" என,இமையோர்
அரிதான மாதவமாண் டவியரிடம் அடைந்து,கழுப்
பரிவார்துன் பகற்ற,அயன் பாதமலர் களைப்பணிந்தான். 5

373. வணங்கியமாண் டவியமுனி மனம்களிக்கும் படிபிரமன்
இணங்கியஆ சிகள்கூறி, இரும்தவத்தின் மெஞ்ஞான
மணங்கமழ்உன் றனைப்போல்வார் மற்றுலகத் துளரோ?சற்
குணங்கலந்தாய்! காலம்இன்றேல் குவலயம்பாழ் ஆகாதோ? 6

374. "காலமது செங்கதிரின் கணக்கின்றேல் எவ்வாறு
சீலமுறும்? ஆங்கதனால் சீவர்கள்இன் புறுமாறு
சாலஅருள் புரிதி"எனத் தவமலிமாண் டவியமுனி
கோலமலி நளாயினிதன் குளிர்முகம்பார்த் திசைக்கின்றான். 7

375. "கற்புருவாம் உன்னதுசெங் கமலமலர் புரைகரம்தோய்
பொற்புறுவட் டிகைதாக்கும் புண்ணியம்தான் யான்இயற்றும்
வெற்புறழ்பா வம்கழற்றி வேதன்முதல் தேவர்எலாம்
முற்புகும்பே றிசைத்தெனக்கு முதிர்நலம்ஈந் ததுமன்னோ. 8

376. "ஆதலின்நீ சுமங்கலியாய் அவனிவிண்பா தலம்புகழும்
மேதகைய கற்பினுடன் விளங்கிமிக வாழ்தி"என,
மாதவன்ஓ தலும்,"பரிதி வருக"என ஓதுதலும்.
மாதவிசத் தியக்கற்பின் மாட்சிஎன விளங்கியதே. 9

*372. பரிகாரம் – மாற்று. விரிவு ஆரும் – விஸ்தாரமான. சங்கற்ப விதம் – விருப்ப வகை. கழு பரி – கழுவால் சுமக்கப்படுகின்ற, தொங்குகின்ற என்பது கருத்து, பரி முதனிலைத் தொழிற்பெயர். செயப்பாட்டு வினையாக ஆட்சி. வார் – (கால அளவில்) நீண்ட. (நளாயினி) இசைப்பேன் என, இமையோர் அடைந்து அகற்ற, (முனிவன்) அயன் பாதம் பணிந்தான் என்பது முடிபு.*

*373. இரும் – பெருமைமிக்க. குவலயம் என்றது உலக வாழ்வியல் நெறிமுறைகளை.*

*374. காலமது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. சால – மிகுதியாக கோலம்மலி – அழகிய.*

*375. புரை – போன்ற, உவம உருபு. பொற்பு உறு – பெருமை மிக்க. வெற்பு உறழ் – மலையைப் போன்ற. பேறு இசைத்து எனக்கு. மன்ஓ அசைகள்.*

*376. அவனி – நிலஉலகம். மாதவன் – மாண்டவியன். மாதவி – மல்லிகைக் கொடியைப் போன்ற நளாயினியின், உவம ஆகுபெயர்.*

377. மாண்டவிய மாதவனை, மவுக்கலியப் பேர்த்தவனை,
நீண்டவியன் மாதவியை நெஞ்சுவகை மிகவாழ்த்திக்
கூண்டமையும் தேவருடன் கோகனத மலர்ப்பிரமன்
மீண்டணிச்சத் தியஉலகம் மேவிஉவ கையின்இருந்தான். 10

378. தவம்பொலியும் மாண்டவியன் தன்னதுமுற் பிறப்பமைந்த
அவம்பொலிதீ வினைப்பயனை அகத்துணர்ந்து சமன்உலகம்
நவம்பொலியச் சென்றியமன் நனிவாழ்த்த இருந்தனன், "என்
பவம்பொலிதீ திசைத்தி"எனப் பகருவன்சித் திரகுத்தன் 11

379. "ஒன்பதெனும் பருவத்தில் உன்னதுமுற் பிறவியிடை
துன்பம்உற ஊசிநுனி தோயஎறும் பினைஏற்றி
வன்பமைநுண் மணலினிடை வைத்தபெருந் தோடத்தால்
அன்பமைஇப் பிறவியில்நீ அருந்தவம்செய் துறும்இடத்தே, 12

380. "காவலன்றன் அரண்மனையில் கள்ளமிடும் கரவடர்கள்
ஆவலுடன் கொணர்நிதியம் அத்தனையும் பயத்துடன்நீ
மேவலுறும் வயின்அமைத்து விரைந்தகன்றார்; பண்டாரம்
காவல்புரி வார்அவர்தம் காற்சுவட்டின் வழிதொடர்ந்தார்; 13

381. "உற்றநிதித் திரளுடனே உன்னையும்கொண் டேகினராய்க்
கொற்றவன்பால் விட,அவன்உட் கூர்ந்துவிசா ரித்திடுங்கால்
முற்றருதீ வினைவழி,வாய் மொழிஇன்றி வறிதமைந்தாய்
மற்றவன்நூல் வழிமுறையால் வன்கழுவின் மிசைஉய்த்தான்." 14

*377. வியன் – பெருமையை உடைய. நெஞ்சு உவகை. கூண்டு – கூட்டம் கோகனதம் – தாமரை. மீண்டு. அணி – அழகிய.*

*378. அவம் பொலி – தீமை மிக்க. அகத்து – உள்ளத்தில். சமன் உலகம் – இயமனின் உலகம். இருந்தனன் – இருந்து, வினையெச்சம். பவம் பொலி – இப்பிறவியில் நேர்ந்த. தீது.இசைத்தி – கூறுக. மாண்டவியன் உணர்ந்து, சென்று, இருந்து "இசைத்தி" எனச் சித்திர குத்தன் பகருவன் என்பது முடிவு.*

*379. பருவத்தில் – வயதில். வன்பு அமை – வலுக்கட்டாயமான, இது தோடத்திற்கு அடை. தோடம் – குற்றம்.*

*380. காவலன் – அரசன். கரவடர்கள் – திருடர்கள். வயின் – இடத்தில். பண்டாரம் – கருவூலம்.*

*381. நிதித்திரள் – பொருட்குவியல். கொற்றவன்பால் – அரசனிடம். தீவினைவழி – பாவத்தால். வறிது – சும்மா. நூல் – சட்டம்.*

382. என்றுயர்சித் திரகுத்தன் இயம்பிடலும், மாண்டவியன்
முன்றுதையும் இயமனது முகம்நோக்கி, "செயல்இதென்பால்
ஒன்றுதற்கு முறைஉ ளதோ? உறுபன்னீ ராண்டுவரை
துன்றுசெயல் ஈன்றார்பால் தோயும்எனும் மறையினமே. 15

383. "அற்றாக நீஎனக்கீண் டமைத்திடும்ஓர் தோடத்தால்
பற்றாகும் தரணியில்ஓர் பணிபுரிசே டியின்மகவென்று
உற்றாகும் நலம்பெறுக" என் றுரைத்தகன்றான்;அவ்வாற்றால்
பெற்றான்நல் விதுரன்எனப் பேசவியன் உலகிடத்தே. 16

384. அவ்விவரம் பாரதத்தில் அருள்நிறைசீர் வியாசமுனி
திவ்வியம்மிக் கிசைத்துள்ளான்; தீர்த்தயாத் திரைஉற்றான்
செவ்வியமெய்த் தலம்பலவும் தெரிசித்துச் சிற்றிமயம்
ஒவ்வியசீர்க் காரைவனத் துற்றரங்கன் அடிபோற்றி, 17

385. தன்னதுமுற் பவஉ ண்மை தான்உ ணர்ந்தோர் தீர்த்தம்அகழ்ந்து
இன்னல்அற நீராடி, இறைவன்முடி மீதாட்டிப்
பன்னரிய பேரன்பில்ப் பற்பலநாள் பூசைபுரிந்து
உன்னல்அரும் தவம்பல்லாண் டுஞற்றிஅவண் வதிந்தானால். 18

386 குணமிசைபன் னிரண்டெழுத்தில் குலவியமந் திரம்இதயம்
தணவறவே கணியாது தான்கணித்துச் சகத்திரம்ஆர்
பணஅரவில் துயில்புரியும் பகவன்இரு பாதம்எனும்
மணமலர்கண் ணகம்அகலா மகிமைபொலிந் திடும்விதுரன் 19

*382. முன்துதையும் – எதிரில் உள்ள. ஈன்றார்பால் – பெற்றோர்களிடத்து, பன்னிரண்டு வயது வரை உள்ள குழந்தைகள் செய்யும் பாவம் தாய் தந்தையர்களைச் சாரும் என்பது சாத்திரம்.*

*383. அற்றாக – அப்படி இருக்கையில். எனக்கு ஈண்டு அமைத்திடும். தோடத்தால் – குற்றத்தால். பற்று ஆகம் – ஆசைகளுக்கு இடம் ஆகிய. தரணியில் – உலகத்தில். சேடி – பணிப்பெண். உற்று – பிறந்து. வியன் – பெரிய.*

*384. திவ்வியம் – தெய்வீகம், இனிமை எனினும் ஆம். உற்றான் – (யாத்திரை) செய்தவனாகிய விதுரன், வினையாலணையும் பெயர். ஒவ்விய – நிகர்த்த.*

*385. முற்பவ – முன்பிறவியின். உணர்ந்து ஓர். ஆட்டி – அபிடேகித்து. பன்னரிய – சொல்வதற்கரியதான. உன்னல்அரும் – நினைப்பதற்கும் அரிய, உம்மை விரிக்க.*

*386. ஓம் நமோ பகவதே வாசுதேவாய என்பது மந்திரம். கணியாது கணித்து – அஜபா ஜபம் என்பர். விரிவான நூல்களில் விளக்கம் காண்க. சகத்திரம் – ஆயிரம். பண – படங்களை உடைய.*

387. ஆற்றுதவ நிலையினைக்கண் டதிசயம்மிக் கமரர்எலாம்
போற்றுறுசெய் கையர்ஆனார்; புனிதஅருள் அரங்கேசன்
ஊற்றுறழும் கருணைமிகுந் துவணமிசை இருதாயர்
பாற்றுதையும் பெருஞ்சோதிப் படிவம்இசைந் தெதிர்நின்றான். 20

388. மாதவம்தோய் தரும்விதுரன் மலர்விழியின் அகம்புறத்தும்
போதபர மானந்தப் புதுவிருந்தூட் டிடும்ஞான
ஆதவனைக் காண்டலுமே அரும்தவமாம் துயில்விடுத்துப்
பூதவுடல் அறியாமெய்ப் பூரணஇன் புருஆனான். 21

389. “புண்விருந்தாய் இழிமாயப் போகபோக் கியத்தழுந்தி,
மண்விருந்தாம் அடியேனை மாதவவாழ் வினில்புகுத்தி
விண்விருந்தாம் படிபுரிஉன் மெஞ்ஞானப் பெருங்காட்சி
கண்விருந்தாக் கியஉனக்கென் கைமாறு புரிவேனோ? 22

390. “மாண்டவியப் பெயர்முனிவன் வன்சாபம் உற்றாருள்
கூண்டவியப் புரியாதுன் கோலாக லச்சிறப்பு
நீண்டவியப் பார்சேவை நேர்காண நல்கினையால்;
ஈண்டவியப் புலக்கூட்டால் எய்துபயன் பெற்றிடவே. 23

*387. ஊற்று உறழும். உவணமிசை – கருடனின்மேல். பால் – (இரு) பக்கத்திலும். படிவம் – உருவம். இசைந்து – பொருந்தி.*

*388. போத – மனநிறைவளிக்கின்ற. பரம – மிக மேலான. பூத உடல் – ஐம்பூதங்களாலான சரீரம்.*

*389. புண் – மாமிசம், ஆகுபெயராக உடலை உணர்த்திற்று. போக போக்கியம் – (ஐம்புலன்களால்) நுகர்தற்குரிய பொருள்கள், விஷயங்கள் என்பர். மண்விருந்து ஆம் – நிலத்தில் புதையுண்ணப் போகும் என்பது கருத்து. புரி – செய்கின்ற, பெயரெச்சம் காட்சியைக் கொண்டு முடிந்தது.*

*390. உற்றாருள் கூண்டு – பெற்றவர்களோடு கூடி. அவிய – வீணாக. வியப்பு ஆர். ஆல் – அசை. ஈண்ட – ஒன்றாகக் கூடிய. விய – உடம்பு ஆகிய. புலக் கூட்டால் – புலன்களின் சேர்க்கையால். இப்பாடலில் திரிபு என்னும் சொல்லணி பயின்றது.*

391. "தூண்டுசுடர் அனையஅருட் சோதிமயப் பேரின்பம்
கூண்டுளநின் சேவைகண்டுள் குளிர்ந்துவகை பெறும்அடியேன்
வேண்டுபொருள் இன்றெனினும், வித்தக!நின் பால்என்றும்
நீண்டுளமெய்ப் பத்திமிக நிறைவமைய வேண்டுவனே. 24

392. "அடியேன்நான் தொட்டுநினக் கபிடேகம் புரிதீர்த்தம்
படியேறும் மாந்தர்அன்பிற் படிந்தேநின் படிவத்தின்
முடியேறும் படிபுரியின் மூவேழ்சுற் றமும்நின்பால்
குடியேறும் படிவரம்நீ கொடுத்தருள வேண்டுவனே." 25

393. என்றகத்தன் பால்இரக்கும் இணையில்வித ரன்றனக்கு
நன்றகத்தார் வத்தினுடன் நல்கினம்என் றிசைத்தருளி,
மின்றகத்தாங் கியதன்அருள் மேனிமறைத் தனன்;விதுரன்
துன்றகத்தார் வத்தின்மிகத் துதித்துவணங் கினன்மாதோ. 26

394. "அதுலநலம் பொலிநைமி சாரணிய முனிவீர்காள்!
விதுரன்வழி படும்சீர்த்தி விளம்பினேன் இக்காரைப்
பொதுளிடைகா ராம்பசுபால் பொழிதரத்தொட் டியன்கண்ட
புதுமைஉணர் குதிர்"என்னப் புகலுவன்மா தவச்சூதன். 27

*இயமன் வழிபடுபடலம் முற்றிற்று.*

*391. உள் குளிர்ந்து உவகை. வேண்டுபொருள் இன்று — வேறு யாசிக்கத்தக்கது எதுவும் இல்லை.*

*392. படி ஏறும் — உலகில் பிறந்துள்ள. படிவம் — உருவத் திருமேனி. முடி ஏறும்படிபுரியின் — அபிடேகித்தால். மூஏழ்சுற்றம் — தன் தந்தை, தாய், மனைவி அல்லது கணவன் ஏகிய மூன்று வர்க்கத்தில் ஏழு தலைமுறை முன்னோர்.*

*393. என்று அகத்து அன்பால். நன்று அகத்து. மின்தக — மின்னலைப் போல ஒளிவீசும்படி. துன்று அகத்து. துன்று — பொருந்திய.*

*394. அதுல — இணையற்ற. பொதுளிடை — காட்டில். காரைப்பொதுள் — காரைமடை.*

# 10. தொட்டியன்பூசித்த படலம்

(அறுசீர் விருத்தம்)

395. கதிர்விரி தரளப் பந்திக்
கவின்நிறை முறுவற் செவ்வாய்
முதிரணி அரம்பை மாதர்
முருகுகொப் பளிக்கும் பூந்தார்
பொதிதரும் மார்பிற் காமர்ப்
பூண்இனம் பிறங்கச் செய்யும்
சதிவழி விழிஆம் ஆடற்
சம்பிர மம்சேர் காட்சி 1

396. கண்டனன் இந்தி ரன்தான்
கவிழ்மதோன் மத்தப் பான்மை
கொண்டனன் இருந்த காலை
குளிர்தவச் சனக ராதி
ஒண்தவர் வந்தார்; நின்றார்;
ஒன்றும்ஓ திலன்வ லாரி;
விண்டதோர் வேழம் உண்ட
விளங்கனித் தன்மை உற்றான்.

397. நீட்டித்து நின்றார் தம்முள்
நெடியவன் திருவ ருட்சீர்
ஆட்டிற்றிவ் வண்ண மாக
"அரியகற் பகம்தான் முள்ச்சார்
காட்டில்த்தோய்ந் தாரு ஆக;
காமதே னுவும்பார் மீதே
மாட்டில்த்தோ திடுக; நீயும்
மானுடன் ஆகு கென்றார். 3

*395. கதிர்விரி – ஒளிவீசுகின்ற. தரளப்பந்தி – முத்துவரிசையின். முதிர் அணி – முழுமைபெற்ற அழகு. முருகு – தேன். சதி – ஜதி, நாட்டியத்திற்குரிய தாளச் சொற்கட்டு. சம்பிரமம் – நிறைவு.*

*393. மதோன்மத்தம் – மத உன்மத்தம், குணசந்தி, அதிகமான மகிழ்ச்சியால் உண்டாகும் அகந்தை கலந்த மனநிலை. கொண்டனன் – கொண்டு, வினையெச்சம். வலாரி – வலாசுரனின் பகைவன் ஆகிய இந்திரன்.*

*397. நின்றார்தம்முன் – காத்திருந்தவராகிய சனகாதியரின் மனத்தில். ஆட்டிற்று – இயக்கியது. தாரு – மரம். நீ என்றது இந்திரனை.*

398. மாதவர் சாபம் கேட்ட
வாசவன் மனம்க லங்கிப்
பாதவா ரிசங்கள் போற்றிப்
பணிவுடன் ஓது கின்றான்
“மேதகை யுடையீர்! நும்மை
வேண்டி,வந் தனைசெய் யாத
பாதகப் பண்பால் சாபப்
பரிசுபெற் றிட்டேன் மன்னோ; 4

399. “பரிந்துவந் தனைசெய் தேத்தும்
பண்பிது மேன்மை சால
விரிந்தமெய்ப் பயன்நல் காது
விடுங்கொலோ?” என்று வேண்டல்
புரிந்திடு காலை தம்ஓர்
புந்தியில் உவப்பு வர்ப்புத்
தெரிந்திலார் அவன்மெய்ப் பண்பு
சேர்தரச் செப்பு கின்றார் 5

400. “கற்பகம் காரை ஆகும்;
காமதே னுத்தான் சாலப்
பொற்பமை தவம்ஆர் காராம்
பசுஎனப் பொலிவ தாகும்;
முற்படு நீயோ தொட்டி
யக்குல முதிர்சேய் ஆகி,
நற்பயன் அரங்க நாதன்
நல்கிட உய்கு வீரால்” 6

*398. வாசவன் – இந்திரன். பாத வாரிசங்கள் – திருவடித்தாமரைகள்.*

*399. ஓர் – ஒப்பற்ற. புந்தியில் – இங்கு உள்ளத்தில். உவப்பு உவர்ப்பு – விருப்பு வெறுப்பு, வேண்டுதல் வேண்டாமை. தெரிந்திலார் – கொள்ளாதவர்களாகிய சனகாதியர், வினையாலணையும்பெயர்.*

*400. கற்பகம் – கற்பகமரம். முதிர்சேய் – நற்பண்புகள் கனிந்த குழந்தை. உய்குவிர் – (கற்பகம் காமதேனு நீ ஆகிய மூவரும்) உய்வடைவீர்கள். ஆல் அசை.*

401. என்றவர் இசைத்துப் போந்தார்;
இந்திரன் தன்னால் முன்னாள்
நன்றமை சமிவ னப்பேர்
நயந்தஆ ரணியம் இந்நாள்
மன்றல்மிக் கமையும் காரை
வனம்எனப் பொலிதல் ஆகும்;
ஒன்றலாம் செயல்எ னக்கும்
உலகுக்கும் நலம்என் றுன்னி, 7

402. ஆங்கவர் இசைத்த வாறே,
அணிமிகும் கொங்கு நாட்டின்
பாங்கர்சிற் றிமயத் தின்தென்
பாரிசத் திசைவெள் ளாதி
ஆங்கவின் பதியில் சீர்த்தி
அமைந்ததொட் டியன்த வத்தின்
ஓங்கணிப் பாலன் ஆகும்
உருவுகொண் டனன்வ ளர்ந்தான். 8

403. வாலிபப் பருவத் தாடு
மாடுபா லித்து வந்தான்;
மேலியல் நாளில் அன்னோன்
மேய்த்திடும் பசுக்கு லத்தின்
பாலியல் தவம்தோய் காராம்
பசுஒன்று கருணை நீடும்
மாலியல் முடியின் மேற்பால்
மஞ்சனம் செய்த தம்மா. 9

*401. என்றவர் – எனக் கூறிய சனகாதியர். ஆரணியம் – காடு. ஒன்றல் ஆம் – (அத்தலத்தைச்) சென்று அடைகின்ற. உன்னி – நினைத்து*

*402. பாரிசத்து – பக்கத்தில். இசை – பொருந்தி உள்ள, புகழ்பெற்ற எனினும் ஆம். ஆம்கவின்பதி – ஆகிய அழகிய ஊர். ஓங்கு அணி – உயர்ந்த அழகு. கொண்டனன் – கொண்டு, முற்றெச்சம்.*

*403. பருவத்து. மேல் இயல் நாளில் – அப்படிநடந்த காலத்தில். மால் இயல்முடியின் மேல் – திருமாலின் தலைமீது. மஞ்சனம் – அபிடேகம்.*

404. ஆனிவண் அகத்தாம் அன்பால்
அநுதினம் அரங்க நாதன்
மேனிமேல் அபிடே கித்து
மென்தட முலைகள் - அம்மா!-
மானிடர்க் கென்று பேச்சுப்
படில்வாழ்கில் லேன்கண் டாய்"என்
ஆனிஇல் ஆண்டா ளின்வாய்
அருள்மொழி போன்றாக் கிற்றால். 10

405. தினம்தொறும் பால்இன் றாகும்
செய்திதேர் தொட்டி யன்தன்
மனம்கொள்சந் தேகம் ஆகி
வனத்திடை மறைந்து நின்றான்;
கனம்கொள்கா ராம்ப சுப்பால்
கனிவுடன் சொரிதல் கண்டே
இனம்பெறு புதரை வாள்கொண்டு
எறிந்தனன் விரைந்து மாதோ. 11

406. வெட்டிய வெட்ட ரங்கன்
மேனிமேல் பட்டு வல்லே
கொட்டிய திரத்தம்; கண்டான்
குலைந்துளம் மயங்கி வீழ்ந்தான்;
தொட்டியன் நிலைகண் டுள்ளம்
தோய்திரு வருளால் அன்னான்
திட்டிநேர் காட்சி நல்கிச்
செகமயக் ககல மாற்றி, 12

*404. ஆன் – பசு. இவண் – இங்கு. "ஊனிடை ஆழி சங்கு உத்தமற்கு என்று உன்னித்து எழுந்த என் தடமுலைகள் மானிடவர்க்கு என்று பேச்சுப்படில் வாழகில்லேன் கண்டாய் மன்மதனே" (நாச்சியார் திருமொழி 1–5) ஆனி இல் – அழிவற்ற.*

*405. சந்தேகன் – ஐயம்கொண்டவன். கனம் – பெருமை.*

*406. வெட்டு அரங்கன். வல்லே – விரைவாக. கொட்டியது இரத்தம். அன்னான் – தொட்டியன். திட்டி – திருஷ்டி, கண். செக மயக்கு அகல – உலக மாயை நீங்க. மாற்றி – ஒழித்து.*

407. பூருவத் தியல்விர்த் தாந்தம்
புலப்படுத் திடலும், தன்னோர்
ஊருடன் பிறந்தார் பெற்றார்
உற்றவர் மற்றோர் என்னத்
தேருளத் திகைப்பு நீங்கிச்
சீதரன் கருணைப் பண்பின்
நீருளத் துன்னி யுன்னி
நெஞ்சம் கனிந்தா னாகி. 13

(வெண்டளைக் கலிப்பா)

408. "வான்மாட் டிசைந்தரம்பை மாதர்நடம் கண்டுளத்தின்
மான்மாட் டிசைந்தருளார் மாதவர்சா பத்தின்நர
ஊன்மாட் டிசைந்தோர் உணர்விலனாய் உற்ற இரு
கான்மாட் டிசைந்தேற்குக் கண்ணளித்த புண்ணியனே! 14

409. "சீதேவி யோடு திருந்தியற்பூ தேவிஎனும்
மாதே வியர்நடுத்தோய் மாணிக்க மேனியில்என்
கோதே வியவாட் குறிஇரத்தம் சிந்தவைத்த
மூதேவி யேன்இருகண் முன்காண வந்தனையே! 15

410. "முன்னாள்என் பூசை முறைகண்ட பேர்அருளால்
இந்நாளும் என்னைவலிந் தீர்த்தாண் டருள்செய்தாய்;
பொன்நா யகனே!மென்பூவைநிறத் தாய்! உன்உளத்து
என்னாம் அடியன்மிசை ஏற்றஅரு ளின்பெருக்கே! 16

*407. பூருவத்து இயல் – முன்பு நிகழ்ந்த விர்த்தாந்தம் – வரலாறு. தன்னோர் – தன் இனத்தவர், ஊர் – ஊரார், ஆகுபெயர். தேர் – கருதுகின்ற. நீர் – தன்மை.*

*408. இசைந்து, கண்டு, இசைந்து, இசைந்து, உணர்விலனாய் இசைந்தேற்குக் கண் அளித்த புண்ணியனே என்பது முடிபு. போற்றி அவாய்நிலை. உளத்தின் மால்மாட்டு இசைந்து – மனத்தில் பல ஆசைகளால் கட்டுப்பட்டு, நர ஊன் – மானிட உடல் கால் மாட்டு – திருவடிகளில் சொல்பொருள் பின்வரு நிலை அணி.*

*409. திருந்து இயல் – திருத்தமான எழிலைப்பெற்ற. மாதேவியர் – சிறப்பமைந்த நாயகியர். மாணிக்கம் – இங்கு நீலமணி. கோது ஏவிய – குற்றத்தால் வீசப்பட்ட. வாள் குறி. மூதேவியேன் – முகடியன் ஆகிய என்னுடைய. ஏகாரம் வியப்பிடைச் சொல்.*

*410. ஈர்த்து – இழுத்து. பொன் – திருமகள். பூவை – காயாமலர். என் ஆம் – எத்தகையது, மிகப்பெரியது என்பது கருத்து, வினா வியப்புப் பொருளில் வந்தது.*

411. "தாபதரை முன்வந் தனம்புரிந்தே னாயின்அவர்
சாபம்இடு வாரோ?அத் தன்மைகண்டு போற்றுதலும்,
"நீபதறேல்" என்று,நிறை அருள்இன் பீதலினால்
ஆ!பகவ! நின்பேர் அருட்சிறப்பிங் குற்றேனே. 17

412. "சீராம் பணிக்காம தேனுஉயர் வான்அகன்று,
பாராம் பசுவர்க்கப் பால்இசைந்து, மேல்இசைந்த
காராம் பசுவாய்க் கடவுள்நின்மேல் பால்சொரிந்து,
நீராம் பசுஞானம் நீத்த உணர்வாய்த்தால். 18

413. "கற்பகம்தான் விண்ணோர் கனதவம்உற் றோர்தம்விழி
முற்படும்என் றோதும் முறைஅற் றுலகினிடை
உற்பவம்ஆ னோரும் உணர்ந்தேத்த நின்முடிதோய்
நற்பயனும் முற்றுயரும் ஞானவடி வாயிற்றால். 19

414. "புண்ணியத்தாம் போகம் பொருந்தும்அம ராவதியாம்
கண்ணியம்தோய் துன்பமயக் கண்ணியில்வீழ்ந் தாழ்வேனைத்
திண்ணியம்சால் மாதவமெய்ச் சீர்த்திஅளித் துன்னடிக்காள்
பண்ணியநின் பேர்அருளின் பண்பிருந்த வண்ணம்என்னே!

415. "உண்ணாட்டும் தொண்டர் உளக்கமலம் அன்றிஅவர்
கண்ணாட்டம் உற்றஅருட் காரைவனத் தம்மானே1
விண்ணாட்டுள் அன்றிஎன்றன் மெய்த்தவத்தின் சீர்த்திஇந்த
மண்ணாட்டும் நாட்டினையே! வாழியநின் பேர்அருளே"! 21

*411. தாபதரை – (சனகாதி) முனிவர்களை. புரிந்தேனாயின் – செய்திருந்தால். ஆ வியப்பிடைச் சொல். பகவ – பகவானே. சிறப்பு இங்கு. உற்றேன். ஏ அசை.*

*412. சீர் ஆம். பணி – தொண்டு. வான் – சுவர்க்கம். பார் ஆம் – உலகின். பசு ஞானம் – நான் உயிர் என்னும் அறிவு, உயிர்வர்க்கத்திற்குரிய உலகியல் அறிவு. உணர்வு ஆய்த்து. ஆல் அசை.*

*413. உற்பவம் – பிறப்பு. வடிவு ஆயிற்று. ஆல் அசை.*

*414. புண்ணியத்து ஆம் – நல்வினைகளின் பயனாகக் கிடைக்கின்ற. கண்ணியில் – சங்கிலியில், நல்வினையும் விலங்கே என்பது சாத்திரம். ஆழ்வேனை – அமிழ்கின்ற அடியேனை. திண்ணியம்சால் – வலிமை மிக்க. அளித்துஉன் அடிக்கு ஆள்.*

*415. உள்நாட்டும் – தியானத்தில் மனத்தில் நிலைநிறுத்திக்கொள்ளும். கண்ணாட்டம் – விழிகளைப் போல, பேச்சு வழக்கு. மண்நாட்டும் என்புழி உம்மை இழிவு சிறப்பு.*

416. என்றுபல வாத்துதித்திட் டிந்திரன்ஆம் தொட்டியன்தான்
துன்றும் உலகமயல் சுற்றம் துறந்தோனாய்
நன்றுபொலி காரைவன நாதன்அடித் தாமரையே
ஒன்றுளம்மேற் கண்டுளமற் றொன்றுணரான் ஆயினான்.

417. ஆலயம்ஒன் றுண்டாக்கி, ஆங்கதனில் பற்பலநாள்
சீலம் மலியும் திருவிழாக் கொண்டாடிச்
சால மகிழ்ந்தரங்க நாதன்விடை தந்தருள
மேலமையும் தண்பதியின் மேவினான் இந்திரனே. 23

418. தொட்டியனாம் இந்திரன்கை தோயும் வடிவாளால்
வெட்டிய வெட்டரங்கன் மெய்அர்ச்சை ஆம்வடிவில்
எட்டியபேர் காண இரண்டங் குலவடிவாய்
ஒட்டியமெய்ச் சத்தியப்பண் போதிமிளிர் கின்றதுவே. 24

419. ஓங்கும் புகழ்மதுரை உற்ற திருமலைப்பேர்
தாங்கும் புரவலன்சீர் சான்றடணாய்க் கன்கோட்டைப்
பாங்குந்து கால்தன் படிவில்இரா சப்பிளவைத்
தீங்குந்து வெம்பிணியால் சிந்தைதளர்ந் துற்றானால் 25

*416. ஒன்று உளம் – பதிந்த உள்ளம். உளமற்று ஒன்று – மற்றுள ஒன்றும் என்க, வேறு உள எந்தப் பொருளையும், முற்றும்மை விரிக்க.*

*417. மேல் அமையும் – வானுலகில் உள்ள. பதி – நகரம், அமராவதி.*

*418. கை தோயும் – கையில் உள்ள. வெட்டு அரங்கன். அர்ச்சை வடிவு ஆம் மெய்யில் என மாறுக, வைணவ சமயத்தின்படித் திருமாலுக்கு ஐவகை நிலைகள் உண்டு. அவை பரத்துவம் வியூகம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சை எனப்படும், அர்ச்சையாவது விக்கிரகத் திருமேனிகளில் எழுந்தருளியிருத்தல். வெட்டு வடிவு ஆய்பண்பு ஓதி வடிவில் மிளிர்கின்றது என்பது முடிபு.*

*419. புரவலன் – அரசன், அவர் திருமலை நாயக்கர். (கி. பி. 1623 – 1659) இவர் காலத்தில் டணாய்க்கன் கோட்டையில் உள்ள கோட்டை பழுதுபார்க்கப்பட்டது வரலாற்றுச் செய்தி. (கொங்கு நாட்டு வரலாறு – கோவை கிழார் பக். 129) பாங்கு – பக்கத்தில். உந்துகால் – செல்லும்போது என்பது கருத்து, ஊர்தியைச் செலுத்தும்போது என்பது சொற்பொருள். படிவு இல் – குறையாத, அடங்காத. இராசப்பிளவை – முதுகில் தோன்றும் கொடிய சிலந்தி நோய். தீங்கு உந்து – கொடுமை செய்யும்.*

420. வேண்டும் பரிகாரம் மிக்கறிபு ணத்தகைமை
தீண்டும் மருத்துவரால் செய்தொறும்மேன் மேலாகத்
தாண்டும் தன்மையினால் சங்கடம்மிக் குற்றுளத்தில்
நீண்டுந்தும் அன்பால் நெடுமாலைச் சிந்தித்தான். 26

421. அக்காலை தன்னில் அணிஅரங்கன் பேர்அருளால்
மைக்கார்தோய் காரைவன மான்மியம்அன் னோன்காண
மெய்க்காட்சி நல்கி,"உயர் விண்கற் பகமான
மிக்காம் இலையால் விலகும்"என விண்டனனே. 27

422. சொப்பனத்தில் காட்டிடும்ஓர் தூயஅருள் ஆட்சிநிலை
அப்பன் அகக்கருணை ஆர்ந்த செயல்நாடி
வெப்பம்மலி தீப்பிணிதான் வேரற் றொழிந்தான்போல்
எய்ப்பறுபே ரானந்தம் எய்திக் குளிர்ந்தானே. 28

423. விரிசனனம் போக்கி,இன்ப வீட்டைஅளித் தாளும்
கரிசனம்மிக் கோங்கும்அருட் காரைவனத் தையன்
தரிசனம்தந் தோதும் சரதம்முற்றும் தன்மெய்ப்
பரிசனர்கட் கின்பம் பலிப்பஉரைத் திட்டானே. 29

424. மைகண்ட மேனி வரதன் அருள்மொழியின்
மெய்கண் டுவந்து, விரைந்துபோய்க் கற்பகத்தின்
கைகண்ட பத்திரம்ஆம் காரணம்ஆர் ஔடதத்தால்
பொய்கண்ட வெம்பிணிதான் போய்க்கழிய இன்புற்றார். 30

*420. பரிகாரம் – சிகிச்சை. மிக்கு உற்று உளத்தில். நீண்டு உந்தும்.*

*421. மை கார் தோய் – கரிய மேகங்கள் படிகின்ற. மான்மியம் – பெருமை. அன்னோன் – திருமலை நாயக்கர். விண்டனன் – கூறியருளினார்.*

*422. ஆர்ந்த – நிறைந்த. கனவில் கண்ட உடனே நோய் நீங்கினவனைப் போல மகிழ்ந்தான் என்றவாறு. எய்ப்பு அறு – குறைவற்ற.*

*423. விரிசனனம் – பெருகுகின்ற பிறவிகள், வினைத்தொகை. கரிசனம் – பரிவு. ஓதும் சரதம் – கூறிய உண்மை. மெய்ப்பரிசனர் – மெய்க் காவலர், அணுக்கப்பணியாளர்.*

*424. மை கண்ட – மேகம் போன்ற. பத்திரம் ஆம் – இலைகள் ஆகிய. காரணம் ஆர் – திருமாலின் அருள் செயல்புரிய ஒரு கருவியாக அமைந்த.*

425. காரை வனப்பதிகக் காரணமாம் மேனியிற்கொள்
சீரை உடைய திருவரங்க நாதன்அமர்
காரை வனப்பதியைக் காணும்மிகும் காதலினால்
வீரை நிகர்சேனை வெள்ளமுடன் மேவினனே. 31

426. ஓவியம்போன் றுற்ற உடற்கும்,அதன் உள்ஓங்கும்
ஆவி தனக்கும், அகலாப் பிணிகளுக்கும்
மேவியபேர் ஒளடதமாய் வீற்றிருந்து தான்வலிந்து
கூவி அருள்புரிவான் கோயிலைக்கண் டின்புற்றான். 32

427. வீழ்ந்தான்; எழுந்தான்; விழிநீர் பொழிந்துவலம்
சூழ்ந்தான்; அருமைத் துதிப்புகன்றான்; நேர்நின்று
தாழ்ந்தான்; பரவசம்மேல் தாங்கினான்; ஓங்கிமிக
வாழ்ந்தான்,பே ரின்பம்இசை வாரிஉரு ஆகினான். 33.

428 தீர்த்தம் பலவினுமே சென்றுமுழுக் காடி,உளம்
ஈர்த்தம் பகத்தின் இழிஅருவி மெய்நனைப்ப,
மூர்த்தம் தனைப்பணிந்து, மூண்டபெருங் காதலினால்
சீர்த்தம் பகவன் செழும்பூ சனைபுரிந்தான். 34

429. "கணிதந் தனைஅறியாக் கார்க்கருணை அப்பா!
பிணிதந் தனை;கைப் பிடித்துமருந் தாகும்
அணிதந் தனை;நின் மகிமைநிறை கோயிற்
பணிதந் தனை;உனக்கென் பாங்காம் கருணைஎன்னே!

*425. கார்ஐ அதிக வனப்பு – மேகத்தின் அழகைப் போலப் பேரெழிலை. காரணம்ஆம் – அடியார்களின் துன்பத்தை நீக்க வேண்டும் என்னும் காரணத்தால் ஏற்றுக் கொண்டுள்ள. சீரை – சிறப்பை. வீரை – கடல்.*

*426. ஆவி – உயிர். அருள்புரிவான் – அருள்புரிபவன் ஆகிய திருமாலின் வினையாலணையும்பெயர், ஆறன் உருபு விரிக்க.*

*427. பேரின்பம் இசை வாரி – ஆனந்தம் பொருந்திய கடல்.*

*428. ஈர்த்து – இழுக்கப்பட்டு எனச் செயப்பாட்டு வினைப்பொருள். அம்பகத்தின் – கண்களிலிருந்து. மெய் – உடலை. மூர்த்தம் – விக்கிரகம். சீர்த்த அம் பகவன் – பெரும்புகழ்பெற்றுள்ள அழகிய கடவுள், அகரம் தொக்கது.*

*429. கணிதந்தனை அறியா – கணக்கற்ற, தன் பகுதிப்பொருள்விகுதி. கார்க் கருணை – மேகம் போன்ற கிருபை, உவமைத் தொகை. உனக்கு என்பாங்கு ஆம்.*

430. "புண்ணீர் வடிஎன் புலால்உடம்பில் போந்ததுன்பக்
கண்ணீர் வடித்துக் கலங்கினேன் பேரின்பப்
பண்ணீர் வடித்துப் பரவும் படிஅருளால்
விண்ணீர் வடிவென் விழிகாணக் காட்டினையால்

431. "காயேநேர் நெஞ்சம் கனியா கிடப்புரிந்த
தாயே! எனதுபெரும் தந்தையே! சற்குருவே!
நீயேகை மாறெனக்குள் நின்றுபுரி கின்றதன்றி
நாயேன்என் செய்வேன்? நவில்;அரங்க நாயகனே. 37

432. சீருந் தியஇந் திரனார் செயும்பணிகொள்
காருந் தியசோலைக் காரைவனத் தம்மானே!
கூரும் கருணையின்ஆட் கொண்டு சிறியேன்என்
பேரும்கொள் மெய்ப்பணியும் பெற்றிடஉள்க் கொண்டனையோ?"

433. என்னப் பலபலவா றேத்தி,மிகக் கொண்டாடி,
மன்னற் புதப்பெருக்கார் மாண்ஆ லயப்பணிகள்
பன்னத் தகுசிற்பப் பாங்கில் இயற்றுவித்துப்
பொன்னற்பார் கும்பப் புனல்மூழ்கு வித்தானே. 39

434. கானியங்கு பூம்பொழில்சூழ் காரை வனத்தரங்கற்கு
ஆனியங்கள் தோறும்மிகும் அற்புதநை மித்தியம்சால்
மானியங்கள் சால வழங்கிஅவிர் பட்டர்களால்
தானியங்கு பூசைவளம் சாலவிதித் திட்டானே. 40

*430. புண்நீர் – இரத்தம். புலால் – மாமிசம். கலங்கினேன் – கலங்கினவனாகிய எளியேன். வினையாலணையும் பெயர். விண் ஈர் – மேகத்தையும் தன் எழிலால் கவருகின்ற; இனி விண்நீர் எனப்பிரித்து மேகத்தின் தன்மையை உடைய எனினும் ஆம்.*

*431. எனக்குள்நின்று என்றது அந்தர்யாமித்துவத்தை நினைந்து.*

*432. சீர் உந்திய – சிறப்புப் பொருந்திய. கார் உந்திய – மேகங்கள் அடர்ந்த. கூரும் – அதிகரிக்கும்.*

*433. மன் அற்புத பெருக்கு ஆர். பன்னத்தகு – புகழத்தக்க. அற்பு ஆர்பொன் கும்பப் புனல் – பக்தியோடு செய்யப்படும் பொற்குட முழுக்கு, மஹாசம்ப்ரோட்சணம் என்பது வைணவ மரபு.*

*434. கான் இயங்கு – நறுமணம் பரவுகின்ற. ஆனியங்கள்தோறும் – பருவங்கள் தோறும். நைமித்தியம் – சிறப்பு வழிபாடு. பட்டர் – அந்தணர்.*

435. வளமிட்ட ஆலயம்,சால் மண்டபம்சார் கல்லாம்
தளமிட்டும், சொர்க்கவா சல்புரிந்தும், மெய்மங்-
களமிட்ட கோபுரங்கள் கட்டுவித்தும் பல்லோர்
உளமிட்ட சித்திநலம் ஓங்குகின்றார்; அம்மா! 41

436. சங்கெடுத்த கைஅரங்கே சன்காரை மாவனத்தில்
பங்கெடுத்துச் செய்பணிமெய்ப் பாகவதர் யாவர்களும்
இங்கெடுத்த யாக்கையினுள் ஏற்றவிர்வை குந்தபதி
அங்கெடுத்துற் றோங்கியபே ரானந்தம் மிகவாழி. 42

437. மண்படைத்த பேறா வளர்காரை மாவனத்தில்
பண்படைத்த மாசிமகப் பத்துநாள் உற்சவமும்
விண்படைத்தார் போன்று விழிஇமையா தன்பதனால்
கண்படைத்தார் காணும் கதிபடைத்த மாட்சியதே. 43

438. பதிவளர்ந்து போற்றும் பசுவளர்ந்து காணும்
கதிவளர்ந்து மேவக் கதிர்இளமை சான்ற
மதிவளர்ந்தாங் காரை வனத்தரங்கே சன்சந்-
நிதிவளர்ந்தெக் காலமுமே நீடூழி வாழியவே. 44

*435. சால் மண்டபம் – மேன்மை உடைய மண்டபம், வினைத்தொகை. தளம் – தரை. உளம். இட்ட சித்திநலம் – விருப்பம் நிறைவேறுதலாகிய நன்மை. அம்மா – வியப்பிடைச்சொல்.*

*436. சங்கு எடுத்த. பணி செய் என மாறுக. இங்கு எடுத்த – இந்த உலகில் பிறந்த. யாக்கை – உடல். பதி அங்கு – வைகுந்தமாகிய அவ்விடத்தில். வைகுந்தம் கிட்டுதல் திண்ணம் ஆதலால் இறந்தகால வாய்பாட்டில் கூறினார்.*

*437. மாசி மகம் – மாசிமாதம் மகநட்சத்திரத்தில் நடைபெறும் சிறப்பு; தேர்த்திருவிழா, பந்த சேவை, நீர்ச்சேவை முதலிய திருவிழாக்கள்.*

*438. பதி – இந்திரன், திருமலை நாயக்கர் ஆகிய அரசர்கள். போற்றி வளரும் என மாறுக. பசு – உயிர்வர்க்கங்கள். வளர்ந்து – ஞானம் பெற்று. கதிர் – கிரணங்களை உடைய. இளமை சான்ற மதி – பிறை. வளர்ந்து ஆம் – வளர்ந்து முழுநிலவு ஆவதைப் போன்ற*

*சிரவையாதீனம் தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் இயற்றிய*
*காரைமடைத்தலபுராண மூலமும்*
*சிரவையாதீனக் கவிஞர் புலவர். ப.வெ. நாகராஜன் அவர்களின் குறிப்புரையும்*
*முற்றும்.*



அருள்மிகு ஸ்ரீதேவி, பூதேவி உடனுறை
அரங்கநாதர் உற்சவ மூர்த்தி

# காரைமடைப் பிரபந்தத் திரட்டு

மூலம்

சிரவையாதீனம்

**தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்.**

உரையும் பதிப்பும்

சிரவையாதீனக் கவிஞர்

**புலவர் ப.வெ. நாகராஜன் பி.லிட்., விஷாரத்.**

வெளியீடு

**சிரவைக் கௌமார சபை**

**2005**

# பொருளடக்கம்

## 1. காரைமடை
## ஸ்ரீ ரங்கநாத மாலை
### காப்பு

*(எழுசீர் விருத்தம்)*

பணம்பொலி அரவம் பரித்தபார் மிசைஆம்
பல்பதி கட்குயர் பதியா
மணம்பொலி மதுப்பூம் பொங்கர்சூர் காரை-
மடைமரு விரங்கநா தன்மேல்
கணம்பொலி சுவைப்பா மாலைஒன் றன்பின்
கழறரா மானந்த நாதன்
குணம்பொலி மலர்த்தாள் என்மனக் கோயில்
குலவிநின் றருள்பெருந் துணையே.

### நூல்

1. நிறைஅருட் சூல்கார் மேனியும், மதியம்
நிகர்திரு வதனமும், கருணைத்
துறைஇணை விழியும், மந்தகா சமும்,கைத்
துணைப்படைக் கலங்களோ டுள்ளம்
திறைகொள்பூம் பதமும் துலங்க,அன் னையர்மத்-
தியில்புள் வேந்தின்மிசை திகழ்வாய்
நறைமலி காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

2. பாட்டிசைச் சுரும்பர் மதுநுகர் அளக-
பாரம்ஆர் பூமகள் அணிக்கை
மாட்டிசை கமலத் திருவடி அடியேன்
மனத்தகம் பொருத்தி,வை குந்த
வீட்டிசை பத்தி ஞானம்மென் மேலும்
விளங்குறப் புரி;அணிக் கொங்கு
நாட்டிசை காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

3. பெற்றஅன் னையின்பால் அருந்திடா மணிவாய்
பெறும்சட கோபன்ஆ தியர்கள்
சொற்றமெய்த் தமிழ்ப்பா சுரம்புகும் செவியில்,
சுடும்சரம் புகுத்திய முறைபோல்
குற்றமே உடையேன் துதியும்ஏற் றருள்வாய்;
குறைவிலா நிறைவமைந் துறலால்
நற்றவர் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

4. சுவைமிகப் பொலியும் பரிமள அமுதம்
துய்க்குநர் துணைபெற விரும்பும்
துவையல்போல் மகிமைத் தொண்டர்பாத் துய்க்கும்
துணைச்செவிக் கென்கவி பொருந்தும்;
குவைபொலி தேவர் மானிடர் அன்றிக்
குரங்கும்எண் கும்படை கொண்டாய்!
நவையில்சீர்க் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

5. வாசவன் பிரமன் ஆதிய தேவர்
வாழ்வையும் தாழ்வெனக் கருதும்
நேசமெய்த் தொண்டர் தம்உளம் நீங்கா
நின்திரு வடிமலர் மாயா
பாசம்உற் றிடும்என் உளக்கருங் கல்மேல்
பதியுமோ? வதியுமோ? பகராய்;
நாசம்இல் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

6. நினைப்பின்உள் வித்தாம் உன்திரு அடியை
நீங்கியே, துக்கவைப் பாகும்
வினைப்பயன் துய்ப்பான் நரகதன் இடத்தும்,
விரிஅறப் பயன்புசித் திடுவான்
சினைப்பசுந் தருஊண்ப் பாலும்மிக் கோடித்
திரிந்தலுத் தேற்குநின் அருட்கண்
நனைப்பருள்; காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

7. கரைஇலா அண்டத் தொகுதிகள் எவற்றும்
கலந்தஆர் உயிர்கள்பெற் றயில
நிரைபடு போக வகைகணந் தோறும்
நெஞ்சகம் கலந்துநின் றூட்டும்
வரைஇலாக் கருணை வாரிநீ என்னுள்
வாஞ்சைநல் கிடும்தினம் எதுவே?
நரைபொலி காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

8. கலம்புனை மடவார், பொற்குவை, பூமி
காணிஆ திகள்மிக ஈட்டிப்
புலம்புகு போகம் பெற்றவர் இயமன்
புலம்புகுத் திடப்புலம் பிடுவார்;
சலம்,புனை மலர்நின் றனக்கமைத் திடுபூ
சனைசெய்வார் பேறுசாற் றுவதோ?
நலம்புனை காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே

9. மண்ணிசை மனிதப் பிறப்பளித் துனது
மகிமையை மங்கள மதுரப்
பண்ணிசை தமிழ்ப்பா வால்துதித் துவக்கப்
பண்ணிய நீஅடிச் சிறியேன்
கண்ணிசை தரநின் திவ்விய சகுணக்
காட்சிபெற் றருகிடக் கணிப்பாய்;
நண்ணிசைக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

10. காலமோ டுற்ற தேசஇந் திரியக்
காட்சியாய்ப் புறத்தினில் கணம்தோறு
ஆலமே என்ன வருவினை மாயை
அலக்கழித் திடஅகம் தளர்ந்தேன்;
மூலமே என்னும் யானையைக் காத்த
முறையில்எற் புரந்தருள்; வேதம்
நாலதோர் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

11. பொன்றிடும் தேகம் இதை அலங்காரம்
புரிந்து,பேய் நாய்நரி காகம்
தின்றிடும் படிஈ மத்திடா துன்மெய்த்
திருவருட் பேறுபெற் றுலகில்
கொன்றிடும் கொடியார்க் கொன்றுன தன்பர்
கூட்டமொ டுன்திரு வடிசேர்;
நன்றிடு காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

12. கார்வடி வாகம் பெற்றஉன் றனைஉள்
கருதியும், கண்ணில்ஆ னந்த
நீர்வடி வமையப் பெற்றிலாக் கருங்கல்
நேரும்நெஞ் சகத்தினேற் கிந்தப்
பார்வடி வளித்த செய்கைபா கவதர்
பரிகசித் திடக்கொலோ? பகராய்;
நார்வடி காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

13. காமம்உ லோபம் மதம்அழுக் காறு
கள்ளம்மாற் சரியம்ஆ தியசார்
சேமவைப் பாகி, இருண்டஎன் நெஞ்சச்
சிலைக்கண்அம் குருவருள் பொடிச்செந்
தாமரைப் பாதத் தீபம்இட் டுதய
தபனனில் விளக்கள வில்லா
நாமனே! காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

14. பன்னிதி காச புராணம்ஆ கமங்கள்
பலபட மிகவியந் தேத்துன்
சந்நிதி அடைந்து தொழுதுநெக் குருகித்
தவப்பயன் பெறக்கரு துகிலேன்
என்னிதிற் பயன்என் றறிஞர்உள் வெறுத்த
ஏடணை பெறவிழைந் தயர்ந்தேன்;
நன்னிதிக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

15. இசைப்புது மதுரப் பாடல்உன் மீதில்
இயம்பிட என்உளத் திடைநின்று
அசைப்பதும் உன்பே ரருள்அலா தடியேன்
ஆற்றிடும் ஆற்றல்உள் ளேனோ?
திசைப்புர வலர்பா வலர்தண்ணீர்ப் பந்தச்
சேவையர் பூவையர் உள்ள
நசைப்பணிக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

16. இகம்பெறும் இன்பத் துடன்பரத் திசைபேர்
இன்பம்என் ஒருவன்மட் டன்றிச்
சகம்பெறு மவர்முற் றும்பெறப் புரிமெய்த்
தவப்பயன் யான்பொருந் திட,நின்
முகம்பெறு விழிநோக் கருளில்உன் றனையார்
முனிகுவர்! பிரகற்ப திப்பேர்
நகம்பெறு காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

17. பொன்னள வின்றி ஈட்டலே பிறப்பால்
போந்தமெய்ப் பயன்எனக் கருதித்
தன்னலம் தனையும் இழந்தழி வார்நே-
சம்தணந் துன்மகி மைச்சீர்
பன்னலங் களையும் பாடிநெக் குருகும்
பரிசுதந் தாண்டருள்; அபயம்;
நன்னலக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

18. சோகவா ரிதியே காணியாக் கூட்டும்
துர்க்குண வழக்கினால் மனிதத்
தேகமா னதையே நரகெனப் புரிவார்
சேகரம் தணந்தருள் இன்பப்
பாகமார் கரணம் கொண்டபா கவதர்
பணிபுரந் துவக்கும்மாண் பருள்வாய்;
நாகமார் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

19. தேவைநேர்ந் தன்பர் வழிபடல் உள்ளத்
தேவைபெற் றிட;அது போன்று
பூவைநேர் திறம்கொள் நீவிரும் புவது
பூவையோ? அல்லது மலர்ச்செம்
பாவைநேர் இன்பம் பெருக்கிடும் பத்தர்
பாவையோ? மருகிதோய்ந் துற்ற
நாவையோ? காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

20. பூண்அணி பட்டுத் துகில்அணி பிரியில்
புலவணி காட்டும்மங் கையர்தம்
கோண்அணி முகத்தைத் திருத்தியே, திருத்தி
கொள்ளவைத் துயர்இல வதனைப்
பேண்அணிச் சுகம்போல் சுகம்பிரிந் தேன்சீர்
பெறக்கணிப் பாய்;துறக் கமும்மெய்
நாண்அணிக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

21. “பதிஅகத் தினைஎன் பால்”எனப் பத்திப்
பரமபா கவதரைக் கூவி,
மதிஅகத் தினிக்கும் சேவைகாட் டிடுமெய்
மகிமைதோய் திருப்பதி அனைத்தும்
கதிஅகத் தொண்டர் கணத்துடன் கூடிக்
கனிந்துபோற் றிடஅருள் புரிவாய்!
நதிஅகக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

22. கன்றினம் காத்தாய் குன்றின்அம் குடைமேல்
கவித்திது நாளில்உன் அடியேம்
கன்றினம்; சாலக் குன்றினம்; உலகில்
கரைஇலாத் துன்பவெம் பிறப்பில்
ஒன்றினம்; அதன்பின் பொன்றினம்; இவைநின்
உளம்தெரி யாததன் றருள்வாய்;
நன்றினக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

23. பவமிறப் புறுதுன் புற்றயர்ந் திடுபுன்
பாவரைப் பாவரைந் தேத்தித்
தவமிறப் புறுபா வலர்கொள் பாவலர்தம்
சங்கமேற் றங்கிடா தருள்வாய்!
அவமிறப் புறுபேர் அன்பினர் விழியில்
அகத்தினுள் மிகத்தினம் மிளிரும்
நவநிதிக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

24. சினந்தலைக் கொண்ட விடப்பணி, குழவித்
திங்கள்,பாய் திரையணிப் பெருக்கார்
வனந்தலைப் புனைந்த பரசிவன் ஏத்தும்
வரதனே! அனந்தன்மேல் ஞான
அனந்தலை உடையாய்! எனைஇகத் தலையாது
அகண்டஞா னம்பெற அருள்வாய்;
நனந்தலைக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

25. மனைஅலங் கார மனைவிபுத் திரர்பொன்
வயல்முத லாம்பொருள் ஈந்து
வினைவழி இன்பம் ஊட்டிமா தவத்தால்
விவேகம்நல் குபு,வெறுப் பித்துத்
தனைநிகர் பரம பதம்அளித் துயிர்கள்
தமைப்புரந் தருள்தயா நிதியே!
நலைஅலர்க் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

26. பாடவைத் தருள்வாய் உன்அருட் புகழே;
பரமபா கவதர்தோய் அவையில்
கூடவைத் தருள்வாய்; உலகம்முற் றளந்த
கோகன தத்திரு வடிமேல்
சூடவைத் தருள்வாய்; வேண்டுவ அனைத்தும்
சூழவைத் தருள்;சரண் சரணம்;
நாடவைக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

27. தசைவிரி மனிதப் பிறவிகொண் டவிர்மா
தவம்நிறைந் தாதவன் எனவே
திசைவிரி கிரணக் கீர்த்திகொண் டுலகில்
சீவகா ருண்ணியம் மொழிந்து,
வசைவிரி கொடுமை மலிகொடி யோரை
மறலியூர் புகப்புரி விப்பாய்;
நசைவிரி காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

28. புலங்கிளர் காட்சி மெய்என நம்பிப்
புந்தியின் மயக்கமே நிறைந்து,
தலங்கிளர் மாந்தர் மருளமேல் வேடம்
தரித்துப தேசநூல் விரித்து,
விலங்கினில் உலகை ஞானத்தைக் கெடுக்கும்
வீணர்உன் மகிமை தேர்குவரோ?
நலங்கிளர் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

29. தியக்கும்ஜம் புலப்பொய் வேடர்தம் வலையில்
சிக்குறா தெனதுளே தெருட்சி
வயக்குறச் சகுணப் பிரமமெய்க் காட்சி
வாய்த்து,நெக் குருகி,நின் பெருஞ்சீர்
வியக்கும்நற் பிரமா னந்தவே லையில்ஆழ்
வேலைஈந் திட்டனை; வாழி!
நயக்கும்மெய்க் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

30. தொட்டுற விசைந்தார் போலவே மாற்றம்
சொல்லியே, மனத்தினுள் சிறிதும்
கட்டுற வற்ற கபடவஞ் சகரால்
கலங்கும்என் மனத்தினுள் அசையா
உட்டுற வுண்மை விளக்கிஓர் கணமும்
உளம்பிரி யாமல்எந் நாளும்
நட்டுறக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

31. தம்மைஎ மாற்றி மயக்கிடும் மனத்தின்
சமர்த்தடக் கிலர்,மதி கலங்கிப்
பொய்ம்மையால் உலகை மடக்கவாய்ப் பதட்டப்
போலியாம் சமர்த்தெடுத் திசைப்பார்
செம்மைசேர் உலகை உண்டவாய் அளந்த
திருவடி மகிமைகாண் குவரோ?
நம்மைஆள் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

32. காலம்ஓர் மூன்றும் இடம்ஒரு மூன்றும்
கலந்தகா ரியம்கொள்கா ரணத்தின்
சீலம்ஓர் சிறிதும் கண்டிலேன்; ஆசைச்
செறிவிலே வெறிபிடித் துற்ற
தூலம்ஓர் பொருளாக் கருதிஉண் டுடுத்துத்
தூங்கினேன்; உய்வதெவ் வகையே?
ஞாலம்ஓர் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

33. பொன்புவி மாதர் தம்பொருட் டலைந்த
பொழுதினும் இழுதைதோய் குணத்தேன்
என்புகழ் பெருக்க முயன்றபா தகத்தீங்கு
எல்லைஇல் லாததென் றுணர்ந்தேன்;
உன்புகழ் பாடி நெக்குநெக் கென்புள்
உருகிடும் படிவரம் தருவாய்;
நன்புகழ்க் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

34. முறைத்தெளி வற்ற நடக்கையைத் திருத்த
முயன்றிலேன்; வாய்ச்சமர்த் ததனால்,
தறைத்தலை மனிதர் மயங்க,மேல் மறைத்துச்
சாற்றலே வெற்றிஎன் றுவந்தேன்;
நிறைத்தலை அகண்ட பூரணப் பொருள்உன்
நிசஅநு பூதிஎன் றமைவேன்?
கறைத்தடக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

35. புலந்தரும் போகப் புதுமது அருந்திப்
பொலிமதோன் மத்தனாம் எனதுள்
கலந்தலூர் களங்கம் நீங்கும்அ பேதக்
காட்சிகண் டுனதுபா கவதர்
குலந்தழைத் தோங்கப் பெற்றபூ ரணத்தில்
குடிபுகுந் திசைதினம் கூறாய்;
நலந்தரும் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

36. சாகரத் திடைதோய் சீகரம் போலத்
தழைத்தபல் சமயகோ டிகளின்
சேகரத் தன்மை பெற்றதுன் கமலச்
சேவடித் துணைஎனக் கருதேன்
மாகரத் தானை போற்றும்நின் மூல
மந்திர மகிமைஎன் றுணர்வேன்?
நாகரக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

37. நின்றிடத் துயில, எழுந்துவீண் வாதம்
செப்பிட, ஒப்பிடா வழக்கால்
வென்றிடத் துணிந்து பாவபுண் ணியம்தேர்
விவேகம்இல் லேனைநல் வழியில்
சென்றிட, நிலைத்து நின்றிடக் கருணை
செய்துணை உனைஅலா தறியேன்;
நன்றிடக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

38. படித்தனன் உண்மை அறிவிலா நூல்கள்;
பாவமே செயற்கெளி தென்னப்
பிடித்தனன்; நாத்தி கத்துறை மூழ்கிப்
பிதற்றினன் அறிவென; உடம்பும்
தடித்தனன்; தடித்த னத்தினால் பரிகா-
சம்செய்வான் உன்அடி யவர்போல்
நடித்தனன்; காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

39. குற்றம்எத் தனைஆம் கோடிசெய் திடினும்
குவலய வழக்கினும் அன்பில்
பெற்றதாய் உள்ளம் சிறிதும்ஓர் பேதம்
பெற்றிடா தெனில்பெருங் கருணை
முற்றமை தரும்நின் திருவுளக் கருணை
முறையான் உணர்ந்துரைப் பதுவோ?
நற்றவக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

40. போனகம் கரத்தில் வைத்துளான் பசியைப்
பொருட்படுத் தாதுறும் செயல்போல்,
தீனரட் சக!நின் குணாநுபூ திச்சீர்
சிந்தையிற் கருதில்அக் கணத்தே
மானம்ஆர் மாயை தூரமாய்க் காணா
வகைமறைந் தேஒழிந் திடும்ஆல்;
நானகக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

41. சொல்அவா, நின்சீர் கருதவா, கோயில்
சூழ்அவா, தாழ்அவா அறியாக்
கல்அவாம் மனத்தேன் உய்ய,மேல் வழியைக்
காட்டவா; வீட்டவாப் பெருக்கம்
புல்லவா; உன்னைப் புணர்அவா ஞான
பூரணத் தழுந்தவைத் திடவா;
நல்லவா! காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

42. புத்தியிற் பெரியார், பத்தியிற் பெரியார்,
புவிவிண்பா தலம்புகழ் ஞான
சித்தியிற் பெரியார், முத்தியிற் பெரியார்
செயல்எலாம் உன்அருள் துறையின்
மத்தியிற் கலந்த பரிசலால் வேறு
வல்லபம் எவர்க்குள திசைப்பாய்;
நத்திசைக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

43. காயையும் கனியிற் புரிந்துமிக் குருசி
காட்டிடும் கருணைவா ரிதிஉன்
மாயையைக் கடந்துன் திருவருள் மகிமை
மதிக்கும்வல் லபம்எனக் குளதோ?
சேயைஎன் றென்னை அகற்றிடா தெனது
சேயன்என் றுட்கனிந் தேழை
நாயைஆள்; காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

44. கலைப்பிடிப் புணர்வு தெளிந்துப தேசக்
கலைப்பிடிப் புண்மைதேர்ந் ததன்உள்
நிலைப்பிடிப் பாம்உன் திருவருட் சோதி
நிறைஅநு பூதிவாய்ந் துலகில்
சிலைப்பிடிப் பால யம்தொழு தின்ப
சித்தியாட் டியற்றிடப் புரிவாய்;
நலைப்பிடிக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

45. கலைத்துறை அமிழ்தை எறிந்தரா வாய்ப்பற்
கண்ணஆம் விடம்கொடுண் பார்போல்
நிலத்துறை இன்பத் தலத்துறைந் தருளும்
நின்பதம் போற்றல்விட் டவமே
மலத்துறை மாயப் புலத்துறைப் புகுந்து
மயங்குவேன் தனைத்திருப் பிடுவாய்;
நலத்துறைக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

46. காரியல் நீழல் போல்விரைந் தோடும்
காரிய வாழ்க்கையைச் சாலச்
சீரிய தென்னக் காட்டிரு வினைசார்
தியக்கமும் முயக்கமும் போக்கிச்
சூரியன் எனமேல் இசைந்தமெஞ் ஞானச்
சுடர்கொள்நின் அருள்நிலை காட்டாய்;
நாரியல் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

47. மாயமோ கனம்சார் இந்திர சால
மயப்பகற் கனவெனக் காணும்
காயமோ நிலைஇல் லாதெனக் கண்டும்,
கடவுள்உன் பேரருட் திறம்சார்
நேயமோர் சிறிதற் றலைந்தனன்; அறிந்து
நீஇரங் காதுவன் மித்தல்
ஞாயமோ? காரை மடைமருவி ரங்க
நாதனே! சீதர மணியே!

48. காட்டவா அரிமங் கையர்அவா ஒழிந்த
கற்பமை மாதவர் சிந்தைத்
தேட்டவா வடிவம் கொண்டநின் அருளில்
திளைத்தவா அற்றவர் விரும்பும்
வீட்டவா அடியேற் களித்திடத் ததியில்
விரைந்துவந் துன்புகழ்ச் சிறப்பை
நாட்டவா; காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

49. மாதவப் பெருக்கம் மிக்கவர் வேடம்
மருவிமேற் புறத்தில்,உட் புறத்தில்
பேதபுத் தியையே கொண்டு,வீண் கலகம்
பெருக்கி,உள் குழப்பி,யா வரையும்
போதவத் தொழிக்கப் புரிந்துளே மகிழ்ச்சி
பூக்கும்வண் டரின்உற வொழிப்பாய்;
நாதமார் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

50. களங்கம் உற்றகா ரணத்தைத்
திருட்டுறு செய்கையால் மூடிச்
சத்தம்மேற் காட்டி, அறிஞர்நெஞ் சகத்தில்
சஞ்சலக் கவலைமிக் கூட்டும்
பித்தம்மேற் கொண்டு, பாவம்வெம் பழிதோய்
பேயரைத் திருத்துமா றருள்வாய்;
நத்தமேற் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

51. தொட்டுவிட் டிரதம் சொட்டுவிட் டிசைதீம்
சுவைக்கனி போன்றடி யவருள்
கட்டுவிட் டினிமை கமழ்ந்தமெஞ் ஞானக்
கவிகரை இன்றிமேற் பாயும்;
விட்டுவிட் டலையும் என்அனார் அகத்துள்
மிக்கவன் காய்என மேவும்;
நட்டுசீர்க் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

52. ஒடுக்கிலேன் மனத்தை உள்ளொளிக் குள்ளே;
உற்றஞா னானந்தத் தேனை
மடுக்கிலேன்; விம்மி விம்மிஇன் பக்கண்
மழைபொழிந் துன்புகழ்ப் பாடல்
தொடுக்கிலேன்; புவிமேல் சூறையூ டுற்ற
துரும்பெனச் சுழன்றும்உள் கருதி
நடுக்கிலேன்; காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

53. எல்லைதோய் கல்லில் படைக்கலம் ஆகும்
இரும்பினில் இழிந்து,வன் பாவத்
தொல்லையே பெருக்கி, நல்லவர் தமையும்
துன்புறுத் திடும்மனப் பகையைக்
கல்லைமுன் பெண்ணாப் புரிதல்போல் தொண்டர்
கணம்பொருந் தன்புறக் கணிப்பாய்
நல்லைதோய் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

54. எண்குணம் பெற்ற தனித்தலை மைப்பேர்
இறைவனின் திருவடி அகத்தில்
எண்குணம் பெற்ற பேர்க்கிக பரத்தில்
எய்தரும் பேறுமற் றெதுவே?
மண்குணம் பெற்ற தொண்டர்தாள் பணிந்து
மகிமைமிக் கமைந்திடும் மறுகார்
நண்குணக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

55. எம்மதத் தினர்க்கும் தாரகம் ஆம்உன்
இயல்அருள் சத்திமாண் புணரார்
தம்மதம் மேல்என் றிகன்றுவா திட்டுத்
தவத்தைவிட் டவத்தையே புரிவார்;
சம்மதம் எனக்குச் சண்மதப் பிரிவாய்த்
தழைத்தமற் றையவும்என் பவர்தோய்
நம்மதக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

56. எளியவர் ஆவோர் தருமநல் வாழ்க்கை
இழந்து,வல் அரக்கர்ஆ யினர்கள்
களிமிகக் கொடும்பா தகம்நிலை நாட்டும்
கலிவழக் கறஅருள் புரிவாய்;
தெளிபுனல் தரங்க நிரைபொலி தடத்தில்
திருமகள் குலவும்ஆ லயம்போல்
நளினம்ஆர் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

57. சமயநிச் சயமும் சமரச விவேகத்
தன்மையும் அதீதநன் னிலையும்
அமலம்ஆர் உளம்தோய் தொண்டர்குற் றேவல்
ஆற்றும்மா தவச்சிறப் பருள்வாய்;
விமலனே நம!நா ராயணா நம!கோ-
விந்தனே நம!நர கரியே
நம!என்பார் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

58. புண்ணிடும் உலகக் கலகவாழ் வொழித்துன்
புனிதமெய்ப் புகழ்களே துதிக்க
எண்ணிடும் அடியேன் மனம்கொள்சங் கற்பம்
எந்தநாள் முற்றுறப் புரிவாய்?
மண்ணிடும் நெற்றி பெற்றவர் நீறு
வாய்ந்தமெய் யினர்அபே தமுடன்
நண்ணிடு காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

59. காடணை தரவே கருதி,மூ வாசைக்
காற்றினில் சுழன்றதல் லால்,மெய்
வீடணை தர,நின் தாள்துணை கருதா
வினையனைத் திருத்திஆட் கொள்வாய்;
கோடணை பெறக்கோ விந்தப ராக்குக்
கோவிந்தா எனும்ஒலி துறக்க
நாடணை காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

60. வினைவழி உடலுக் கமைதுயர்ப் போகம்
விரும்பினேன்; சுகம்வலிந் தருள்உன்
நினைவழிந் தலைந்தேன்; பிழைபொறுத் தருள்மெய்ந்
நிலையில்வைத் தருள்கடன் உனதே;
முனைவழி அடிமைப் பத்திதோய் தண்ணீர்ச்
சேவையர் ஆட்டயர்ந் தெங்கும்
நனைவழிக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

61. மனிதநே கந்தோ யருமையும் உனது
வரம்பிலாப் பெருமையும் பத்திக்
கனிவினா லெய்துஞ் சுகத்தையு மடியேன்
கண்டமை தரக்கடைக் கணிப்பாய்
புனிதமார் பூமிதேவி நின்னீர்மெய்
புணர்ந்திடச் சேவையர் செயால்
நனிகுளிர் காரை மடைடரு விரங்க
நாதனே! சீதர மணியே!

62. கைம்மலர் உச்சி குவித்தெலும் புள்ளம்
கரைந்து,கண் ணீர்மழை பொழிந்து,
விம்மகத் தன்பு பொங்கி,என் போதம்
விழுங்கிடத் திருவருள் புரிவாய்;
செம்மழற் பந்தச் சேவையர் சோதித்
திரள்மய மானவை குந்தம்
நம்மதென் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

63. கன்மணம் கூட்டுன் பதம்நினைத் திடில்என்
கருத்தினுள் மணக்கும்,தோத் திரிக்கில்
சொன்மணம் கூட்டும்; வணங்கில்என் மெய்யில்
சூழ்மணம் கூட்டிடும் அன்றோ?
பொன்மணம் கூட்டும் திருவிழா மகத்தில்
புகுந்துகண் டோர்விழி விருந்தாம்
நன்மணக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

64. பன்மயம் பற்றித் தன்மயம் காட்டாப்
படிகம்நேர் மனத்தில்உன் மகிமைச்
சின்மயம் கண்ட தன்மயம் ஆகித்
தீர்ந்தொழிந் திடும்படி செய்வாய்;
பொன்மயத் தொண்டர் நெஞ்சகம் கவர்ந்து,
புகுந்து,நீங் காதுநின் றிசையும்
நன்மயக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

65. கெடுமுடி வுடைய உடற்சிறைப் பைக்குள்
கிலேசமே பெருக்கி,நொந் தயர்வேன்
படுமுடிச் சகச மலம்அறப் போக்கிப்
பரமஆ னந்தவீ டருள்வாய்;
கொடுமுடித் தகைதோய் அரம்பையங் கனிவான்
கொள்அரம் பையின்கனி வாய்ப்பால்
நடுமுடிக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

66. எங்கிருந் திங்கு வந்தனை? இங்ஙன்
எவ்வித முயற்சிஉற் றாய்?மேல்
இங்கிருந் தெங்கு போகஉத் தேசம்
எய்தினை? எனில்விடை அறியேன்;
தெங்கிருங் குரும்பை சுவர்க்கநாட் டிசையும்
தெரிவையர் சுவர்க்கநீர் நாடி
நங்கிருங் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

67. ஓடியும் திரிந்தும் தேடியும் எந்த
உலகினும் காண்பரி துன்னைக்
கூடிய பெரியோர் தம்அகத் துனது
கோலம்அற் றொருபொருள் அரிதே;
தேடிவந் தன்பில் தனைத்தெரி சிப்பார்
திரள்களை வைகுந்த மான
நாடிசை காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

68. மர்க்கட மான தன்மைபெற் றமைஎன்
மனத்தைமுன் நாள்பணி கொளல்போல்
துர்க்கதி போக்கி நற்கதி இன்பத்
துறையின்மூழ் கிடக்கடைக் கணிப்பாய்;
சர்க்கரை வரையைக் கணத்தில்நீர் ஆக்கிச்
சாட்சியில் காட்டியே, பொருந்து
நர்க்கரை காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

69. கானலை நீராக் கருதுபு, புசிக்கக்
காதல்உட் கொண்டு,நா வறக்கும்
மானனை யேற்கு மெய்யுணர் வளிப்பாய்;
மற்றொரு கதிஇகத் தறியேன்;
வானம்ஆர் காம தேனுவில் சீர்த்தி
வாய்ந்தகா ராம்பசு வின்பால்
நானமார் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

70. நிலமிசை உயிர்போல் கருதியே போற்றும்
நேயமைந் தரும்பிதுர் பொருட்டுத்
திலமிசை நீர்பெய் தேஇரு விழிநீர்
சிந்திடல் அன்றிஎன் செய்வார்?
சலமிசை குளத்தை நிலமிசை தரவும்
தரையினைக் குளம்என வும்செய்
நலமிசை காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

71. புகைமணத் துடனே முகைஇதழ் அவிழ்கள்ப்
பூமணம் கூட்டுகுந் தளத்தார்
தகைமண வகைச்சம் பிரமபாக் கியமும்
தருவதுன் தரிசனம் அலவோ?
பகைவிரி அசுரர்க் காக்கமிக் கிசைவிண்
பார்த்தணிச் சிகரியின் கலசம்
நகைபுரி காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

72. தாயில்ஆ தரித்துத் தொண்டர்கட் கிருமைச்
சாதனம் தந்தருள் பவன்நீ
காயில்,ஆ தரிப்பார் பூமிபா தலம்சொர்க்
கத்தினில் கருதிடின் உளரோ?
சேயில்ஆம் அண்டர் திரள்அதி சயிக்கும்
திப்பியச் சிறப்பமை காமர்
ஞாயில்ஆர் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

73. பாவலர், உண்மை மாதவர், ஆட்சிப்
பார்த்திபர் நிறைஅவை தனில்உன்
தேவலர் மாட்சித் திறம்உப தேசம்
செய்யும்மாண் பெனக்கருள் புரிவாய்;
மாவர சத்தி அசோகுகா யாவில் -
வம்கடம் பாத்திதெங் கீந்து
நாவலார் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

74. தீபகம் போன்றிவ் உலகில்எத் திசையும்
சென்றுசென் றுற்றமாந் தர்களின்
சோபகம் பலைமுற் றொழித்து,நின் னடிமெய்த்
தொண்டராச் செயஅருள் புரிவாய்;
பாபகன் மப்பேர் இருள்அற, ஞான
பானுவாய் அன்பர்தம் முனம்தோய்
ஞாபகக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

75. வம்பிடு மலர்ப்பூ அம்பிடும் காமன்
வல்லபச் சமர்த்திறம் அதனால்
சும்பிடு மனத்தில் உன்அருள் ஞானச்
சொம்பிடும் படிஉளம் பரிவாய்;
கும்பிடும் படிதொண் டரைத்தன்பால் கொண்டுள்க்
கும்பிடும் படிஉவந் தவரை
நம்பிடும் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

76. சந்தவண் ணங்கள், கலம்பகம், பிள்ளைத்
தமிழ்,உலாக் கோவை,நீள் பரணி
எந்தமெய்ப் பிரபந் தங்களும் எழுதில்
இசைத்துனைப் போற்றவைத் திடுவாய்;
கந்தமிக் குலகம் அளந்தநின் திருத்தாள்
கலந்திசை திசைஎலாம் விழுங்கும்
நந்தனக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

77. ஆரணம் அங்கம் ஆகமம் புராணம்
ஆதிய கலைஅறி வெல்லாம்
பூரணம் பெறஎன் உளம்குடி புகுதப்
பொன்னடி முடிமிசை புனைவாய்;
காரண சச்சி தானந்த மயநிட்
களசக ளங்களாக் கவின்ற
நாரண! காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

78. தடைஅற யானை புகும்இடம் எல்லாம்
தான்வழி யாய்அமைந் திடல்போல்
குடைமலை கொண்டாய்; உன்அடி யேற்கும்
குறைவிலா நிறைமதி அருள்வாய்;
படைபொலி காலாள், இரதமொ டியானை,
பரிஇடை அறமறு கெங்கும்
நடைபொலி காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

79. பரலைஒத் துறுத்தும் இவ்வுல கினையே
பரசுகம் என்று,நின் பத்தர்
நிரலைவிட் டகன்ற மனத்தினை அடியேன்
நிலைநிறுத் திடற்குவல் லேனோ?
வரலைநின் அருள்இன் னமும்என அன்பால்
வணங்கும்அன் பினர்துதி ஓதை
நரலைநேர் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

80. கொட்பமை தருமைக் கட்படை மாதர்
கோலம்உள் கருதிநெக் குருகாத்
திட்பமா தவமெய்ப் பயன்அளித் தென்னைத்
தேற்றடைக் கலம்உனக் கடியேன்;
நுட்பமிக் கமைசித் திரத்திரள் இரதம்
நோக்குவார் விழிமனத் துவப்ப
நட்பமை காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

81. காணுமோ எனது கண்கள்உன் சகுணக்
காட்சி?ஓர் கால்சிர மீதில்
பூணுமோ திருத்தாள் மலரை?நெஞ் சுருகிப்
புணருமோ? உணருமோ? புகலாய்!
பேணும்மாண் இசைதொண் டடியவர் திரளும்,
பெருகொலித் தெழிப்பும்சா கரமும்
நாணும்மாண் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

82. சாயகம் சிதறிப் பைங்கிளிப் பரிமேல்
சார்மத வேள்இசை காமத்
தீயகம் புகுதா துனதுமெஞ் ஞானத்
திருவடி உளம்பதித் திடுவாய்!
சேயமெய்க் கொங்கு நாட்டினுள் சிறந்த
திருப்பதி களில்உயர்ந் தோங்கும்
நாயகக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

83. கோடகச் சித்தி வல்லபம் புவியில்
குயிற்றி,நாத் திகத்துறை யோரும்
நீடகப் பத்தி நலம்சிறந் தோங்கி
நெஞ்சகம் குளிரஎன் றிசைப்பாய்?
ஆடகத் தணிசால் பாடகத் தாளார்
அபிநயப் பெருக்கமை நிபுண
நாடகக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

84. கொல்விதிக் கொடியர் சீவகா ருணியக்
கொள்கையில் நிலைத்து,மெய்த் தொண்டர்.
செல்விதி பற்றி நிற்கநின் கருணைத்
திருவுளத் தெண்ணில்முற் றாதோ?
வில்விதிர்த் தவிரும் நவமணி இருளை
விழுங்கிராப் பகல்சமம் புரியும்
நல்விதிக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே! 84

85. என்கடன் என்ன யான்புரி நன்மை
இனம்எலாம் உய்த்துநன் குணரில்
உன்கரு ணையதா கும்;பவத் தொழில்கட்கு
ஓதிட ஓர்வழி காணேன்
மின்கதிர்க் கோயில் விளக்கினம் சேடன்
மீமிசைப் பணாடவி மணியில்
நன்கவிர் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

86. சாதக திசையில் புரிதரு செயலும்,
சாத்தியம் பெற்றிசை ஆட்டும்
மேதக வடியேன் தெரிதர, உளத்தின்-
மிசைமயக் கற,விளக் கிடுவாய்;
வேதகம் புரி,நல் போதக வேத
விற்பனர் அற்புத கீத
நாதமெய்க் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

87. குறைவிலா நிறைவாய்ச் சராசரம் முழுவதும்
கோத்தநின் பூத்தபே ரருள்மெய்த்
துறையிலே படிந்த தொண்டருள் பொலிசிற்-
சுக அநு பூதிஈந் தருள்வாய்;
அறைபடு சந்தம் கார்அகில் புகைதிக்கு
அனைத்தினும் கலந்துவிண் பாலும்
நறைகமழ் காரை மடைமரு விரங்க
நாதனே சீதர மணியே

88. எற்பணி முற்றும் கரைந்துநெக் குருக,
இயற்றும்நின் சகுணமங் களமெய்ப்
பொற்பணி சற்றும் விலகுறா தடியேன்
புந்தியம் கோயில்கொண் டருள்வாய்;
சொற்பணி அகம்தோய் கற்பணி கோயில்
சூழ்பணி தாழ்பணி அன்பர்
நற்பணிக் காரை மடைமரு விரங்க
நாதனே சீதர மணியே

89. ஆவொலி கேட்ட கன்றும்அங் கதன்வாய்
அமைஒலி கேட்டதா யும்போல்,
மேவொலி நீயும் நானும்ஏற் றுவகை
மேல்(த்) துளும் பிடும்தினம் எதுவே?
தேவொலி பதின்மர் பாஒலி கேட்போர்
செவியகம் குளிர்தரும் கண்டை
நாவொலிக் காரை மடைமரு விரங்க
நாதனே சீதர மணியே.

90. எல்குளிர் மதிநேர் ஆழிசங் கேந்தி
என்கர ணம்கரு விகளும்
புல்கும்நாள் என்றென் றேஎதிர் நோக்கும்
புந்தியின் வேட்கைஈந் திடுவாய்;
பில்குபே ரன்பு பொலிதரத் தீர்த்தம்
பிருந்தையாம் வரப்பிர சாதம்
நல்குசீர்க் காரை மடைமரு விரங்க
நாதனே சீதர மணியே

91. கயப்புது மலர்நின் தாள்மலர்க் கிட்டுக்
கைகுவித் தேத்திமெய் யருட்சின்
மயப்புண ரியில்மூழ் கிடப்புரி யாதுள்
வன்மம்உற் றிடல்முறை தானோ?
வியப்புறு மறையோர் இயற்றுபத் திமைநல்
விதிகொள்பூ சனைசெய்சாந் நித்யம்
நயப்புறு காரை மடைமரு விரங்க
நாதனே சீதர மணியே

92. வேள்அணிச் சேனை ஆம்மட மாதர்
விரும்புகுற் றேவல்செய் தவர்தம்
வாள்அணிக் கண்ணால் மயக்குறா துனது
மலர்க்கண்நோக் கமைதர வழங்காய் ;
ஆள்அணிப் பூசை, அருமறைத் துதிகள்,
ஆலயத் திருப்பணி இவைநாள்
நாள்அணிக் காரை மடைமரு விரங்க
நாதனே சீதர மணியே

93. தமர்,மனை, மைந்தர், அழிஇழி வாழ்க்கை
தழைக்கவே வேண்டினன் அமிழ்தைக்
கமர்வழி கவிழ்க்க ஓடுநர் போல்;மெய்க்
கதிவழிப் புகுதும்நாள் எதுவே?
சமர்புரி தருபூங் கணைகொள்சித் தசன்,வே-
தா,நமன் ஆம்பகை கடப்ப
நமர்புகும் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

94. வரப்பிசை அண்டம் தொறும்தொறும் சென்றுன்
மகிமைமுற் றவும்எடுத் திசைத்துப்
பரப்பிசை ஆயி ரம்கதிர் ஞான
பானுவாய் விளங்கிடப் பணிப்பாய்;
சுரப்பிசைந் தமரர் அமுதினை நாதச்
சுகமயம் பெற்றிட ஊட்டும்
நரப்பிசைக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

95. கரகரப் புற்றுக் கபம்அடைந் தாவி
கழியும்முன், கருணைமிக் கமைந்து
சரசரப் புற்றென் விழியெதிர் தோன்றிச்
சகசநன் னிட்டைஈந் தருள்வாய்;
கரசர ணத்தொண் டியற்றடி யவரைக்
காத்திருட் காலன்ஊர் பொருந்தும்
நரகறக் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

96. காட்டம்மேல் இட்டுக் கனலைமேல் இட்டுக்
காட்டவே சாம்பர்ஆம் மெய்வைத்து,
ஆட்டபாட் டங்கள் பெருக்கினேன் உற்ற
அநித்தியம் நித்தியம் காணேன்;
நீட்டம்ஆம் தவம்முன் பவங்களில் புரிந்த
நிலையினர் கருத்துடன் முகம்தோய்
நாட்டம்ஆம் கானர மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

97. கருக்குழி இரத்த மயஉடல் படிந்தாங்-
காரம்ஆம் பேய்பிடித் தின்னல்
பெருக்குடன் பிழைகள் மிகவலித் திடலால்
பேதுற வமைந்துமிக் கயர்ந்தேன்;
வெருக்குரல் பூதம் இடாகினிப் பேயால்
மேவுவே தனைகளை அறவே
நருக்குறு காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

98. குவிமனத் திடைநின் திருவருட் கோலம்
கொண்டுகண் டேத்திடார் அவமே
புவிவலம் புரிந்தும் கடல்அலை நதிதோய்
புனலிடை நனைந்தும்என் பயனே?
கவிவலர் உவப்பில் கழறுகற் பனைசால்
கரைஇல்பா வினம்இசைத் திடினும்
நவிலரும் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

99. அந்தமாம் பிறப்பீ தாக்கிஇவ் வுலகுக்கு
ஆம்பணி பலபுரி வித்துச்
சொந்தம்ஆம் படிநின் தாள்இறு தியினில்
தோய்த்தருள்; அடைக்கலம்; ஆணை;
பந்தம்ஆர் துயரம் பற்றறக் களைந்து
பணிஅடி யாருளே பிரமா-
னந்தம்ஆர் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

100. அடத்துளே உலக விடத்துளே பொருந்தி
அலையும்என் மனத்தினை நிறம்சால்
புடத்துளே இட்ட பொன்னென உன்தாள்ப்
போதுளே திளைத்திடப் புரிவாய்;
தடத்திலே மூழ்கித் தரிசனம் புரிவார் -
தமைஎலாம் தவக்கதி வழியில்
நடத்துசீர்க் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

101. மாப்பயில் உரத்தெம் வரதனே! சரத
வள்ளலே! அண்டம்முற் றளந்த
பூப்பயில் பாதத் துணைஅகம் புறத்தும்
பொருத்திஆள்; கைவிடேல்; அபயம்;
காப்பயில் சிரவைப் பதிவழி அடிமைக்
கந்தசா மிப்பெயர்த் தொண்டன்
நாப்பயில் காரை மடைமரு விரங்க
நாதனே! சீதர மணியே!

*நூற்பயன்*

பரம்தரும் படிஆ ருயிர்க்கெலாம் பொறுமை
பரந்தபூ தேவிபா லகர்ஆம்
நரந்தரும் காரை மடைமரு விரங்க
நாதன்ஆம் சீதர மணிகண்
சுரந்தருள் கருணைப் பெருக்கினால் புனையும்
துதித்தமிழ் மாலைஓ துநர்க்கு
வரம்தரும் சகல பாக்கிய நலங்கள்
வலிந்தளித் திடும்உளம் மகிழ்ந்தே.

## 2. காரைமடை

# சூடிக்கொடுத்த நாச்சியார் பதிகம்

### காப்பு

*(வெண்பா)*

ஆண்டாள்சூ டிக்கொடுத்த அம்மைஎனும் காரணப்பேர்
பூண்டாள்மெய்ப் பத்தி புலமைமிக - நீண்டாள்
துதிப்பதிகத் துக்காம் துணைஅன்ன வள்கட்கு
உதிப்பதிகப் பேர்அருள்ஆ கும்.

### நூல்

*(அறுசீர் விருத்தம்)*

1. துலங்கணிஆர் மணிக்கலன்கள் மிகப்பூட்டிப்
பெரியாழ்வார் தொடுக்கல் ஆகும்
அலங்கல்அணிந் தெம்மானுக் கிசைஅழகுண்-
டோஎனக்கண் ணாடி நோக்கிப்
புலங்களிப்புற் றிசைபத்தி மெஞ்ஞான
மயம்ஆகும் பூவாய்! மெய்ம்மை
நலங்கள்பெற அருள்;காரை மடைவளர்சூ-
டிக்கொடுத்த நாச்சி யாரே!

2. இடம்பம்மிகப் பத்தன்என்று மானிடர்கள்
மயங்கநடித் திதய மீதில்
மடம்படுதுர்ப் புத்திஉளேன் என்னைஉன்மெய்க்
கடைக்கண்ணால் மகிழ்ந்து நோக்கில்
புடம்படுபொன் என்னநெஞ்சம் கரைந்துருகற்கு
ஐயம்உண்டோ? புயங்க மீதில்
நடம்பயில்வான் மகிழ்காரை மடைவளர்சூ-
டிக்கொடுத்த நாச்சி யாரே!

3. பெற்றொருதாய் இன்னம்என்னைத் தன்சுதன்என்-
றேஇனிமை பேசி, இன்பப்
பற்றொருவா முலைப்பால்ஈ யாதருளி-
னால்பரம பதப்பே றீவாய்;
முற்றொருவா விட்டுணுசித் தன்காணத்
துழாய்அடியில் முளைத்துத் தோன்றும்
நற்றொழிற்பா வாய்!காரை மடைவளர்சூ-
டிக்கொடுத்த நாச்சி யாரே!

4. தவித்துலகக் கொடுமாயை கன்மமதால்
மிகவாடிச் சலித்த நெஞ்சைக்
குவித்துலகம் முற்றளந்த திருவடிப்பேர்
அன்பிசையக் கூட்டி ஆள்வாய்;
பவித்திரம்ஆர் தனுர்மாதத் தினில்பாரா-
யணம்செய்திருப் பாவை யார்க்கும்
நவிற்றிடுதா யே!காரை மடைவளர்சூ-
டிக்கொடுத்த நாச்சி யாரே!

5. ஊட்டவந்தாய் எம்பெருமான் திருவிழிக்குப்
பெருவிருந்தாய்; உவந்து நெஞ்சம்
கூட்டவந்தாய்; பூவின்மிசை உதித்தஎம் போல்-
வார்அறியக் குளிர்மெய்ப் பத்தி
காட்டவந்தாய்; திருமொழிஆம் மறையதனால்
படிப்போர்கள் கருத்தில் இன்பம்
நாட்டவந்தாய் நீ;காரை மடைவளர்சூ-
டிக்கொடுத்த நாச்சி யாரே!

6. புவனமொடு போகவகைக் குப்பறிபோய்,
அடிச்சிறியேன் புந்தி உற்ற
கவனமதை உலகளந்த தாள்உண்ட
வாய்க்கண்உறக் கருத்தூ டுன்னாய்;
உவகைபொருந் திடமதுரைப் புரத்தென்னை
உய்த்திடும்என் றுததி போலும்
நவநலப்பாட் டிசைகாரை மடைவளர்சூ-
டிக்கொடுத்த நாச்சி யாரே!

7. கட்டுண்டம் ஆதிஅவ யங்களைஎல்-
லாம்கண்ணன் கரையில் இன்ப
மட்டுண்ட சேவடிக்கே கண்டுண்டா-
னந்தம்உற மலர்க்கண் நோக்காய்;
ஒட்டுண்ட நெஞ்சநெடு மாலைஎல்லாம்
நெடுமாலாம் உருவம் ஆக்கி
நட்டுண்ட கொடி!காரை மடைவளர்கூ-
டிக்கொடுத்த நாச்சி யாரே!

8. சொற்றிருக்கின் இனங்கள்உண ராவாய்மைச்
சிரப்பொருளாத் துலங்கும் மாயன்
பற்றிருக்கும் இனியசுவைப் பாக்கள்என்னுள்
ஊற்றில்இசை பரிசீந் தாள்வாய்;
முற்றிருக்கும் திருஆடிப் பூரம்இசை
சதுர்த்தசியின் முதிர்செவ் வாய்தோய்
நற்றிருக்கு மரி!காரை மடைவளர்கூ-
டிக்கொடுத்த நாச்சி யாரே!

9. ஆனஅடி யார்உளம்உற் றமைந்து,தவ
மாபலிபால் அன்று வாங்கும்
தானஅடி யான்ஈயும் தனுஆதி
பெறஅடையாத் தடைதீர்த் தாள்வாய்;
மோனவடி வே!இன்ப மோட்சவடி-
வே!என்னுள் முளைத்த சோதி
ஞானவடி வே!காரை மடைவளர்கூ-
டிக்கொடுத்த நாச்சி யாரே!

10. பூமலரும் பாமலரும் புனைந்துவழி-
படும்ஆசை பொருந்தி னேற்குக்
கோமலரும் திருவடிசென் னியில்புனைவித்து
ஆட்கொள்ளக் கூட்ட வேண்டும்;
காமர்முதிர் தருதெய்வக் கற்பகப்பூங்
கொம்பே!மெய்க் கனிவுற் றோங்கும்
நாமலர்ப்பா வாய்!காரை மடைவளர்கூ-
டிக்கொடுத்த நாச்சி யாரே!

11. சீலம்மிகும் பத்திஅடி யவர்திரள்கூண்டு
எந்நாளும் தெரிசித் தேத்தும்
ஞாலம்மிகு புகழ்க்காரை மடைவளர்சூ-
டிக்கொடுத்த நாச்சி யாரைக்
கோலம்மலி சிரவைநகர்க் கந்தசா-
மிச்சிறியேன் கூறிப் போற்றும்
பாலனைய துதிஇசைப்பார் கதிஇசைப்பார்
மாதவமெய்ப் பயன்உள் ளாரே!

## 3. காரைமடை

# அரங்கநாதன் திருப்புகழ்

தானதன தானதந்த..... தனதானா

காகம்நரி நாய்பருந்து தீஎருவை யேஅருந்து
காயம்நிலை யாநினைந்து புவிமீதே
காதல்மனை சேயர்என்ற மாயவினை மூடிநொந்து
காலன்வலி யால்சிறந்து தொலையாதே
மேகம்நிக ராய்விளங்கு சோதிமயம் ஆகும்உன்தெய்-
வீகஅருள் மேனிகண்டு கனிவோடே
மேலவர்கள் சேர்அகண்ட ஞானஅநு பூதிகொண்டு
மேவஇது நாள்இரங்கி அருள்வாயே!
பாகநய மாகநன்கு கோதைஅரு ளால்விளம்பு
பாவினொடு பூஅலங்கல் அணிமார்பா!
பாரகம்இ லேகர்தங்கு வான்உலக ராஇனம்கொள்
பாதலம்எ லாம்மணந்த அடியானே!
நாகரிக மாதர்தங்கள் மோகஇரு ளேபடர்ந்து
நான்அவம்உ றாதுவந்த குருநாதா!
நாடிஅடி யார்பொருந்து காரைமடை மீதரங்க
நாதன்என வேசிறந்த பெருமாளே!

### வாழ்த்து

*(எழுசீர் விருத்தம்)*

அணிபொலி காரை மடைநகர் வாழி!
ஆலயம் வாழி!அங் கதில்வாழ்
மணிபொலி அரங்க நாதன்அம் மையர்கள்
வாழி! பூ சனைமுதல் வளங்கள்
பணிபொலி அன்பர் வாழி!வே தியர்வான்
பசுக்குலம் மாதவர் வாழி!
கணிதம்ஆர் நலம்ஆம் பொருள்எலாம் மிகுமங்-
களம்கொடு வாழி!வா ழியவே!

## 4. காரைமடை

# அரங்கநாதர் அடைக்கலப் பதிகம்

(தவத்திரு. கந்தசாமி சுவாமிகளால் தொடங்கப்பெற்ற இப்பதிகம் யாது காரணத்தாலோ நிறைவு எய்தவில்லை. எட்டுப் பாடல்கள் மட்டுமே எழுதப்பட்டுள்ளன. அவை இங்கே தரப்படுகின்றன. - பதிப்பாசிரியர்)

### காப்பு

*(வெண்பா)*

படைக்கலம்தோய் கைஉ டையாய் பத்தர்மலி காரை
மடைக்கலந்தோய்! நின்தாள் மலர்கட்-கடைக்கலம்தோய்
தோத்திரப்பா ஓதத் துணையாகி நின்றுன்அருள்
நேத்திரத்த யாஇனிது நேர்.

### நூல்

*(எழுசீர் விருத்தம்)*

1. நிறைபொலி சூல்கார் மேனியும், மதியம்
நிகர்திரு வதனமும் கருணைத்
துறைஅருள் விழியும் மந்தகா சமும்கைத்
துணைப்படைக் கலங்களும் துலங்கத்
திறைகொள்பூம் பதமும் துலங்கஅன் னையர்மத்-
தியில்புள்வேந் தின்மிசை திகழ்வாய்;
நறைமலை காரை மடைமரு விரங்க
நாத!நின் அடைக்கலம் நானே.

*படைக்கலம் தோய் – ஆயுதங்களை ஏந்திய. காரைமடைக் கலந்தோய் – காரைமடைத் தலத்தில் பொருந்தி இருப்பவரே. நேத்திரத் தயா – கண்களில் வழியும் கருணையை. நேர் – வழங்குவாயாக.*

*பத்தர்மலி என்னும் சீர் தேமாங்கனியாக அலகிடப்பெறாமல், “செய்கை, தர்மம், கல்வி, தன்மை பொன்வில் எனும் இவை போன்ற நேர் நேரும் நிற்கும் இடத்தால் நிரை எனப்படுமே” (அறுவகை இலக்கணம் 239) என்னும் விதிபற்றிக் கூவிளங்காயாக (தர்ம – நிரை) அலகிடப்பட வேண்டும்.*

*1. சூல்கார் – சூலுண்ட மேகம். மதியம் – சந்திரன். வதனமும் – முகமும். மந்தகாசமும் – புன்னகையும். திறைகொள் – வெற்றியை உடைய. பூம்பதம் – அழகிய திருவடி. புள்வேந்தின்மிசை – கருடாழ்வாரின்மேல். நறை மலி – தேன் நிறைந்த, மலர்ச்சோலைகள் மிகுந்த.*

2. மனத்தவிர் சாட்சி தனைமதிக் கலர்தம்
வாயில்வந் தவைமறை மொழியில்
பினத்தவி வேகர் தமைஉற வாகப்
பெற்றதால் உற்றதீங் கொழித்து
கனத்தபேர் அருட்சீர் வாய்ந்தபா கவதர்
கணத்தினுள் கூட்டிஆண் டருள்வாய்;
நனத்தறற் காரை மடைமரு விரங்க
நாத!நின் அடைக்கலம் நானே.

3. வன்மம்ஆர் வினைகள் மாயைசெய் அலைப்பை
மயக்கையும் தம்மதி எனக்கொள்
துன்மதி யினரைத் தணந்து,நின் மகிமைத்
தொண்டருள் கூடி,அங் கவர்தம்
பொன்மலர்ப் பாத தூளிஎன் சிரமேல்
புனைந்துவந் திடஅருள் புரிவாய்;
நன்மகக் காரை மடைமரு விரங்க
நாத!நின் அடைக்கலம் நானே.

*2. மனத்து அவிர் சாட்சி தனை – மனச்சான்றை. மதிக்கலர் தம் – மதிக்காதவர்களின். வாயில் வந்தவை எனக் கூறியதால் உள்ளத்தில் இருந்து வந்த உண்மையான சொற்கள் அல்ல என உணர்த்தப்பெற்றது. மறை மொழியில் – வேத வாக்கைப்போல. பினத்து – பிதற்றுகின்ற. அவிவேகர்தமை – அறிவற்றவர்களை. உற்ற – அடைந்த. தீங்கு ஒழித்து. கனத்த – மிகுந்த. கணத்தினுள் – கூட்டத்தில். நல் நத்து அறல் – நல்ல சங்குகள் உலவுகின்ற நீர்நிலைகளை உடைய.*

*3. வன்மம் ஆர் – உட்பகைபொருந்திய. வினைகள் செய் அலைப்பையும் மாயைசெய் மயக்கையும் என நிரனிறையாகக் கொள்க. தம் மதி – தம்முடைய அறிவுடைமை. துன்மதியினரை – கெட்ட அறிவினரை. தணந்து – நீங்கி. அங்கு – அந்த நிலையில். தூளி – துகள். புனைந்து உவந்திட. நல் மக – சிறந்த மாசிமகத் திருவிழாவினால் பெருமை மிக்க.*

4. பெற்றிடற் கரிதாம் மகிமைமா னிடமெய்ப்
பிறப்பிது கொண்டரு மறைகள்
பற்றிடற் கரிய உன்திருத் துணைத்தாள்
பணிபுரி கின்றிலன்; உலகின்
முற்றிடாப் பாடு கொண்டலைந் திடுவேன்
முறைசெவி ஏற்றருள் புரிவாய்;
நற்றடக் காரை மடைமரு விரங்க
நாத!நின் அடைக்கலம் நானே.

5. வாதம்முன் ஓதும் மூவர்ஆட் சியினுள்
மடங்கிடும் சடம்பல தாங்கிப்
பூதலம் வானம் பாதல உலகம்
புக்கலைந் திட்டது போதும்;
மாதவத் தொண்டர் உளம்கொள்வை குந்த
வான்புகப் புரிந்தருள்; சங்க
நாதம்ஆர் காரை மடைமரு விரங்க
நாத!நின் அடைக்கலம் நானே.

*4. பெற்றிடற்கு அரிது ஆம். அருமறைகள் பற்றிடற்கு அரிய – ஓதி உணர்வதற்கு மிக அரியன ஆகிய வேதங்களும் சென்று எட்ட முடியாதன ஆகிய. "வேத புருடனும் யாது நின்நிலை எனத் தேறலன் பலவாக் கூறினன் என்ப" (சிதம்பரமும்மணிக்கோவை) என்பார் குமரகுருபரர். முற்றிடா பாடு – முடிவு இல்லாத வருத்தம். முறை – விண்ணப்பம். நல் தட – நல்ல நீர்நிலைகளை உடைய.*

*5. மூவர் – வாதம், பித்தம், கபம் ஆகிய மூன்று, தொகைக் குறிப்புப்பெயர். மடங்கிடும் – திரும்பத் திரும்ப ஏற்படும். சடம் – உடல். பூதலம் – நில உலகம். புக்கு அலைந்திட்டது. "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப் பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக் கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய் வல்அசுர ராகி முனிவராய்த் தேவராய்ச் செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள் எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்" (சிவபுராணம்) என விரிவாகக் கூறுவார் மணிவாசகப்பெருமான். வைகுந்தவான்– வான் வைகுந்தம் என மாறுக. சங்கநாதம்– சங்கொலி.*

6. தூரமோ உனக்கும் எனக்கும்?நின் பாதத்
தொண்டனேன் பால்உன துளத்தில்
ஓரமோ? ஏழை நாயினேன் எனக்கிங்கு
உதவெனக் கேட்டல்ஈந் திடற்கோர்
பாரமோ உனக்கிங் குய்த்துணர்ந் திடுகால்
பகரஓர் தடையும்இன் றின்றே;
நாரமோர் காரை மடைமரு விரங்க
நாத! நின் அடைக்கலம் நானே.

7. பத்திசை ஆழ்வார் தம்மலர்த் திருவாய்ப்
பால்எழுந் திடும்அமிழ் தினைநேர்
புத்திசைப் பிரபந் தம்கொடுந் தனையே
புகழ்ந்துநெக் குருகிடப் புரிவாய்;
முத்திசை நகைச்சீ தேவிபூ தேவி
முகம்விழி அகம்மலர் காந்த!
நத்திசைக் காரை மடைமரு விரங்க
நாத!நின் அடைக்கலம் நானே.

*6. தூரமோ—இடைவெளி மிக அதிகமோ, என் உள்ளேயே அந்தர்யாபியாகத் தாங்கள் இருப்பதால் தூரம் இல்லை என்பது கருத்து. ஓரமோ – வஞ்சனையோ, நான் அடிச்சிறியேன், தாங்கள் வேண்டுதல் வேண்டாமை இல்லாதவர், எனவே வஞ்சனைக்கு இடமே இல்லை என்பது குறிப்பு. எனக்க இங்கு உதவு என. உனக்குப் பாரமோ – தேவரீருக்கு அரிய செயலோ, அன்று என்றவாறு. இங்கு உய்த்து உணர்ந்திடுகால். இன்று இன்றே – இரட்டிப்பு வலியுறுத்தலின்பொருட்டு. நாரமோர் – பத்தர்கள் நிறைந்த. நாரத்தோர் எனற்பாலது அத்துக்கெட்டது.*

*7. பத்து இசை – பதின்மர் ஆகிய புகழ்பெற்ற. திருவாய்ப்பால் – புனித வாயினிடத்து. நேர் – போன்ற. புத்து இசை – புதுமையும் சங்கீதச் சிறப்பும் கொண்ட. கொடு உந்தனையே. முத்து இசை நகை – நித்திலங்களைப் போன்ற பற்களை உடைய. முகம் முதலிய மூவிடங்களிலும் எண்ணும்மை. கூட்டுக. காந்த – கணவரே. நத்து இசை – சங்குக் கூட்டங்கள் பொருந்தியுள்ள, நீர்வளம் மிக்க என்பது கருத்து.*

8. பிளவிடும் மனத்தை அன்பணிக் கயிற்றால்
பிணித்தொரு நிலைசெய்தண் டம்எலாம்
அளவிடும் பாத மலர்அகத் தமைத்தே
அழல்இழு தென்னநெக் குருகித்
துளவிடும் பணிகொண் டாயிரம் நாமம்
துதித்திடத் திருவருள் புரிவாய்;
நளவிடும் காரை மடைமரு விரங்க
நாத!நின் அடைக்கலம் நானே.

*பிளவிடும் மனத்தை – ஐம்புலன்களின் வழியாகப் பல்வேறு விஷய சுகத்தில் பிரிவுண்டு ஈடுபடும் உள்ளத்தை. அன்பு அணி கயிற்றால் – பக்தி என்னும் அழகிய வடத்தால். பிணித்து – கட்டி. அண்டம் எலாம் – எல்லாஉலகங்களையும் அளவிட்டது திருவிக்கிரம அவதாரத்தில். அகத்து அமைந்தே. அழல் இழுதுஎன்ன – தீயிடைப்பட்ட நெய்யைப் போல. துளவு இடும் பணி கொண்டு – (திருவடியில்) துளசியால் அருச்சனை புரியும் திருத்தொண்டினை ஏற்று. நளவிடும் – நட்புச்செய்கின்ற.*

*(இதற்குமேல் இருக்க வேண்டிய மூன்று விருத்தங்கள் ஏனோ இயற்றப்பெறவில்லை)*

## 5. குருஇருடிமலைப்
# பொன்னூற்றம்மை பதிகம்
(காரைமடையோடு தொடர்பு உடையது)

### காப்பு
*(கட்டளைக் கலித்துறை)*

போற்றம்மை; எம்கட் புலவிருந்-
தாய்க்கண் பொழிஅருளால்
தேற்றம்மை; ஓங்கும் குருரிடி
வெற்பில் திகழ்ந்துதுயர்
மாற்றம்மை; இவ்வள வென்னா
மகிமைகொள் மாற்றமைபொன்
ஊற்றம்மை; சிற்சுக ஆனந்தத்
தேன்உளத் தூற்றம்மையே.

*போற்றப்படுவதற்குரிய அம்மை என்ற பொருளில் ஆட்சி. கட்புல – கண்ணாகிய புலனிற்கு, இருபெயரொட்டு. மாற்று – இல்லாமல் செய்கின்ற. இவ்வளவு என்னா – இத்தனை எனக் கணக்கிட்டுக் கூற முடியாத. மாற்று அமை – (தங்கத்தின்) தரத்தை உணர்த்தும் அலகு ஆகிய மாற்றுப் பொருந்திய. சித்சுக ஆனந்தத்தேன் – அறிவினால் விளையும் உவகை ஆகிய பேரின்பம் என்னும் தேனை. உளத்து ஊற்று அம்மையே. உள்ளத்தில் பேரானந்தத்தை விளைவிப்பவள் பொன்னூற்று அம்மையே என்றவாறு. ஏகாரம் பிரிநிலை.*

*வாழ்த்து, வணக்கம், பரம்பொருளைக் கூறுதல் (வஸ்துநிர்த்தேசம்) எனக் காப்பு மூவகைப்படும். அவற்றில் இது மூன்றாவதைச் சேர்ந்தது. பொன்னூற்றம்மை எல்லா நலங்களையும் அருள்பவள் என்றதனால் இந்தப் பதிகத்தையும் காத்தருள்வாள் என்பது தானே பெறப்படுகிறது.*

## நூல்

*(அறுசீர் விருத்தம்)*

1. இந்தணி வதனமும், பொற்றொடிஆர்
இணைக்கையும், பட்டுடை இட்டிடையும்
தந்தணி மருங்குலும், பேர்அருள்சீர்த்
தாள்களும், விழிகளும் தழைக்க,என்நேர்
வந்தணி பொலிநலம் பற்பலவும்
வழங்கி,என் செயல்உன தாப்புரிவாய்;
கொந்தணி மலர்விரி நந்தனம்சூழ்
குருரிடி மலைப்பொன்னூற் றம்பிகையே.

2. வெறும்மனப் பால்குடித் திங்கடியேன்
வீணில்எய்க் காது,நின் வில்பணிதோய்
உறுதனப் பால்அளித் திம்பர்அலாது
உம்பரும் ஏத்திசை உவந்தருள்வாய்;
நறுமலர்த் தேனுடன் நளிகனிகள்
நல்கிய சாறுமுற் றாறுறழக்
குறுகிசை வளம்மிகப் பொங்கணிசால்
குருரிடி மலைப்பொன்னூற் றம்பிகையே.

*1. இந்து அணி – சந்திரனின் அழகினைப் பெற்ற. வதனமும் – முகமும். பொற்றொடி – பொன் வளையல்கள். பட்டு உடை. இட்டு – அணிந்ததால். இடையும் – வருந்துகின்ற. தந்து அணி மருங்குலும் – நூல் இழையைப் போன்று மெலிதான அழகிய இடுப்பும். வந்து – எழுந்தருளி. அணி பொலி – அழகு விளங்குகின்ற. "எனதுரை தனதுரை ஆக" (தேவாரம் 1–76–7) என்பதனைப் போன்றது இது. கொந்து அணி மலர் – கொத்துக் கொத்துக்களாக மலர்ந்துள்ள அழகிய புஷ்பங்கள். நந்தனம் – சோலை.*

*2. மனப்பால் குடித்து – உண்மைக்குப் புறம்பான கற்பனைக் கனவுகளில் மிதந்து. இங்கு அடியேன். எய்க்காது – மெலியாமல். வில் பணி – ஒளி வீசுகின்ற அணிகலன்கள். இம்பர் அலாது – இவ்வுலகத்தினர் மட்டும் அன்றி. உம்பரும் – வானுலகத்தினரும். ஏத்து இசை – போற்றுகின்ற புகழை. நளி – மிகுதியான. சாறு – இரசம். ஆறு உறழ – நதியை நிகர்க்க. குறுகு – வந்தடைகின்ற. இசை – இனிமை மிக்க. அணி – அழகு. குருகு இசை மிகப் பொங்கு என்றது சொல் முரண்.*

3. பாலன்என் றிசைஎனைத் தூலம்மட்டாம்
பாலன்எ னாமல்எப் பாலனொடப்
பாலன்எ னப்பொலி யச்செய்அருட்
பார்வைஎன் மீதுப தித்தருள்வாய்;
நீலமு கிற்கணக் கஞ்சுகமேல்
நிலவிமின் நீள்பொன்நி கர்த்தரிதன்
கோலம ணித்திரு மேனிநிகர்
குருரிடி மலைப்பொன்னூற் றம்பிகையே!

4. பாட்டிசை ஆசைப டைத்திடல்போல்
பகர்ந்திடும் வண்ணம்ப லிக்கும்விளை-
யாட்டிசை ஆசையும் பெற்றஎனக்கு
அமையஎந் நாளில்வந் தருள்புரிவாய்?
நாட்டிசை மிக்கிசை கொங்குவள
நாட்டிசை வாய்அவிர் நலங்கள்எலாம்
கூட்டிசை வாய்ந்துவிண் மாட்டிசைசீர்க்
குருரிடி மலைப்பொன்னூற் றம்பிகையே!

*3. பாலன் என்று – மகன் என. இசை – பொருந்துகின்ற. தூலம் மட்டு ஆம் – உடல் அளவில் மாத்திரம் ஆன. எப்பாலனொடு அப்பாலன் என – எந்த மைந்தர்களுக்கும் அப்பாற்பட்டவன் என்று. செய் அருட்பார்வை – பண்ணுகின்ற கருணை நோக்கம், வினைத்தொகை. முகில்கண கஞ்சுகமேல் –மேகக்கூட்டங்களாகிய மேலாடையின்மீது. மின் – மின்னல். பொன் நிகர்த்து – திருமகளைப் போல விளங்கி. அரிதன் – திருமாலினுடைய மலையின் மீது நீலமேகங்கள் படர்ந்து மின்னல் ஒளிருகின்றபோது திருமகளை மார்பில் அணிந்த திருமாலைப் போல மலை காட்சியளிக்கிறது.*

*4. பாட்டு இசை ஆசை – கவிதைகளை இயற்றுவதற்கான விருப்பம். விளையாட்டு – (வாக்குப்பலிதம் ஆகிய) அருளாடல். நாட்டு இசை மிக்கு இசை –நிறுவப்பெறுகின்ற புகழ் மிகுதியாகப் பொருந்தியுள்ள. இசைவாய் – இணக்கமாக. கூட்டு இசை – சேர்க்கின்ற பெருமை. விண்மாட்டு இசை சீர் – வானுலகில் சொல்லப்படுகின்ற சிறப்புடைய.*

5. மாற்றிசைந் தோடிடும் எனமனமா
மாயையை நின்அருள் மாட்சிமெய்ப்பேர்
ஏற்றிசைந் துருகி,மிக் கொளிபெறச் செய்து,
எவர்களும் விரும்பிட இசைத்தருள்வாய்;
நாற்றிசை மாந்தர்தம் பாவம்முற்றும்
நாடிவந் தாடும்முன் தீர்த்துறுதென்
கூற்றிசை யாதமை தீர்த்தம்உறும்
குருரிடி மலைப்பொன்னூற் றம்பிகையே.

*மாற்று இசைந்து – (அருளுக்கு) மாறான நிலையில் ஈடுபட்டு. மா – பெரிய. பேர் ஏற்று – திருநாமத்தை உள்ளத்தே கொண்டு, உபதேசமாகப்பெற்று எனினும் ஆம். நால் திசை – நான்கு திக்குகளிலும் உள்ள. ஆடும் முன் – நீராடுவதற்கு முன்பே. தீர்த்துஉறு தீர்த்தம், அமை தீர்த்தம் எனத் தனித்தனி இயையும். தென் கூற்று – தெற்குத் திசைக்குரிய இயமன். இசையாது – வந்து சேராமல், மரணமிலாப் பெருவாழ்வளிக்கும் என்றபடி.*

6. அடிமைஎன் றுற்றனன் உன்புடையான்
ஆற்றிடும் பாவங்கள் புண்ணியங்கள்
படிவுறும் புகழ்இகழ் துக்கசுகம்
பலவும்நிற் கர்ப்பணம் பண்ணியதால்
முடியஇங் கொருசெயல் எனக்கிலதாம்
முறைஉணர்ந் தேன்எனை முற்றஉன்தாள்
குடிபெற ஏற்றருள்; அடைக்கலம்யான்;
குருரிடி மலைப்பொன்னூற் றம்பிகையே!

*உன்புடை அடிமை என்று உற்றனன்யான். யான் ஆற்றிடும் என இடைநிலை விளக்கு. படிவு உறும் – வந்து சேருகின்ற. நிற்கு அர்ப்பணம். எனக்கு இலது ஆம் முறை உணர்ந்தேன். உணர்ந்தேன் ஆகிய எனை. முற்ற – முழுவதுமாக. தாள் – திருவடிகளினிடத்து.*

*இது பிரபக்தி நெறி ஆகிய சரணாகதியைக் காட்டுகின்ற திருப்பாடல். "தன்செயல் எண்ணித் தவிப்பது தீர்ந்திங்கு நின்செயல் செய்து நிறைவுபெறும் வணம் தின்னைச் சரண் அடைந்தேன்" என்பார் மகாகவி பாரதி.*

7. சீர்ப்பெருக் குற்றிசை நின்புடைதோய்
தீர்த்தம்ஒப் பாகிஎன் சிந்தையிடை
நார்ப்பெருக் கெய்தவும் விம்மிமிக
நாட்டத்தில் ஆனந்த பாட்பம்எனும்
நீர்ப்பெருக் கெய்திஎன் அங்கம்எலாம்
நிறைமுழுக் காட்டல்செய்; நேயஅருட்
கூர்ப்பெருக் கெய்துகட் கோகிலமே
குருரிடி மலைப்பொன்னூற் றம்பிகையே!

8. தவன்என யாவர்களும்
பேசவும் ஏசவும் பெற்றவமே
மத்தணை தயிர்எனக் கலக்கும்உயிர்
மலப்பகை யான்மிக அலக்கண்உற்றேன்
சித்தணைந் திவ்வுல கத்தில்இசை
சிலைஎழுத் தாம்எனத் தீட்டினர்தம்
கொத்தணை பேர்அருள் மாட்சிநல்காய்
குருரிடி மலைப்பொன்னூற் றம்பிகையே.

*7. சீர்ப்பெருக்கு சிறப்புக்களின் மிகுதி. நின்புடைதோய் – உன் அருகே அமைந்துள்ள. தீர்த்தம் – பொன்னூற்று பேச்சுவழக்கில் பொன்னூத்து என வழங்கப்படுகிறது. நார்ப் பெருக்கு – அன்பின் மிகுதி. நாட்டத்தில் – கண்களில். ஆனந்த பாட்பம் – உவகைக் கண்ணீர். அங்கம் – உடல். கூர் அருட்பெருக்கு என மாறுக, நுட்பமான அருளின் மிகுதி. கட்கோகிலமே – கண்களை உடைய குயில் போன்றவரே.*

*8. பித்து அணைந்தவன் – பைத்தியக்காரன். பெற்று அவமே. மத்து அணை தயிர் என – மத்தினால் கடையப்படும் தயிரைப்போல. இதே கருத்தை இவ்வாசிரியர், "கரு மத்தில் தயிரேபோல் கருமத்தில் புரண்டுஉதித்துக் காசினிக்கண் வரும் அத்தம் பெண் பூமிவிழைத்துஅலைக்கும் வருமத்த மதி மத்தம்" (திருப்பேரூர்க்கலம்பகம் 5) என விரிவாக விளக்கியுள்ளார். மலப்பகை – மும்மலங்கள் ஆகிய விரோதிகள். அலக்கண் – துன்பம். சித்து அணைந்து – அருள்சித்து வல்லமை பெற்று. இசை – தம் புகழை. சிலை எழுத்து ஆம் என – கல்லில் வெட்டப்பெற்ற எழுத்தினைப்போல நீண்டநாள் நிலைத்து நிற்கக்கூடியதாக, கொத்து அணை – கூட்டத்தில் சேருகின்ற.*

9. கானிடத் தமைவிலங் கில்கடையாய்க்
கருணைந லம்கரு தாதுயிர்கொன்று
ஊனிடத் தாவல்மிக் குற்றயில்வார்
ஒருங்கிய மன்பதி தோய்நரகந்-
தான்இடம் என்றுணர்ந் துய்ந்திடற்குத்
தக்கதோர் ஆடல்ச கத்தியற்றிக்
கூன்இடர்ப் பாடறுப் பாய்;சரணம்;
குருரிடி மலைப்பொன்னூற் றம்பிகையே!

10. மதித்துவந் தாடுநர் பாவம்அற
மாற்றி,மெய் மாற்றமை புண்ணியநீர்
குதித்திடும் அருவியில் கூவருள்சால்
குருரிடி மலைப்பொன்னூற் றம்பிகையைப்
பதித்துநெஞ் சகத்தினில் சிரவைநகர்ப்
பாலகன் ஆம்கந்த சாமிஅன்பில்
துதித்திடும் பாடல்வல் லார்இருமைச்
சுகங்களும் தோய்குவர் நிச்சயமே.

*9. கான்இடத்து அமை – காட்டில் உள்ள. விலங்கில் – பிராணிகளை விட. ஊனிடத்து ஆவல் – இரட்டுற மொழிதலாக இறைச்சியின் சுவையில் விருப்பம், தன் உடம்பினைப் பெருக்குவதில் ஆர்வம் எனக் கொள்க. "தினற்பொருட்டால் கொல்லாது உலகு எனில்," "தன் ஊன் பெருக்கற்கு" என்னும் இரு குறட்பாக்களும் (256, 251) இங்கு சிந்திக்கத்தக்கன. அயில்வார் – உண்பவர்கள். ஒருங்கு – எல்லோரும். இயமன்பதியாகத் தோய் நரகந்தான் என்க. என்று உணர்ந்து உய்ந்திடற் கு. சகத்து – இவ்வுலகத்தில். கூன் – ஒடுக்குகின்ற எனப் பிறவினைப் பொருளில் ஆட்சி.*

*10. ஆடுநர் – நீராடுவோர். மாற்று அமை – தகுதியை ஏற்படுத்துகின்ற. கூவு – வலிய அழைத்து ஆட்கொள்கின்ற. இருமை – இம்மை மறுமை. நிச்சயமே என்பதில் ஏகாரம் தேற்றம்.*

## பொன்னூற்றம்மைத் திருப்புகழ்

தன்னாத்தன்ன தானன தனதானா

விண்ணூர்க்கண்நி லாவினர் அறியாதாம்
மெய்ந்நூற்செம்மை யாவும்என் உளமீதே
நண்ணூற்றம்வி ராவிடு நிலையேதோய்
நன்னாட்பண்ணு வாய்;ததி; கதிநீயே;
கண்ணூற்றும்வி சாலம்மல் கருளாளே!
கைம்மாற்றெண்ணி டாமுகில் புரைதாயே!
புண்ணூற்றின்னல் வேர்களை தவமேசேர்
பொன்னூற்றம்மை யாய்அவிர் பெரியாளே!

*விண் ஊர்க்கண் நிலாவினர் – வானுலகில் வாழ்கின்றவர்கள் தேவர்கள். மெய்ந்நூல் செம்மை – நிலையான உண்மையைப் போதிக்கும் தத்துவ நூல்களின் சிறப்பு. நண்ணு ஊற்றம் விராவிடு – சேருகின்றதால் உண்டாகின்ற அறிவுடைமை பொருந்துகின்ற. நல்நாள் பண்ணுவாய் – சுபதினத்தை (விரைவில்) வரப்புரிவாய். ததி – இதுவே தக்க தருணம். கதி – புகலிடம். கண் ஊற்றும் – விழிகள் பொழியும். விசாலம்மல்கு – பெருமை நிறைந்த. முகில் புரை – மேகத்தைப் போன்ற. புண் ஊற்று இன்னல் வேர் – துன்பங்களுக்கு மூலகாரணமாகிய ஆணவமலமாகிய தீமையின் மூலத்தை. களை – நீக்குகின்ற.*

முற்றும்





காரமடைத் திருக்கோயில் முகப்புத் தோற்றம்